உ

கணபதி துணை.

# தாயுமானசுவாமிகள்

அருளிச்செய்த

# திருப்பாடற்றிரட்டு.

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஆறுமுகநாவலரவர்கள்

சிதம்பரசைவப்பிரகாசவித்தியாசாலைத்தருமபரிபாலகர்

விசுவநாதபிள்ளையால்

சென்னபட்டணம்

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

ஒன்பதாம் பதிப்பு.

துர்மதி ௵ மாசிமீ

# நூலினுட்பிரிவகராதி.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# தாயுமானசுவாமிபாடல்.

## திருவருள்விலாசப்பரசிவ வணக்கம்.

### ஆசிரியவிருத்தம்.

அங்கிங் கெனாதபடி யெங்கும் ப்ரகாசமா
யானந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
யகிலாண்ட கோடி யெல்லாந்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மன வாக்கினிற்
றட்டாம னின்றதெது சமயகோ டிகளெலாந்
தந்தெய்வ மெந்தெய்வ மென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது
வெங்கணும் பெருவ ழக்காய்
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா
யென்றைக்கு முள்ள தெதுமேற்
கங்குல்பக லறநின்ற வெல்லையுள தெதுவது
கருத்திற் கிசைந்த ததுவே
கண்டன வெலாமோன வுருவெளிய தாகவுங்
கருதியஞ் சலி செய்குவாம். (க)

ஊரனந் தம்பெற்ற பேரனந் தஞ்சுற்று
முறவனந் தம்வி னையினால்
உடலனந் தஞ்செயும் வினையனந் தங்கருத்
தோவனந் தம்பெற் றபேர்
சீரனந் தஞ்சொர்க்க நரகமு மனந்தநற்
றெய்வமு மனந்த பேதந்
திகழ்கின்ற சமயமு மனந்தமத னான்ஞான
சிற்சத்தி யாலு ணர்ந்து
காரனந் தங்கோடி வருஷித்த தெனவன்பர்
கண்ணும்விண் ணுந்தேக் கவே
கருதரிய வானந்த மழைபொழியு முகிலைநங்
கடவுளைத் துரிய வடிவைப்
பேசானந் தம்பேசி மறையனந் தஞ்சொலும்
பெரியமௌ னத்தின் வைப்பைப்
பேசரு மனந்தபத ஞானவா னந்தமாம்
பெரியபொரு ளைப்ப ணிகுவாம். (உ)

அத்துவித வத்துவைச் சொற்பிரகா சத்தனியை
யருமறைகண் முரச றையவே
அறிவினுக் கறிவாகி யானந்த மயமான
வாதியை யநாதி யேக
தத்துவ சொரூபத்தை மதசம்ம தம்பெறுச்
சாலம்ப ரகித மான
சாசுவத புட்கல நிராலம்ப வாலம்ப
சாந்தபத வ்யோம நிலையை
நித்தநிர் மலசகித நிஷ்ப்ரபஞ் சப்பொருளை
நிர்விஷய சுத்த மான
நிர்விகா ரத்தைத் தடத்தமாய் நின்றொளிர்
நிரஞ்சன நிராம யத்தைச்
சித்தமறி யாதபடி சித்தத்தி னின்றிலகு

திவ்யதே சோம யத்தைச்
சிற்பர வெளிக்குள்வளர் தற்பரம தானபர
தேவதையை யஞ்சலி செய்வாம். (௫)

திருச்சிற்றம்பலம்.

---

# பரிபூரணானந்தம்.

வாசா கயிங்கரிய மன்றியொரு சாதன
மனோவாயு நிற்கும் வண்ணம்
வாலாய மாகவும் பழகியறி யேனுறவு
மார்க்கத்தி னிச்சை போல
நேசானு சாரியாய் விவகரிப் பேனந்த
நினைவையு மறந்த போது
நித்திரைகொள் வேன்றேக நீங்குமென வெண்ணிலோ
நெஞ்சந் துடித்த யருவேன்
பேசாத வானந்த நிட்டைக்கு மறிவிலாப்
பேதைக்கும் வெகுதூ ரமே
பேய்க்குண மறிந்திந்த நாய்க்குமொரு வழிபெரிய
பேரின்ப நிட்டை யருள்வாய்
பாசா டவிக்குளே செல்லா தவர்க்கருள்
பழுத்தொழுகு தேவ தருவே
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந் தமே. (௧)

தெரிவாக வூர்வன நடப்பன பறப்பன
செயற்கொண் டிருப்பன முதற்
றேகங்க ளத்தனையு மோகங்கொள் பௌதிகஞ்
சென்மித்த வாங்கி றக்கும்
விரிவாய பூதங்க ளொன்றோடொன் றாயழியு

மேற்கொண்ட சேட மதுவே
வெறுவெளி நிராலம்ப நிறைசூன்ய முபசாந்த
வேதவே தாந்த ஞானம்
பிரியாத பேரொளி பிறக்கின்ற வருளருட்
பெற்றோர்கள் பெற்ற பெருமை
பிறவாமை யென்றைக்கு மிறவாமை யாய்வந்து
பேசாமை யாகு மௌனவே
பரிவா யெனக்குநீ யறிவிக்க வந்ததே
பரிபாக கால மலவோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந் தமே. (உ)

ஆராயும் வேளையிற் பிரமாதி யாளுலு
ண்மயவொரு செயலு மில்லை
அமைதியொடு பேசாத பெருமைபெறு குணசந்த்ர
ராமென விருந்த பேரும்
நேராக வொருகோப மொருவேளை வரவந்த
நிறைவொன்று மில்லா மலே
கெட்டுயிர்த் துத்தட் டழிந்துளறு வார்வசன
நிர்வாக ரென்ற பேரும்
பூராய மாயொன்று பேசுமிட மொன்றைப்
புலம்புவார் சிவராத் திரிப்
போதுதுயி லோமென்ற விரதியரு மறிதுயிற்
போலேயிருந்து துயில்வார்
பாராதி தனிலுள்ள செயலெலா முடிவிலே
பார்க்கினின் செயலல் லவோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந் தமே. (௩)

அண்டபகி ரண்டமும் மாயா விகாரமே
யம்மாயை யில்லா மையே

ஆமெனவு மறிவுமுண் டப்பாலு மறிகின்ற
வறிவினை யறிந்து பார்க்கின்
அண்டிசை விளக்குமொரு தெய்வவரு ளல்லாம
லில்லையெனு நினைவு முண்டிங்
கியாமென்ன தாத் துரிய நிறைவாகி நிற்பதே
யின்பமென மன்பு முண்டு
கட்டனை யெலாமல்ல வென்றுகண் டேசெய்து
கருவிகர ணங்க ளோயக்
கண்மூடி யொருகண மிருக்கவென் றற்பாழ்த்த
கர்மங்கள் போராடு தே
பண்டையுள கர்மமே கர்த்தாவெனும் பெயர்ப்
பக்ஷநா னிச்சிப்ப னோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந் தமே. (௪)

சந்ததமு மெனதுசெய னினதுசெய லியானெனுந்
தன்மைநினை யன்றி யில்லாத்
தன்மையால் வேறலேன் வேதாந்த சித்தாந்த
சமரச சுபாவ மிதுவே
இந்தநிலை தெளியநா னெக்குருகி வாடிய
வியற்கைதிரு வுளமறி யுமே
இந்நிலையி லேசற் றிருக்கவென் றுன்னடிமை
யிதசத்ரு வாக வந்து
சிந்தைகுடி கொள்ளுதே மலமாயை கன்மந்
திரும்புமோ தொடுவழக் காய்ச்
சென்மம்வரு மோவெனவும் யோசிக்கு தேமனது
சிரத்தையெனும் வாளு முதவிப்
பந்தமற மெய்ஞ்ஞான தீரமுந் தந்தெனைப்
பாதுகாத் தருள்செய் குவாய்

பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந் தமே. (௫)

பூதலய மாகின்ற மாயைமுத லென்பர்சிலர்
பொறிபுல னடங்கு மிடமே
பொருளென்பர் சிலர்கரண முடிவென்பர் சிலர்குணம்
போனவிட மென்பர் சிலபேர்
நாதவடி வென்பர் சிலர்விந்துமய மென்பர்சிலர்
நட்டநடு வேயி ருந்த
நாமென்பர் சிலருருவ மாமென்பர் சிலர்கருதி
நாடிலரு ளென்பர் சிலபேர்
பேதமற வுயிர்கெட்ட நிலயமென் றிடுவர்சிலர்
பேசினரு வென்பர் சிலபேர்
பின்னுமுன் னுங்கெட்ட சூனியம தென்பர்சிலர்
பிறவுமே மொழிவ ரிவையாற்
பாதரச மாய்மனது சஞ்சலப் படுமலாற்
பரமசுக நிட்டை பெறுமோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந் தமே. (௬)

அந்தகா ரத்தையோ ரகமாக்கி மின்போலெ
னறிவைச் சுருக்கி னவரார்
அவ்வறிவு தானுமே பற்றினது பற்றற
யழுந்தவுந் தலைமீ திலே
சொந்தமா யெழுதப் படித்ததார் மெய்ஞ்ஞான
சுகநிட்டை சேரா மலே
சோற்றுத் துருத்தியைச் சதமெனவு முண்டுண்டு
தூங்கவைத் தவரார் கொலோ
தந்தைதாய் முதலான வகிலப்ர பஞ்சந்
தனைத்தந்த தெனதா சையோ
தன்னையே நோவனோ பிறரையே நோவனோ

தற்கால மதை நோவனோ
பந்தபா னதுதந்த வினையையே நோவனோ
பரமார்த்த மேது மறியேன்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந் தமே. (எ)

வாரா தெலாமொழிய வருவன வெலாமெய்த
மனது சாக்ஷிய தாகவே
மருவநிலை தந்ததும் வேதாந்த சித்தாந்த
மரபுசம ரச மாகவே
பூராய மாயுணர வாகமது தந்ததும்
பொய்யுடலை நிலையன் றெனப்
போதநெறி தந்ததுஞ் சாசுவத வானந்த
போகமே வீடென் னவே
நீராள மாயுருக வுள்ளன்பு தந்தது
நின்னதரு ளின்னு மின்னும்
நின்னையே துணையென்ற வென்னையே காக்கவொரு
நினைவுசற் றுண்டா கிலோ
பாராதி யறியாத மோனமே யிடைவிடாப்
பற்றாக நிற்க வருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந் தமே. (அ)

ஆழாழி கரையின்றி நிற்கவிலை யோகொடிய
வாலமமு தாக விலையோ
அக்கடலின் மீதுவட வனனிற்க வில்லையோ
வந்தரத் தகில கோடி
தாழாம னிலைநிற்க வில்லையோ மேருவுந்
தனுவாக வளைய விலையோ
சத்தமே கங்களும் வச்ரதர னாணையிற்
சஞ்சரித் திடவில் லையோ

வாழாது வாழவே யிராமனடி யாற்சிலையு
மடமங்கை யாக விலையோ
மணிமந்த்ர மாதியால் வேண்டுசித் திகளுலக
மார்க்கத்தில் வைக்க விலையோ
பாழான வென்மனங் குவியவொரு தந்திரம்
பண்ணுவ துனக் கருமையோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந் தமே. (௯)

ஆசைக்கோ ரளவில்லை யகிலமெல் லாங்கட்டி
யாளினுங் கடன்மீ திலே
ஆணைசெல வேநினைவ ரளகேச னிகராக
வம்பொன்மிக வைத்த பேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்
நெடுநா ளிருந்த பேரும்
நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணாவ ரெல்லாம்
யோசிக்கும் வேளையிற் பசிதீர வுண்பது
முறங்குவது மாக முடியும்
உள்ளதே போதுநா னானெனக் குளறியே
யொன்றைவிட் டொன்று பற்றிப்
பாசக் கடற்குளே வீழாமன் மனதற்ற
பரிசுத்த நிலையை யருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந் தமே. (க௦)

திருச்சிற்றம்பலம்.

---

# பொருள் வணக்கம்.

நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய்
நிறைவாய் நீங்காச்
சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறை
சுடரா யெல்லாம்
வைத்திருந்த தாரகமா யானந்த மயமாகி
மனவாக் கெட்டாச்
சித்துருவாய் நின்றவொன்றைச் சுகாரம்பப் பெருவெளியைச்
சிந்தை செய்வாம். (க)

யாதுமனு நினையமந்த நினைவுக்கு நினைவாகி
யாதின் பாலும்
பேதமற நின்றுயிருக் குயிராகி யன்பருக்கே
பேரா னந்தக்
கோதிலமு தூற்றரும்பிக் குணங்குறியொன் றறத்தன்னைக்
கொடுத்துக் காட்டுந்
தீதில்பர மான சித்தாந்தப் பேரொளியைச்
சிந்தை செய்வாம். (உ)

பெருவெளியா யைம்பூதம் பிறப்பிடமாய்ப் பேசாத
பெரிய மோனம்
வருமிடமாய் மனமாதிக் கெட்டாத பேரின்ப
மயமாய் ஞானக்
குருவருளாற் காட்டிடவு மன்பரைக்கோத் தறவிழுங்கிக்
கொண்டப் பாலுந்
தெரிவரிதாய்க் கலந்ததெந்தப் பொருளந்தப் பொருளினையாஞ்
சிந்தை செய்வாம். (ங)

இகபரமு முயிர்க்குயிரை யானெனதற் றவருறவை
யெந்த நாளுஞ்
சகலபரி பூரணமான நிராலம்ப கோசரத்தைத்
துரிய வாழ்வை

அகமகிழ வருந்தேனை முக்கனியைக் கற்கண்டை
யமிர்தை நாடி
மொகுமொகென விருவிழிநீர் முத்திறைப்பக் கரமலர்கண்
முகிழ்த்து நிற்பாம். (௪)

சாதிகுலம் பிறப்பிறப்புப் பந்தமுத்தி யருவுருவத்
தன்மை நாமம்
ஏதுமின்றி யெப்பொருட்கு மெவ்விடத்தும் பிரிவறநின்
றியக்கஞ் செய்யுஞ்
சோதியைமாத் தூவெளியை மனதவிழ நிறைவான
துரிய வாழ்வைத்
தற்பர மாம்பொருளைத் திருவருளே நிலையாகச்
சிந்தை செய்வாம். (௫)

இந்திரசா லங்கனவு கானலினீ ரெனவுலக
மெமக்குத் தோன்றச்
சந்ததமுஞ் சிற்பரத்தா லழியாத தற்பரத்தைச்
சார்ந்து வாழ்க
புந்திமகிழ் முறநாளுந் தடையறவா னந்தவெள்ளம்
பொலிக வென்றே
வந்தருளுங் குருமௌனி மலர்த்தாளை யனுதினமும்
வழுத்தல் செய்வாம். (௬)

பொருளாகக் கண்டபொரு ளெவைக்குமுதற் பொருளாகிப்
போத மாகித்
தெருளாகிக் கருதுமன்பர் மிடிதீரப் பருகவந்த
செழுந்தே னாகி
அருளாகி யகம்புறமென் றுன்னாத பூரணவா
னந்த மாகி
இருளாதி விளங்குபொரு ளியாதந்தப் பொருளினையா
மிறைஞ்சி நிற்பாம். (௭)

அருமறையின் சிரப்பொருளாய் விண்ணவர்மா முனிவர்சித்த
ராதி யானோர்
தெரிவரிய பூரணமாய்க் காரணங்கற் பனைகடந்த
செல்வ மாகிக்
கருதரிய மலரின்மண மெள்ளிலெண்ணெ யுடலுயிர்போற்
கலந்தெந் நாளுந்
துரியநடு விருந்த பெரியபொரு ளியாததனைத்
தொழுதல் செய்வாம். (அ)

மண்ணாதி பூதமெல்லாந் தன்னகத்தி லடக்கிவெறு
வெளியாய் ஞானக்
கண்ணாரக் கண்டவன்பர் கண்ணூடே யானந்தக்
கடலாய் வேறொன்
றெண்ணாத படிக்கிரங்கித் தானாகச் செய்தருளு
மிறையே யுன்றன்
றண்ணாருஞ் சாந்தவரு டனைநினைந்து கரமலர்க
டலைமேற் கொள்வாம். (௯)

எண்ணிறைந்த வெளியாயென் மனவெளியிற் கலந்தறிவாம்
வெளியி னூடுந்
தண்ணிறைந்த பேரமுதாய்ச் சதானந்த மானபெருந்
தகையே நின்பால்
உண்ணிறைந்த பேரன்பா லுள்ளுருகி மொழிகுளறி
யுவகை யாகிக்
கண்ணிறைந்த புனலுகுப்பக் கரமுகிழ்ப்ப நின்னருளைக்
கருத்தில் வைப்பாம். (௧0)

வேறு.

ஆதியந்தங் காட்டாத முதலா யெம்மை
யடிமைக்கா வளர்த்தெடுத்த வன்னை போல
நீதிபெறு குருவாகி மனவாக் கெட்டா
நிச்சயமாய்ச் சொச்சமதாய் நிமல மாகி

வாதமிடுஞ் சமயநெறிக் கரிய தாகி
மௌனத்தோர் பால்வெளியாய் வயங்கா நின்ற
சோதியையென் னுயிர்த்துணையை நாடிக் கண்ணீர்
சொரியவிரு கரங்குவித்துத் தொழுதல் செய்வாம். (கக)

அகரவுயி ரெழுத்தனைத்து மாகி வேறு
யமர்ந்ததென வகிலாண்ட மனைத்து மாகிப்
பகர்வனவெல் லாமாகி யல்ல தாகிப்
பரமாகிச் சொல்லரிய பான்மை யாகித்
துகளறுசங் கற்பவிகற் பங்க ளெல்லாந்
தோயாத வறிவாகிச் சுத்த மாகி
நிகரில்பசு பதியான பொருளை நாடி
நெட்டுயிர்த்துப் பேரன்பா னினைதல் செய்வாம். (கஉ)

திருச்சிற்றம்பலம்.

---

# சின்மயானந்தகுரு.

அங்கைகொடு மலர்தூவி யங்கமது புளகிப்ப
வன்பினு லுருகி விழிநீர்
ஆறாக வாராத முத்தியின தாவேச
வாசைக் கடற்குண் மூழ்கிச்
சங்கர சுயம்புவே சம்புவே யெனவுமொழி
தழுதழுத் திட வணங்குஞ்
சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்க னேனையுந்
தண்ணருள் கொடுத்தாள் வையோ
துங்கமிகு பக்குவச் சனகன்முதன் முனிவோர்க்
டொழு தருகில் வீற்றிருப்பச்
சொல்லரிய நெறியையொரு சொல்லா லுணர்த்தியே
சொரூபானு பூதி காட்டிச்

செங்கமல பீடமேற் கல்லா லடிக்குள்வளர்
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே. (க)

ஆங்காரமென்னு மிடிகரையை மெய்யென்று பாவிநா
னத்துவித வாஞ்சை யாதல்
ஆரியனொப் பிற்றேனை முட்டவனிச் சித்தப்படி
யாகுமறி வவிழ வின்பந்
தாங்கும்வகை யேதுநாட் சரியைகிரி யாயோக
சாதனம் விடுத்த தெல்லாஞ்
சன்மார்க்க மல்லவிவை நிற்கவென் மார்க்கங்கள்
சாராத பேரறிவ தாய்
வாக்குமன மணுகாத பூரணப் பொருள்வந்து
வாய்க்கும் படிக்கு பாயம்
வருவித்து வட்டாத பேரின்ப மானசுக
வாரியினை வாய் மடுத்துத்
தேக்கித் திளைக்கநீ முன்னிற்ப தென்றுகாண்
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே. (உ)

அவ்விய மிருக்கநா னென்கின்ற வாணவ
மடைந்திட் டிருக்க லோபம்
அருளின்மை கூடக் கலந்துள் ளிருக்கமே
லாசா பிசாச முதலாம்
வெவ்விய குணம்பல விருக்குமென் னறிவூடு
மெய்யனீ வீற்றி ருக்க
விதியில்லை யென்னிலோ பூரண னெனும்பெயர்
விரிக்கிலுரை வேறு முளதோ
கவ்வுமல மாகின்ற நாகபா சத்தினற்

கட்டுண்ட வுயிர்கண் மூர்ச்சை
கடிதகல வலியவரு ஞானசஞ் சீவியே
கதியான பூமி நடுவுட்
செவ்விதின் வளர்ந்தோங்கு திவ்யகுண மேருவே
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே. (௩)

ஐவகை யெனும்பூத மாதியை வகுத்ததனு
ளசரசர பேத மான
யாவையும் வகுத்தநல் லறிவையும் வகுத்துமறை
யாதிநூ லையும் வகுத்துச்
சைவமுத லாவளவில் சமயமும் வகுத்துமேற்
சமயங் கடந்த மோன
சமரசம் வகுத்தநீ யுன்னைநா னணுகவுந்
தண்ணருள் வகுக்க விலையோ
பொய்வளரு நெஞ்சினர்கள் காணுத காட்சியே
பொய்யிலா மெய்ய ரறிவிற்
போதபரி பூரண வகண்டிதா காரமாய்ப்
போக்குவர வற்ற பொருளே
தெய்வமறை முடிவான பிரணவ சொரூபியே
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே. (௪)

ஐந்துவகை யாகின்ற பூதபே தத்தினு
லாகின்ற வாக்கை நீர்மேல்
அமர்கின்ற குமிழியென நிற்கின்ற தென்னநா
னறியாத கால மெல்லாம்
புந்திமகி ழுறவுண் டிருந்தின்ப மாவதே
போந்தநெறி யென்றி ருந்தேன்

கனிவுபெற வுள்ளுருக்கிப்
பருவம தறிந்துநின் னருளான [illegible]
பரிசித்து வேதி செய்து
பத்துமாற் றுத்தங்க மாக்கியே பணிகொண்ட
பக்ஷத்தை யென்சொல் லுவேன்
அருமைபெறு புகழ்பெற்ற வேதாந்த சித்தாந்த
மாதியா மந்த மீதும்
அத்துவித [illegible]
யானவர்க ளறிவி னூடே
திருமருவு கல்லா லடிக்கீழும் வளர்கின்ற
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே.

கூடுத லுடன்பிரித லற்றுநிர்த் தோந்தமாய்க்
குவித லுடன் விரித லற்றுக்
குணமற்று வரவினொடு போக்கற்று நிலையான
குறியற்று மலமு மற்று
[illegible] கீழ்நடுப் பக்கமென
[illegible] வித்து
[illegible]
[illegible]
வாடுத லுமற்றுமே லொன்றற் றிரண்டற்று
வாக்கற்று மனமு மற்று
மன்னுபரி பூரணச் சுகவாரி தன்னிலே
வாய்மடுத் துண்ட வசமாய்த்
தேடுத லுமற்றவிட நிலையென்ற மௌனியே
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே.

தீராத வருளெலாந் தந்தருள மௌனியாய்த்
தாயனைய கருணை காட்டித்
[illegible]ளிணையென் முடிசூட்டி யறிவிற் சமாதியே
சாசுவத சம்ப்ர தாயம்
[illegible]மன் மந்திரமு மொன்றுமன முத்திநிலை
யொன்றோ டிரண்டெ னுமை
[illegible]ளியெனவும் வெளியெனவு முருவெனவு நாதமா
மொலியெனவு முணர்வு முமற்
பாராது பார்ப்பதே யேதுசா தனமுற்ற
பரமவனு பூதி வாய்க்கும்
பண்பென் றுணர்த்தியது பாராம லந்நிலை
பதிந்தநின் பழ வடியர்தஞ்
சீரா யிருக்கநின தருள்வேண்டு மையனே
சித்தாந்த முத்தி முதலே
[illegible]ரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்த குருவே. (கூ)

போதமா யாதிநடு வந்தமு மிலாததாய்ப்
புனிதமா யவிகார மாய்ப்
போக்குவர வில்லாத வின்பமாய் நின்றநின்
பூரணம் புகலி டமதா
ஆதரவு வையாம லறிவினை மறைப்பதுநி
னருள்பின்னு மறிவின்மை தீர்த்
[illegible]றிவித்த [illegible]றபதுநி னருளாகி லெளியனேற்
கறிவாவ தேத றிவிலா
[illegible] வினையேது வினைதனக்
கீடான காய மேதென்
[illegible]ச்சா சுதந்தரஞ் சிறிதுமிலை யிகபர
[illegible]ரண்டினுண் மலைவு தீரத்
[illegible]நின்னருள் [illegible] புணர்த்தியெனை யாள்வையோ

பாசவிரு ளன்னிழு மனைச்சுளித் தார்த்துமேற்
 பார்த்துப் பரந்த மனதைப்
பாரித்த கவளமாய்ப் பூரிக்க வுண்டுமுக
 படாமன்ன மாயை நூறித்
தேசபெற வைத்தசின் முத்திராங் குசச்
 செங்கைக் குளேயடங்கிச்
சின்மயா னந்தசுக வெள்ளம் படிந்துநின்
 றிருவருட் பூர்த்தி யான
மாசறு சமாதி யிதென்னை யொருஞான
 மத்தகச மௌனவளர்த்தாய்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
 மரபில்வரு மௌன குருவே. (க)

ஐந்துவகை யாகின்ற பூதமுத னாதமு
 மடங்கவெளி யாக வெளிசெய்
தறியாமை யறிவாதி பிரிவாக வறிவார்க
 ளறிவாக நின்ற நிலையிற்
சிந்தையற நில்லென்று சும்மா விருத்திமேற்
 சின்மயா னந்த வெள்ளந்
தேக்கித் திளைத்துநா னதுவா யிருக்கச்
 செய்சித்ர மிகநன் றுகாண்
எந்தைவட வாற்பரம குருவாழ்க வாழவரு
 ளியநந்தி மரபு வாழ்க
வென்றுமுயர் மனமகிழ வேதாக மத்துணி
 பிரண்டில்லை யொன்றென் னவே
வந்தகுரு வேயிறைவ சிவஞான சித்திநெறி
 மௌனோப தேச குருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
 மரபில்வரு மௌன குருவே. (உ)

ஆதிக்க நல்கினவ ராரிந்த மாயைக்கெ
    னறிவன்றி யிடமில்லையோ
சுந்தரப் புட்பமுங் கானலின் னீருமோ
    ரவசரத் துபயோ கமோ
போதித்த நிலையையு மய்க்குதே யபயநான்
    புக்கவரு டோற்றி டாமற்
பொய்யான வுலகத்தை மெய்யா நிறுத்தியென்
    புந்திக்கு ளிந்த்ர சாலஞ்
சாதிக்கு தேயிதனை வெல்லவு முபாயநீ
    தந்தருள்வ தென்று புகல்வாய்
சண்மத ஸ்தாபனமும் வேதாந்த சித்தாந்த
    சமரசநிர் வாக நிலையு
மாதிக்கொ டண்டப் பரப்பெலா மறியவே
    வந்தருளு ஞான குருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
    மரபில்வரு மௌன குருவே. (ரு.)

பின்னையும் பொய்யுடலை நிலையென்று மையிலகு
    விழிகொண்டு மையல் பூட்டி
மின்னார்க ளின்பமே மெய்யென்றும் வளர்மாட
    மேல்வீடு சொர்க்க மென்றும்
பொன்னையழி யாதுவளர் பொருளென்று போற்றியிப்
    பொய்வேட மிகுதி காட்டிப்
பொறையறிவு துறவீத லாதிநற் குணமெலாம்
    போக்கிலே போக விட்டுத்
தன்னிகரி லோபாதி பாழ்ம்பேய் பிடித்திடத்
    தரணிமிசை லோகா யதன்
சமயநடை சாராமல் வேதாந்த சித்தாந்த
    சமரச சிவானு பூதி
மன்னவொரு சொற்கொண் டெனைத்தடுத் தாண்டபின்

வாழ்வித்த ஞான குருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌன குருவே. (௮)

போனகமிருக்கின்ற சாலையிடை வேண்டுவ
புசித்தற் கிருக்கு மதுபோற்
புருஷர்பெறு தர்மாதி வேதமுட னாகமம்
புகலுமதி னூலாம் பயன்
நன்னெறி மெய்யெறி காட்சியனு மானமுத
னான்கு விதங்க ளோர்ந்து
நாலு மௌனக்குறி படைபுடை பெயர்த்திடவு
நான்குசா தனமு மோர்ந்திட்
டானநெறி யாஞ்சரியை யாதிசோ பானமுற்
றனுபக்ஷ சம்பு பக்ஷ
மாயிரு விகற்பமு மாயாதி சேவையு
மறிந்திரண் டொன்றென் னுமோர்
மனைத விகற்பமற வென்றுநிற் பதுநமது
மரபென்ற பரம குருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌன குருவே. (௯)

கல்லாத வறிவுமேற் கேளாத கேள்வியுங்
கருணைசிறி தேது மில்லாக்
காட்சியுங் கொலைகளவு கட்காம மாட்சியாக்
காதலித் திடுநெஞ் சமும்
பொல்லாத பொய்ம்மொழியு மல்லாது நன்மைகள்
பொருந்துகுண மேது மறியேன்
புருஷர்வடி வானதே யல்லாது கனவிலும்
புருஷார்த்த மேது மில்லேன்
எல்லா மறிந்தநீ யறியாத தன்றெனக்
கெவ்வண்ண முய்வண் ணமோ

விருனையிரு ளென்றவர்க் கொளிதா ரகம்பெறு
　　மெனக்குநின் னருடா ரகம்
வல்லானெ னும்பெய ருனக்குள்ள தேயிந்த
　　வஞ்சகனை யாள நினையாய்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
　　மரபில்வரு மௌன குருவே. (௬)

கானகமி லங்குபுலி பசுவொடு குலாவுநின்
　　கண்காண மதயானை நீ
கைகாட்ட வுங்கையா னெங்கடிக் கெனப்பெரிய
　　கட்டைமிக வேந்தி வருமே
போனக மமைந்ததென வக்காம தேனுநின்
　　பொன்னடியி னின்று சொலுமே
புலிராசர் கவிராசர் தவராச னென்றுனைப்
　　போற்றிசய போற்றி யென்பார்
ஞானகரு ணாகர முகங்கண்ட போதிலே
　　நவநாத சித்தர் களுமுன்
னட்பினை விரும்புவார் சுகர்வாம தேவர்முதன்
　　ஞானிகளு முனைமெச் சுவார்
வானகமு மண்ணகமும் வந்தெதிர் வணங்கிமுன்
　　மகிமையது சொல்ல வெளிதோ
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
　　மரபில்வரு மௌன குருவே. (௭)

சருகுசல பக்ஷணிக ளொருகோடி யல்லாற்
　　சகோர பக்ஷிகள் போலவே
தவளநில வொழுகமிர்த தாரையுண் டழியாத
　　தன்மைய ரனந்த கோடி
இருவினைக ளற்றிரவு பகலென்ப தறியாத
　　வேகாந்த மோன ஞான
இன்பநிஷ்டையர் கோடி மண்மந்த்ர சித்திநிலை

யெய்தினர்கள் கோடி சூழக்
குருமணி யிழைத்திட்ட சிங்காசனத்தின்மிசை
கொலுவீற் றிருக்கு நின்னைக்
கும்பிட்ட னந்தமுறை தெண்டனிட் டென்மனக்
குறையெலாந் தீரும் வண்ணம்
மருமலை யேறிநித் துனிரு தாளையர்ச் சிக்கவென்னை
வாவென் றழைப்ப தெந்நாண்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌன குருவே. (அ)

ஆங்கார மானகுல வேடவெம் பேய்பாழ்த்த
வாணவத் தினும்வ லிதுகாண்
அறிவினை மயக்கிடு நடுவறிய வொட்டாதி
யாதொன்று தொடினு மதுவாய்த்
தாங்காது மொழிபேசு மரிகரப் பிரமாதி
தம்மொடு சமான மென்னுந்
தடையற்ற தேரிலஞ் சுருவாணி போலவே
தன்னிலசை யாது நிற்கும்
ஈங்கா ரெனக்குநிக ரென்னப்ர தாபித்
திராவணா காரமாகி
இதயவெளி யெங்கணுந் தன்னரசு நாடுசெய்
திருக்குமித னொடே நேரமும்
வாங்காவி லாவடிமை போராட முடியுமோ
மௌனோப தேச குருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌன குருவே. (௯)

பற்றுவெரு விதமாகி யொன்றைவிட் டொன்றனைப்
பற்றியுழல் கிருமி போலப்
பாழ்ஞ்சிந்தை பெற்றநான் வெளியாக நின்னருள்
பகர்ந்துமறி யேன்று விதமோ

சற்றறிய தன்றியு மெவ்வேறு வொருமொழி
திடுக்கென் றுரைத்த போது
சிந்தைசெவி ராகமே பரைபரைய [illegible]
திநெஞ்ச மளவ ளாவ
உற்றுணர வுணர்வற்றுன் [illegible] யினர்போல
வுளறுவேன் முத்தி மார்க்க
முணர்வதெப் படியின்ப துன்பஞ் சமானமா
யுறுவதெப் படியா யினும்
மற்றெனக் கையநீ சொன்னவொரு வார்த்தையினை
மலையிலக் கெனநம் பினேன்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌன குருவே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

---

# கருணாகரக்கடவுள்.

---

நிர்க்குண நிராமய நிரஞ்சன நிராலம்ப
நிர்விஷய கைவல்ய மா
நிஷ்கள வசங்கசஞ் சலரகித நிர்வசன
நிர்த்தொந்த நித்த முக்த
தற்பரவிஸ் வாதீத வ்யோமபரி பூரண
சதானந்த ஞான பகவ
சம்புசிவ சங்கர சர்வேச வென்றுநான்
சர்வகா லமுநினைவனே
அற்புத [illegible]
கானந்த பூர்த்தி யான
வத்துவித நிச்சய சொரூபசா க்ஷாத்கார
வனுபூதி யனுக்ரு தமுங்

கற்பனை யறக்காண முக்கணுடன் வடநிழற்
கண்ணோ டிருந்த குருவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்க டவுளே. (க)

பஞ்சேந்த்ரி யைந்தொடு புறத்திலுள கருவியும்
வாக்காதி சோத்ரா தியும்
வளர்கின்ற சப்தாதி மனமாதி கலையாதி
மன்னு சுத்தாதி யுடனே
தொக்குற் றிருக்கு மாறாறு தத்துவமு மெனவியாய்ச்
சொன்னவொரு சொற்கொண் டதே
சூவெளிய தாயகண் டானந்த சுகவாரி
தோற்றுமதை யென்சொல் லுவேன்
பண்ணுரு மிசையினொடு பாடிப் படித்தருட்
பான்மைநெறி நின்று தவறுப்
பக்குவ விசேஷராய் நெக்குநெக் குருகிப்
பணிந்தெழுந் திருகை கூப்பிக்
கண்ணாறு கரைபுரள நின்றவர் பக்கமாக்
கைவிடாக் காட்சி யறவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்க டவுளே. (உ)

எல்லாமு னடிமையே யெல்லாமு னுடைமையே
யெல்லாமு னுடைய செயலே
எங்கணும் வியாபிநீ யென்றுசொ லுமியல்பென்
றிருக்காதி வேத மெல்லாஞ்
சொல்லான் முழக்கியது மிக்கவுப காரமாச்
சொல்லிறந் தவரும் விண்டு
சொன்னவையு மிவைநல்ல குருவான பேருந்
தொகுத்த நெறிதானு மிவையே
அல்லாம லில்லையென நன்கு வறிந்தே

னறிந்தபடி நின்று சுகநா
ளுகாத வண்ணமே யிவ்வண்ண மாயினே
னதுவுநின தருளென் னவே
கல்லாத வறிஞனுக் குள்ளே யுணர்த்தினை
கதிக்குவகை யேது புகலாய்
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்க டவுளே. (௫)

படைப் பகற்பொழுதை யிருளென்ற மருளர்தம்
பக்ஷமோ வெனது பக்ஷம்
பார்த்தவிட மெங்கணுங் கோத்தநிலை குலையாது
பரமவெளி யாக வொருசொற்
றிட்டமுடன் மௌனியா யருள்செய் திருக்கவுஞ்
சேராம லாரா கநான்
சிறுவீடு கட்டியதி னடுசோற்றை யுண்டுண்டு
தேக்குசிறி யார்கள் போல
நட்டணைய தாக்கற்ற கல்வியும் விவேகமு
நன்னிலய மாக வுன்னி
நானென்று நீயென் றிரண்டில்லை யென்னவே
நடுவே முளைத்த மனதைக்
கட்டவறி யாமலே வாடினே னெப்போது
கருணைக் குரித் தாவனோ
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்க டவுளே. (௬)

மெய்விடா நாவுள்ள மெய்யரு ளிருந்துநீ
மெய்யான மெய்யை யெல்லா
மெய்யென வுரைக்கவது மெய்யிதற் கையமில்லை
மெய்யேது மறியா வெறும்
பொய்விடாப் பொய்யினே னுள்ளத் திருந்துநான்
பொய்யான பொய்யை யெல்லாம்

மெய்யெனும் வண்ணமே புகலவைத் தாயெனிற்
புன்மையே னென்செய் குவேன்
விடவிடா தெழுநிலை சண்டமரு மேவலிற் றனு
வடிவான ஞான குருவே
மலர்மேவி மறையோது நான்முகக் குருவே
மதங்களொடு நின்ற குருவே
விடவிடா தேவென்ற வன்பருக் கன்பாய்க்
கருத்தூ றுணர்த்து குருவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்க டவுளே. (௫)

பண்ணே னுனக்கான பூசையொரு வடிவிலே
பாவித் திறைஞ்ச வாங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப்
பனிமல ரெடுக்க மனமும்
நண்ணே னலாமலிரு கைதான் குவிக்கவெனி
னாணுமென் னுளநிற்றி நீ
நான்கும் பிடும்போ தரைக்கும் பிடாதலா
னான்பூசை செய்யன் முறையோ
விண்ணே விணாதியாம் பூதமே நாதமே
வேதமே வேதாந் தமே
மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள்
வித்தேய வித்தின் முளையே
கண்ணே கருத்தேயெ னெண்ணேயெ ழுத்தே
கதிக்கான மோன வடிவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்க டவுளே. (௬)

சத்தமும் வேதமொழி யாதொன்று பற்றினது
தான்வந்து முற்று மெனலாற்
சகமீ திருந்தாலு மரணமுண் டென்பது

சதாசிவ்ஷ்டர் நினைவ தில்லை
சிந்தையறி யார்க்கிது போதிப்ப தல்லவே
செப்பினும் வெகுதர்க் கமாந்
திவ்யகுண மார்க்கண்டர் சுகராதி முனிவோர்கள்
சித்தாந்த நித்ய ரல்லவோ
இந்த்ராதி தேவதைகள் பிரமாதி கடவுள
ரிருக்காதி வேத முனிவ
ரெண்ணரிய கணநாதர் நவநாத சித்தர்க
ளிரவிமதி யாதி யோர்கள்
கந்தருவர் கின்னரர்கண் மற்றையர்கள் யாவருங்
கைகுவித் திடுதெய் வமே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்க டவுளே. (எ)

துள்ளுமறி யாமனது பலிகொடுத் தேன்கர்ம
துட்டதே வதைக ளில்லை
துரியநிறை சாந்ததே வதையா முலைக்கே
தொழும்பனன் பபிடேக நீர்
உள்ளுறையி லென்னுவி நைவேத்தியம் ப்ராண
னேங்குமதி தூப தீப
மொருகால மன்றிது சதாகால பூசையா
வொப்புவித் தேன்கருணை கூர்
தெள்ளிமறை வடியிட்ட வமுதப் பிழம்பே
தெளிந்ததே னேசீ னியே
திவ்யரச மியாவுந் திரண்டொழுகு பாகே
தெவிட்டாத வானந் தமே
கள்ளனறி வூடுமே மெள்ளமெள வெளியாய்க்
கலக்கவரு நல்ல வுறவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்க டவுளே. (அ)

உடல்குழைய வென்பெலா நெக்குருக விழிநீர்க
ளூற்றென வெதும்பி யூற்ற
வூசிகாந் தத்தினைக் கண்டணுகல் போலவே
யோருறவு முன்னி யுன்னிப்
படபடென நெஞ்சம் பதைத்துண் ணடுக்குறப்
பாடியா டிக்கு தித்துப்
பனிமதி முகத்திலே நிலவனைய புன்னகை
பரப்பியார்த் தார்த்தெ ழுந்து
மடலவிழு மலரனைய கைவிரித் துக்கூப்பி
வானேய வானி லின்ப
மழைபோல மழைத்தாரை வெள்ளமே நீடூழி
வாழியென வாழ்த்தி யேத்துங்
கடலனைய திறந்தனைய வன்பரன் புக்கெளியை
கன்னெஞ் சனுக்கெளியையோ
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்க டவுளே. (௫)

இக்கற்ற பயபங்கு வெனவறியு நல்லறிஞ
ரெக்கால முமுத வுவா
ரின்சொற்க ளூர்பொய்ம்மை யாமிழுக் குரையா
ரிரங்குவார் கொலைகள் பயிலார்
சங்கற்ப சித்தரவ ருள்ளக் கருத்திலுறை
சாக்ஷிநீ யிகபரத் துஞ்
சந்தான கற்பகத் தேவா யிருந்தே
சமஸ்தவின் பமுமு தவுவாய்
செக்கென்ற தொத்தெனைப் பாயவரு வினையினைச்
சேதிக்க வருசிம் புளே
சிந்தா குலத்திமிர மகலவரு பானுவே
தீனனேன் கரையே றவே
கங்கற்ற பேராசை வெள்ளத்தின் வளரருட்

ககனவட் டக்கப் பலே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்க டவுளே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

# சித்தர்கணம்.

திக்கொடு திகந்தமும் மனவேக மென்னவே
சென்றோடி யாடி வருவீர்
செம்பொன்மக மேருவொடு குணமேரு வென்னவே
திகழ்துருவ னளவ ளாவி
உக்ரமிகு சக்ரதர னென்னநிற் பீர்கையி
லுழுந் தமிழுமாச மனமா
மேவாரேழு கடலையும் பருகவல் லீரிந்த்ர
னுலகுமயி ராவ தமுமே
கைக்கெளிய பந்தா வெடுத்து விளையாடுவீர்
ககனவட் டத்தை யெல்லாங்
சுடுகிடை யிருத்தியே யட்டகுல வெற்பையுங்
காட்டுவீர் மேலு மேலும்
மிக்கசித் திகளெலாம் வல்லநீ ரடிமைமுன்
விளங்கவரு சித்தி யிலையோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே. (௧)

பாட்டளி துதைந்துவளர் கற்பகநன் னிழலைப்
பாரினிடை வரவ ழைப்பீர்
பத்மநிதி சங்கநிதி யிருபாரி சத்திலும்
பணிசெயுந் தொழிலாளர் போற்

எண்ணரிய பிறவிதனின் மானுடப் பிறவிதா
 னியாதினு மரிதரிது கா
ணிப்பிறவி தப்பினு லெப்பிறவி வாய்க்குமோ
 வேதுவருமோ வறிகிலேன்
கண்ணகளிலத்துநா னுள்ளபொழு தேபருட்
 ககனவட் டத்தி னின்று
காலூன்றி நின்றுபொழி யானந்த முகிலொடு
 கலந்துமதி யவச முறவே
பண்ணுவது நன்மையிந் நிலைப்பதியு மட்டுமே
 பதியா யிருந்த தேகப்
பவுரிகுலை யாமலே கௌரிகுண் டலியாயி
 பண்ணவித னருளினாலே
விண்ணிலவு மதியமுத மொழியாது பொழியவே
 வேண்டுவே னுமதடிமை நான்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
 வித்தகச் சித்தர் கணமே. (௪)

பொய்திகழு முலகநடை யென்சொல்கே னென்சொல்கேன்
 பொழுது போக்கே தென்னிலோ
பொய்யுட னிமித்தம் புசிப்புக் கலைந்திடல்
 புசித்தபின் கண்ணுறங் கல்
கைதவ மலாமலிது செய்தவம தல்லவே
 கண்கெட்ட பேர்க்கும் வெளியாய்க்
கண்டதிது விண்டதைக் கண்டித்து நிற்கவெக்
 காலமோ வதையறி கிலேன்
மைதிகழு முகிலினங் குடைநிழற் றிடவட்ட
 வரையினொடு செம்பொன் மேரு
மால்வரையின் முதுகடும் யோகதண் டத்தோர்
 வரைந்து சயவிருது காட்டி

மெய்த்திகழு மஷ்டாங்க யோகபூ மிக்குள்வளர்
வேந்தரே குணசாந் தரே
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே. (௫)

கேசரக முதலான சதுரங்க மனமாதி
கேள்வியி னிசைந்து நிற்பக்
கெடிகொண்ட தலமாறு மும்மண் டலத்திலுஞ்
என்னாக்கு செல்ல மிக்க
செசவிதம தாய்நின்ற நாதங்க ளோலிடச்
சிங்காச னாதி பர்களாய்த்
திக்குத் திகந்தமும் பூரண மதிக்குடை
திகழ்ந்திட வசந்த காலம்
இசையமலர் மீதுறை மணம்போல வானந்த
மிதயமேற் கொள்ளும் வண்ண
மென்றைக்கு மழியாத சிவராச யோகமா
யிந்த்ராதி தேவர்க ளெலாம்
விசயசய சயவென்ன வாசிசொல வேகொலு
விருக்குறும் பெருமை யெளிதோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே. (௬)

ஆணிலே பெண்ணிலே யென்போல வொருபேதை
யகிலத்தின் மிசையுள் ளதோ
காணுமா றுங்குபோ லோடியுழல் சிந்தையை
யடக்கியொரு கணமேனும் யான்
காணிலேன் றிருவருளை யல்லாது மௌனியாய்க்
கண்மூடி யோடு மூச்சைக்
கட்டிக் கலாமதியை முட்டவே மூலவெங்
கனலினை யெழுப்ப நினைவும்
பூணிலே னிற்றைநாட் சற்றதுங் கேட்டதும்

போக்கிலே போக விட்டுப்
பொய்யுலக ஞயினே ஞயினுங் கடையான
புன்மையே யின்ன மின்னம்
வீணிலே யலையாமன் மலையிலக் காகநீர்
வெளிப்படத் தோற்றல் வேண்டும்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே. (எ)

கன்னலமு தெனவுமுக் கனியெனவும் வாழ்த்து
கண்டெனவு மடியெ டுத்துக்
கடவுளர் கடந்ததல வழுதழுது பேய்போற்
கருத்திலெழு கின்ற வெல்லாம்
என்னதறி யாமையறி வென்னுமிரு பகுதியா
லீட்டுதமி ழென்ற மிழினுக்
கின்னல்பக ராதுலக மாராமை மேலிட்
டிருத்தலா லித்த மிழையே
சொன்னவழி யாவனவன் முத்தனித் திகனெனாத்
தோய்ந்த நெறியே படித்தீர்
சொல்லுமென வவர்க்கள் சொன்னவகை யிற்சிறிது
தோய்ந்தகுண சாந்த னெனவே
பின்னல்பெற வேசொல்ல வச்சொல்கேட் டடிமையனாய்
விகசிப்ப தெந்த நாளோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே. (அ)

பொற்பினொடு வைககாலில் வள்ளுநர் படைத்தலாற்
போந்திடை யொடுக்க முறலாற்
பொலிவிலா வெண்ணீறு பூசியே யருள்கொண்டு
பூரித்த வெண்ணீர் மையால்
எற்பட விளங்குகக னத்திலிமை யாவிழி
யிசைந்துமே ஞேக்க முறலா

விர்வுபாக விருளான கனதந்தி படநூறி
    யிதயங் களித்திடுத லாற்
பற்பல விதங்கொண்ட புலிகலையி னுரியது
    படைத்துப் ப்ரதாப முறலாற்
பனிவெயில்கள் புகுதாம னெடியவான் றொடர்நெடிய
    பருமர வனங்க ளாரும்
வெற்பினிடை யுறைதலாற் றவராச சிங்கமென
    மிக்கோ ருண்மைப்புகழ்வர் காண்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
    வித்தகச் சித்தர் கணமே. (௯)

கல்லாத பேர்களே நல்லவர்க ணல்லவர்கள்
    கற்றுமறி வில்லா தவென்
கர்மத்தை யென்சொல்வேன் மதியையென் சொல்லுவேன்
    கைவல்ய ஞான நீதி
கல்லோ ருரைக்கிலோ கர்மமுக் கியமென்று
    நாட்டுவேன் கர்ம மொருவ
ஞட்டிஞ லோபறைய ஞானமுக் கியமென்று
    நவிலுவேன் வடமொழி யிலே
வல்லா ரொருத்தன்வர வுந்த்ரா விடத்திலே
    வந்ததா விவக ரிப்பேன்
வல்லதமி ழறிஞர்வரி னங்ஙனே வடமொழியின்
    வசனங்கள் சிறிது புகல்வேன்
வெல்லாம லெவரையு மருட்டிவிட வகைவந்த
    வித்தையென் முத்தி தருமோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
    வித்தகச் சித்தர் கணமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# ஆனந்தமானபரம்.

கொல்லாமை யெத்தனை குணக்கேட்டை நீக்குமக்
குணமொன்று மொன்றி லேன்பாற்
கோரமெத் தனைபக்ஷ பாதமெத் தனைவன்
குணங்களெத் தனைகொடிய பாழ்ங்
கல்லாமை யெத்தனை யகந்தையெத் தனைமனக்
கள்ளமெத் தனையுள்ள சற்
காரியஞ் சொல்லிடினு மறியாமை யெத்தனை
கதிக்கென் றமைத்த வருளிற்
செல்லாமை யெத்தனைவிர் தாகோஷ்டி யென்னிலோ
செல்வதெத் தனைமு யற்சி
சிந்தையெத் தனைசலன மிந்த்ரசா லம்போன்ற
தேகத்தில் வாஞ்சை முதலாய்
அல்லாமை யெத்தனை யமைத்தனை யுனக்கடிமை
யானே னிவைக்கு மாளோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மான பரமே. (௫)

தெருளாகி மருளாகி யுழலுமன மாய்மனஞ்
சேர்ந்துவளர் சித்தாகி யச்
சித்தெலாஞ் சூழ்ந்தசிவ சித்தாய் விசித்ரமாய்த்
திரமாகி நாநா விதப்
பொருளாகி யப்பொருளை யறிபொறியு மாகியைம்
புலனுமா யைம்பூ தமாய்ப்
புறமுமா யகமுமாய்த் தூரஞ் சமீபமாய்ப்
போக்கொடு வரத்து மாகி
இருளாகி யொளியாகி நன்மைதீ மையுமாகி
யின்றாகி நாளை யாகி
யென்றுமா யொன்றுமாய்ப் பலவுமா யாவுமா
யிவையல்ல வாய நின்னை

அருளாகி நின்றவர்க ளறிவதல் லாலொருவ
ரறிவதற் கெளிதா குமோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மான பரமே. (௨)

பாருருவம் நீர்க்கக் தொடுக்கவறி வார்சாண்
வயிற்றின் பொருட்ட தாக
பாரண்டமும் விண்டமு மொன்றி மன துழல்
மாலாகி நிற்க வறிவார்
வேறுபடு வேடங்கள் கொள்ளவறி வாரொன்றை
மெணமெணன் றகம்வே றதாம்
வித்தையறி வாரெமைப் போலவே சந்தைபோன்
மெய்ந்நூல் விரிக்க வறிவார்
சீறுபுலி போற்சீறி மூச்சைப் பிடித்துவிழி
செக்கச் சிவக்க வறிவார்
சிரமென்று தந்தம் மதத்தையே தாமதச்
செய்கைகொடு முளற வறிவார்
ஆறுசம யங்கடொறும் வேறுவே றாகவிளை
யாடுமுனை யாவ ரறிவார்
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மான பரமே. (௩)

காயிலை யுதிர்ந்தகனி சருகுபுனன் மண்டிய
கடும்பசி தனக்க டைத்துங்
கால்வரையின் முழையிற் கருங்கல்போ லசையாது
கண்மூடி நெடிதி ருந்தும்
தீயினிடை வைகியுந் தோயமதின் மூழ்கியுந்
தேகங்க ளென்பெ லும்பாய்த்
தெரியநின் றுஞ்சென்னி மயிர்கள்கூ டாக்குருவி
தெற்றவெய்யி லூடி ருந்தும்
வாயுவை யடக்கியு மனதினை யடக்கியு

மௌனத்தி லேயிருந்து
மதிமண்டலத்திலே கனல்செல்ல வமுதுண்டு
வனமூ டிருந்து மறிஞர்
ஆயுமறை முடிவான வருணடி ஞரடிமை
யகிலத்தை நாடன் முறையோ
வண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மான பரமே. (௪)

சுத்தமு மசுத்தமுந் துக்கசுக போதமுந்
தொந்தமுட னிர்த்தொந் தமும்
ஸ்தூலமொடு சூக்ஷமு மாசையு நிராசையுஞ்
சொல்லுமொரு சொல்லின் முடிவும்
பெத்தமொடு முத்தியும் பாவமொட பாவமும்
பேதமொட பேத நிலையும்
பெருமையொடு சிறுமையு மருமையொட மெளிமையும்
பெண்ணினுட னாணு மற்று
நித்தமு மனித்தமு மஞ்சனநி ரஞ்சனமு
நிஷ்களமு நிகழ்ச களமும்
நீதியும நீதியு மாதியொட நாதியு
நிர்விஷய விஷய வடிவும்
அத்தனையு நீயலதெ னத்தனையு மில்லையெனின்
யாங்களுனை யன்றி யுண்டோ
வண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மான பரமே. (௫)

காராரு மாணவக் காட்டைக் களைந்தறக்
கண்டகங் கார மென்னுங்
கல்லைப் பிளந்துநெஞ் சகமான பூமிவெளி
காணத் திருத்தி மேன்மேற்
பாராதி யறியாத மோனமாம் வித்தைப்
பதித்தன்பு நீரா கவே

பாய்ச்சியது பயிராகு மட்டுமா மாயையவன்
பறவையயனு காத வண்ண
போக நின்றவிலை போகம் புசித்துய்ந்த
நின்னன்பர் கூட்ட மெய்த
நிலையின் பழக்குர் முன்னின்று காப்பதே
நின்னருட் பார மென்றும்
ஆராரு மறியாத சூதான வெளியில்வெளி
யாநின்ற துரிய மயமே
யண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மான பரமே. (௬)

வாருதி பூதமா யகிலாண்ட கோடியாய்
மலையாகி வளைக டலுமாய்
மதியாகி யிரவியாய் மற்றுள வெலாமாகி
வான்கருணை வெள்ள மாகி
நாருகி நின்றவனு நீயாகி நின்றிடவு
நானென்ப தற்றி டாதே
நானு னெனக்குளறி நானு விகாரியாய்
[illegible]
போரு திட்டவலி வெல்லவெளி தோபகற்
பொழுதுபுகு முன்கண் மூடிப்
பேய்த்துயிற்கொள் வார்க்கிவை [illegible]
போதிப்ப தெந்த நெறியை
ஆறாறு மென்கொடுமை யநியாய மநியாய
மார்பா லெடுத்து மொழிவே
னண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மான பரமே. (௭)

போயினேன் புலையினேன் கொலையினேன் [illegible]
புலப்பட வறிந்து நிலையாப்
புன்மையேன் கல்லாத நன்மையே னென்மையே

பொருளலாப் பொருளை நாடும்
பொய்யனேன் வெகுளியேன் வெறியனேன் சிறியனேன்
வினையினே னென்றென் னைநீ
விட்டுவிட நினைவையேற் றட்டழிவ தல்லாது
வேறுகதி யேது புகலாய்
துய்யனே மெய்யனே யுயிரினுக் குயிரான
துணைவனே யிணையொன் றிலாத்
துரியனே துரியமுங் காணுவ தீதனே
சுருதிமுடி மீதிருந்த
தூயனே யப்பனே யெனுமறிஞ ரறிவைவிட்
டகலாத கருணை வடிவே
யண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மான பரமே. (அ)

எத்தனை விதங்கடான் கற்றுங் கேட்கினுமென்
னிதயமு மொடுங்க வில்லை
யானெனு மகந்தைதா னெள்ளளவு மாறவிலை
யாதினும் மபிமான மென்
சித்தமிசை குடிகொண்ட தையையா வாக்கமென்
சென்மத்து நானறிகி லேன்
சீலமொடு தவவிரத மொருகனவி லாயினுந்
தெரிசனங் கண்டு மறியேன்
பொய்த்தமொழி யல்லான் மருந்துக்கு மெய்ம்மொழி
புகன்றிடேன் பிறர்கேட் கவே
போதிப்ப தல்லாது சும்மா விருந்தருள்
பொருந்திடாப் பேதை நானே
அத்தனை குணக்கேடர் கண்டதாக் கேட்டதா
வவனிமிசை யுண்டோ சொலா
யண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மான பரமே. (௯)

எக்கால முந்தனக் கென்னவொரு செயலிலா
     வேழைநீ யென்றிருந்திட்
[illegible]
     யெற்றுமை தென்ற வன்றே
[illegible]
     பொய்யுடலை மெய்யென் னனும்
பொய்யுறவு பற்றலும் பொய்யாகு நானென்னல்
     பொய்யிலும் பொய்யா கையான்
[illegible]
     வந்தேற வழியு மில்லை
மனையில்லை யம்மனைத் தினையில்லை வேறுமொரு
     வரவில்லை போக்கு மில்லை
அக்கால மிக்கால மென்பதிலை யெல்லா
     மத்தமய மான தன்றே
வண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
     யானந்த மான பரமே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

# சு க வா ரி.

---

இன்னமுது கனிபாகு கற்கண்டு சீனிதே
     னென்றுருசித் திடவலிய வந்
[illegible]
     ரிடையறு துருகி நாடி
உன்னரிய கருத்தவிழ வுரைகுளறி யுடலெங்கு
     மோய்ந்தயர்ந் தவச மாகி
யுணர்வரிய பேரின்ப வநுபூதி யுணர்விலே
     யுணர்வார்க ளுள்ள படிகாண்

கன்னிகை யொருத்திசிற் றின்பம்வேம் பென்னினுங்
    கைக்கொள்வள் பக்குவத்திற்
கணவனருள் பெறின்முனே சொன்னவா றென்னெனக்
    கருதிநகை யாவ ளதுபோற்
சொன்னபடி கேட்குமிப் பேதைக்கு நின்கருணை
    தோற்றிற் சுகாரம்ப மாஞ்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
    சோதியே சுகவா ரியே. (௧)

அன்பின்வழி யறியாத வென்னைத் தொடர்ந்தென்னை
    யறியாத பக்குவத்தே
யாசைப் பெருக்கைப் பெருக்கிக் கொடுத்துநா
    னற்றே னலந்தே னென
என்புலமயங்கவே பித்தேற்றி விட்டா
    யிரங்கியொரு வழி யாயினு
மின்பவெள மாகவுந் துள்ளங் களிக்கவே
    யெனைநீ கலந்த துண்டோ
இன்பருவ மலருக்கு மணமுண்டு வண்டுண்டு
    தண்முகை தனக்கு முண்டோ
தமியனேற் கிவ்வணந் திருவுள மிரங்காத
    தன்மையாற் றனியி ருந்து
துன்பமுறி னெங்ஙனே யழியாத நின்னன்பர்
    சுகம்வந்து வாய்க்கு முறையாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
    சோதியே சுகவா ரியே. (௨)

கல்லேனு மையவொரு காலத்தி லுருகுமென்
    கன்னெஞ்ச முருக விலையே
கருணைக் கிணங்காத வன்மையையு நான்முகன்
    கற்பிக்க வொருக டவுளோ
வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனும்பெரு

வழக்குக் கிழக்கு முண்டோ
வானமாய் நின்றின்ப மழையா யிரங்கியெனை
வாழ்விப்ப துன்ப ரங்காண்
பொல்லாத சேயெனிற் றாய்தள்ள லிதமோ
புகலிடம் பிறிது முண்டோ
பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட் கயலுமாய்ப்
புன்மையே னாவ னந்தோ
சொல்லொணா முழக்கலோ சுகமில்லை மௌனியாய்ச்
சும்மா விருக்க வருளாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவா ரியே. (௩)

அன்பெலா மெக்குடைய ரோமஞ் சிலிர்ப்பவுட
லிளகமன தழலின் மெழுகா
யிடையறா துருகவரு மழைபோ லிரங்கியே
யிருவிழிக ணீரி றைப்ப
அன்பினான் மூர்ச்சித்த வன்பருக் கங்ஙனே
யமிர்த சஞ்சீவி போல்வந்
தானந்த மழைபொழிவை யுள்ளன்பி லாதவெனை
யார்க்காக வடிமை கொண்டாய்
புன்புலா லுயிர்தோ னரம்பென்பு மொய்த்திடு
புலைக்குடிலி லருவ ருப்புப்
பொருளல்ல வேயிதனை மெய்யென்று நம்பியென்
புந்திசெலு மோபாழிலே
துன்பமா யலையவோ வுலகநடை யையவொரு
சொப்பனத் திலும்வேண் டிலேன்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவா ரியே. (௪)

வெந்நீர் பொருதெறுடல் காலின்முட் டைக்கவும்
வெடுக்கென் றறைத்தெ டுத்தால்

விழியிமைத் தங்கனே தன்னருளை நாடுவேன்
வேறொன்றை யொருவர் கொல்லின்
அந்நேர மையோவென் முகம்வாடி நிற்பதுவு
மையநின் னருள றியுமே
யானு மெத்தப் பசித்தவனி யானென்னை
யாண்டநீ கைவி டாதே
யிந்நேர மென்றிலை யுட்சுமைய தாகவு
மெடுத்தா லிறக்க வென்றே
யெங்கெங்கு மொருநீர்மை யாயமுண் டாயினு
மிறைஞ்சுசுக ராதி யான
தொன்னீர்மை யாளர்க்கு மானுடம் வகுத்தவரு
டுணையென்று நம்பு கின்றேன்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவா ரியே. (௬)

பற்றுவன வற்றிடு நிராசையென் குருபூமி
பற்றிப் பிடிக்கு மிபோகப்
பாங்கிற் பிராணலய மென்னுமொரு பூமியிவை
பற்றின் மனமறு மென்னவே
கற்றையஞ் சடைமௌனி தானே கனிந்தகல்
கனிவிக்க வந்த கனிபோற்
கண்டதிந் நெறியெனத் திருவுளக் கனிவினொடு
கனிவாய் திறந்து மொன்றைப்
பெற்றவனு மல்லேன் பெருதவனு மல்லேன்
பெருக்கத் தவித்து ளறியே
பெண்ணீர்மை யென்னவிரு கண்ணீ ரிறைத்துநான்
பேய்போ லிருக்க வுலகஞ்
சுற்றிநகை செய்யவோ புலையவிட் டாயெனிற்
சொல்லவினி வாயு முண்டோ

சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவா ரியே. (சு)

அரும்பொனே மணியேயெ னன்பேயெ னன்பான
வறிவேயெ னறிவி லூறு
மானந்த வெள்ளமே யென்றென்று பாடினே
னாடினே னாடி நாடி.
விரும்பியே கூவினே னுலறினே னலறினேன்
மெய்சிலிர்த் திருகை கூப்பி
விண்மாரி யெனவென்று கண்மாரி பெய்யவே
வேசற் றயர்ந்தே னியான்
இரும்புநேர் நெஞ்சகக் கள்வனு நருளுமுனை
யிடைவிட்டு நின்ற துண்டோ
என்குறை யன்றுநா னுன்னடிமை யல்லவோ
யாதேனு மறியா வெறுந்
துரும்பனே னென்னினுங் கைவிடுத னீதியோ
தொண்டரொடு கூட்டு கண்டாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவா ரியே. (எ)

பாராதி யண்டங்க ளாத்தனையும் வைக்கின்ற
பரவெளியி னுண்மை காட்டிப்
பற்றுமன வெளிகாட்டி மனவெளியி னிற்றோய்ந்த
பாவியேன் பரிசு காட்டித்
தாராள மாய்நிற்க நிச்சிந்தை காட்டிச்
சதாகால நிஷ்டை யெனவே
சுகசநிலை காட்டினை சுகாதீத நிலயந்
தனைக்காட்ட நாள் செல்லுமோ
காரார வெண்ணரு மனந்தகோ டிகணின்று
காலூன்றி மழைபொழிதல் போற்
கால்வீசி மின்னிப் படர்ந்துபர வெளியெலாந்

கம்மியா னந்த வெள்ளஞ்
சோராது பொழியவே கருணையின் முழங்கியே
தொண்டரைக் கூவு முகிலே
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவா ரியே. (அ)

பேதித்த சமயமோ வொன்றுசொன படியொன்று
பேசாது துறவா கியே
பேசாத பெரியோர்க ளிருவிகற் பத்திறற்
பேசார்கள் பரம குருவாய்ப்
போதித்த முக்கணிறை நேர்மையாய்க் கைக்கொண்டு
போதிப்ப தாச்சறிவிலே
போக்குவர வறவின்ப நீக்கமற வசனமாப்
போதிப்ப தெவரை யனே
சாதித்த சாதனமு மியோகியர்க ணமதென்று
சங்கிப்ப ராத லாலே
தன்னிலே தானு மயர்ந்துவிடு வோமெனத்
தனியிருந் திடினங்ங னே
சோதிக்க மனமான தனியேவி டிலடிமை
சுகமாவ தெப்படி சொலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவா ரியே. (௯)

அண்டமுடி தன்னிலோ பகிரண்ட மதனிலோ
வலரிமண் டலநடுவி லோ
அளறுநடுவி லோவுயிர்த மதிநடுவி லோவன்ப
ரகமுருகி மலர்க டுவித்
தெண்டனிட்ட வருமூர்த்தி சிலையிலோ திக்குத்
திகந்தத்தி லோவெளியி லோ
திகழ்விந்து நாதநிலை தன்னிலோ வேதாந்த
சித்தாந்த நிலைதன் னிலோ

கண்டபல பொருளிலோ காணாத நிலையெனக்
　　கண்டகுறி யமதனிலோ
காலமொரு மூன்றிலோ பிறவிநிலை தன்னிலோ
　　கருவிகர ணங்களோய்ந்த
தொண்டர்க ளிடத்திலோ நீவீற் றிருப்பது
　　தொழும்பனேற் குளவு புகலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
　　சோதியே சுகவா ரியே. (௧௦)

நித்தமுன் கருணைக் குரித்தாகு காலெனவு
　　மென்னிதய மெளனவாட் டுதே
பித்தென்று சொல்லுவேன் முன்னெறியின் மலைவுறவு
　　மிற்றைவரை யாது பெற்றேன்
பந்தமா னதிலிட்ட மெழுகாகி யுள்ளம்
　　பதைத்துப் பதைத்து ருகவோ
பரமசுக மாவது பொறுப்பரிய துயரமாய்ப்
　　பலகாலு மூர்ச்சிப் பதோ
சிந்தையா னதுமதியை யென்னறிவி[illegible]ர்ன
　　தெய்வநீ யன்றி யுளதோ
தேசநிலை யல்லலே யுடைகப்பல் [illegible]யலாய்த்
　　திரையாழி யூடு செலுமோ
சொந்தமா யாண்டநீ யறியார்கள் போலவே
　　துன்பத்தி லாழ்த்தன் முறையோ
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
　　சோதியே சுகவா ரியே. (௧௧)

எந்நாளு முடலிலே யுயிரா முனைப்போ
　　லிருக்கவில்லை யோமன தெனு
மியானுமென் னட்பாம் பிராணனு மெமைச்சடம
　　தென்றுனைச் சித்தென்று மே
அந்நா ளிலெவ்வேறு பிரித்தா னதைக்கேட்ட

வன்றுமுத லின்று வரையு
மநியாய மாயையெமை யடக்கிக் குறுக்கே
யடர்ந்தரசு பண்ணி யெங்கண்
முன்னாக நீயென்ன கோட்டைகொண் டாயென்று
மூடமன மிகவு மேசு
மூண்டெரியு மனலிட்ட மெழுகா யுளங்கருகன்
முறைமையோ பதினா யிரஞ்
சொன்னாலு நின்னரு ளிரங்கவிலை யேயினிச்
சுகம்வருவ தெப்படி சொல்லாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவா ரியே. (கஉ.)

திருச்சிற்றம்பலம்.

---

# எங்குநிறைகின்றபொருள்.

---

அவனன்றி யோரணுவு மசையாதெ னும்பெரிய
வாப்தர்மொழி யொன்று கண்டா
லறிவாவ தேதுசில வறியாமை யேதிவை
யறிந்தார்க ளறியார் களார்
மௌனமொ டிருந்தா ரென்போ லுடம்பெலாம்
வாயாய்ப் பிதற்று மவரார்
மனதெனவு மொருமாயை யெங்கேயிருந்து வரும்
வன்மையொ டிரக்க மெங்கே
புனிதம் படைப்பதென் கர்த்தவிய மெவ்விடம்
பூதபே தங்க ளெவ்விடம்
பொய்மெயித மின்றிமேல் வருநன்மை தீமையொடு
பொறைபொறு மையுமெவ் விடம்

எவர்சிறிய ரெவர்பெரிய ரெவருறவ ரெவர்பகைஞர்
யாதுமுனை யன்றி யுண்டோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே. (க)

அன்னே யனேயெனுஞ் சிலசமய நின்னையே
யையாவை யாவென் னவே
அலறிடுஞ் சிலசமய மல்லாது பேய்போல
வலறியே யொன்று மிலவாய்ப்
பின்னேது மறியாம லொன்றைவிட் டொன்றைப்
பிதற்றிடுஞ் சிலசமய மேற்
பேசரிய வொளியென்றும் வெளியென்று நாதாதி
பிறவுமே நிலய மென்றுந்
தன்னே ரிலாததோ ரணுவென்று மூவிதத்
தன்மையாங் கால மென்றுஞ்
சாற்றிடுஞ் சிலசமய மிவையாகி வேறதாய்ச்
சதாஞான வானந்த மாய்
என்னை யெனைகருணை விளையாட் டிருந்தவா
றெம்மனோர் புகல வெளிதோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே. (உ)

வேதமுட னாகம புராணமிதி காசமுதல்
வேறுமுள கலைக ளெல்லாம்
மிக்காக வத்துவித துவிதமார்க் கத்தையே
விரிவா வெடுத்து ரைக்கும்
ஓதரிய துவிதமே யத்துவித ஞானத்தை
யுண்டுபணு ஞான மாகும்
மூகமறு பவவசன மூன்றுக்கு மொவ்வுமீ
ருபயவா திகள் சம்மதம்
ஆதலி னெனக்கினிச் சரியையா திகள்போது

மியாதொன்று பாவிக்க நா
னதுவாத லாலுன்னை நானென்று பாவிக்கி
னத்துவித மார்க்க முறலாம்
னதுபா வித்திடு மதுவாகி வந்தருள்செ
யெந்தைநீ குறையு முண்டோ
விகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே. (௩)

சொல்லாணை யிற்சற்றும் வாராத பிள்ளையைத்
தொட்டில்வைத் தாட்டியாட்டித்
தொடையினைக் கிள்ளல்போற் சங்கற்ப மொன்றிற
றொடுக்குந் தொடுத் தழிக்கும்
பொல்லாத வாதனை யெனுஞ்சப்த பூமியிடை
போந்துதலை சுற்றி யாடும்
புருஷனி லடங்காத பூவைபோற் றனே
புறம்போந்து சஞ்ச ரிக்கும்
கல்லோ டிரும்புக்கு மிகவன்மை காட்டிடுங்
காணாது கேட்ட வெல்லாங்
கண்டதாக் காட்டியே யுறவாக் கருக்கிடுங்
கபடநா டகசா லமோ
எல்லாமும் வலதிந்த மனமாயை யேழையா
மென்னு லடக்க வசமோ
விகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே. (௪)

கண்ணார நீர்மல்கி யுள்ளநெக் குருகாத
கள்ளனே னானுமோ
கைகுவித் தாடியும் பாடியும் விடாமலே
கண்பனித் தாரை காட்டி
அன்றே பரஞ்சோதி யப்பா வுனக்கடிமை
யானெனவு மேலெழுந்த

வன்பாகி நாடக நடித்ததோ குறைவில்லை
யகிலமுஞ் சிறிதறியு மேற்
றன்னுரு நின்னதரு ளறியாத தல்லவே
சற்றேனு மினிதி ரங்கிச்
சாசுவத முத்திநிலை யீதென் றுணர்த்தியே
சகசநிலை தந்து வேறொன்
றெண்ணாம லுள்ளபடி சுகமா யிருக்கவே
யேழையேற் கருள்செய் கண்டாய்
இகபர மிரண்டினினு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே. (ரு)

ஆகமா னதுகோடி கூடிநின் றுலுமொரு
கல்லின்முன் னெதிர்நிற்கு மோ
ஐயமா னதுகோடி முன்னேசெய் தாலுநின்
கருணைப் பிரவாக வருளைத்
தாகமாய் நாடினரை வாதிக்க வல்லதோ
தமியனேற் கருட்டாக மோ
சற்றுமிலை யென்பதுவும் வெளியாச்சு வினையெலாஞ்
சங்கேத மாய்க் கூடியே
தேகமா னதைமிகவும் வாட்டுதே துன்பங்கள்
சேராமல் யோக மார்க்க
சித்தியோ வரவில்லை சகசநிட் டைக்குமென்
சிந்தைக்கும் வெகுதூ ரநான்
ஏகமாய் நின்னோ டிருக்குநா ளெந்தநா
ளிந்நாளின் முற்று றாதோ
இகபர மிரண்டினினு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே. (சா)

ஒருமையுட னாகியே யல்லலற நின்னருளி
லொருவனான் வந்தி ருக்கி
னுலகம் பொருததோ மாயா விசித்ரமென

வோயுமோ விடமில்லை யோ
அருளுடைய நின்னன்பர் சங்கைசெய் திடுவரோ
வலதுகிர்த் தியகர்த்த ரா
யகிலம் படைத்தெம்மை யாள்கின்ற பேர்சில
ரடாதென்ப ரோவ கன்ற
பெருமைபெறு பூரணங் குறையுமோ பூதங்கள்
பேய்க்கோல மாய்வி தண்டை
பேசுமோ வலதுதான் பரிபாக காலம்
பிறக்கவில்லை யோதொல்லை யாம்
இருமைசெறி சடவினை யெதிர்த்துவாய் பேசுமோ
வேதுளவு சிறிது புகலா
யிகபர மிரண்டிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே. (எ)

நில்லாது தேகமெனு நினைவுண்டு தேகநிலை
நின்றிடவு மௌனி யாகி
நேரே யுபாயமொன் றருளினையை யோவிதனை
நின்றனுட் டிக்க வென்றாற்
கல்லாத மனமோ வொடுங்கியுப ரதிபெறக்
காணவில்லை யாக்கை யாலே
கையேற் றுணும்புசிப் பொவ்வாதெ நாளுமுன்
காட்சியி லிருந்து கொண்டு
வல்லாள ரியம நியமாதி மேற்கொண்ட
மாதவர்க் கேவல் செய்து
மனதின் படிக்கெலாஞ் சித்திபெற லாஞானம்
வாய்க்குமொரு மனுவெ னக்கிங்
கில்லாமை யொன்றினையு மில்லாமை யாக்கவே
யிப்போ திரங்கு கண்டா
யிகபர மிரண்டிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே. (அ)

மரவுரி யுடுத்துமலை வனநெற் கொறித்துமுதிர்
வனசருகு வாயில் வந்தால்
வன்பசி தவிர்த்துமனல் வெயிலாதி மழையால்
வருந்தியும் மூலவ னலைச்
சிரமள வெழுப்பிய நீரினிடை மூழ்கியுந்
தேகநம தல்ல வென்று
சிற்சுகவ பேக்ஷையாய் நின்னன்பர் யோகஞ்
செலுத்தினா ரியாம் பாவியேம்
ஷீர்வுமறு சுவையினொடு வேண்டுவ புசித்தரையில்
வேண்டுவ வெலா முடுத்து
மேடைமா ளிகையாதி வீட்டினிடை வைகியே
வேறொரு வருத்த மின்றி
இந்துமுக லேழையர்கள் சையோக மாயினோ
மெப்படி பிழைப்ப துரையா
யிகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே. (௬)

முத்தனைய மூரலும் பவளவா யின்சொலு
முகத்திலகு பசுமஞ் சளு
மூர்ச்சிக்க விரகசன் னதமேற்ற விருகும்ப
முலையின் மணி மாலை நால
வைத்தெமை மயக்கியிரு கண்வலையை வீசியே
மாயா விலாச மோக
வாரிதியி லாழ்த்திடும் பாழான சிற்றிடை
மடந்தையர்கள் சிற்றின்ப மோ
புத்தமிர்த போகம் புசித்துவிழி யிமையாத
பொன்னாட்டும் வந்த தென்றாற்
போராட்ட மல்லவோ பேரின்ப முத்தியிப்
பூமியி லிருந்து காண
எத்தனை விகாதம்வரு மென்றுசுகர் சென்றநெறி

யிவ்வுலக மறியா ததோ
விகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிற்றை கின்ற பொருளே. (௧0)

உன்னிலையு மென்னிலையு மொருநிலை யெனக்கிடத்
துளறிடு மவத்தை யாகி
யுருவுதான் காட்டாத வாணவமு மொளிகண்
டொளிக்கின்ற விருளென் னவே
தன்னிலைமை காட்டா தொருங்கவிரு வினையிருட்
ருவசுக துக்க வேலை
தட்டழிய முற்றுமில் லாமாயை யதனுற்
றடித்தகில பேத மான
முன்னிலை யொழிந்திட வகண்டதா காரமாய்
மூதறிவு மேலு திப்ப
முன்பின்னொன் றின்மோன நிப்பக்க மென்னுமன்
முற்றுமா னந்த நிறைவே
என்னிலைமை யாய்நிற்க வியல்புகூ ருருள்வடிவ
மெந்நாளும் வாழி வாழி
யிகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

# சச்சிதானந்தசிவம்.

பாராதி ககனப் பரப்புமுண் டோவென்று
படர்வெளிய தாகி யெழுநாப்
பரிதிமதி காணுச் சுயஞ்சோதி யாயண்ட
பகிரண்ட வுயிரை வைக்கும்
நேராக வறிவா யகண்டமா யேகமாய்

நித்தமாய் நிர்த்தொந்த மாய்
நிர்க்குண விலாசமாய் வாக்குமன மணுகாத
நிர்மலா னந்த மயமாய்ப்
போது நிற்றிங் சும்மா விருந்துதான்
பேரின்ப மெய்திடாமற்
பேயனைத் யண்டியே தாயிலாப் பிள்ளைபோற்
பித்தாக வோமனதை நான்
சாராத படியறிவி னிருவிகற் பாங்கமாஞ்
சாசுவத நிட்டை யருளாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்த சிவமே. (௧)

நடக்கொடு முலைக்காதி நிக்கிளை யழக்கூடு
கொள்ளல்போ லைந்து பூதங்
கூடுஞ் சுருங்கிலைச் சாலேக மொன்பது
குலாவுநடை மனையை நாளும்
மடக்கயிறு வெள்ளரம் பாவென்பு தசையிறை
மதவேள் விழா நடத்த
வைக்கின்ற கைத்தேரை வெண்ணீர்செ நீர்கனிர்
மலநீர்பு ணீரி றைக்கும்
விடக்குத் துருத்தியைக் கருமருந்துக் கூட்டை
வெட்ட வெட்டத் தளிர்க்கும்
வேட்கைமர முறுகின்ற சுடுகாட்டை முடிவிலே
மெய்போ லிருந்து பொய்யாஞ்
சடக்கைச் சடக்கெனச் சதமென்று சின்மயந்
தானாகி நிற்ப தென்றோ
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்த சிவமே. (௨)

பாசத்தினாற் கவிதை பாடிப் படிக்கவோ
பத்திநெறி யில்லை வேத

பாராய ணப்பனுவன் மூவர்செய் பனுவலது
பகரவோ விசையு மில்லை
யோகத்தி லேசிறிது முயலவென் றுற்றேக
மொவ்வாதி லூண் வெறுத்தா
லுயிர்வெறுத் திடலொக்கு மல்லாது கிரியைக
ளுபாயத்தி னுற்செய்ய வோ
மோகத்திலே சிறிது மொழியவிலை மெய்ஞ்ஞான
மோனத்தி னிற்க வென்றுன்
முற்றுது பரிபாக சத்திக ளநேகநின்
மூதறிவி லேயெ ழுந்த
தாகத்தி லேவாய்க்கு மமிர்தப்ர வாகமே
தன்னந் தனிப்பெ ருமையே
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்த சிவமே. (௩)

இமையளவு போதையொரு கற்பகா லம்பண்ணு
மிவ்வுலக மெவ்வுலக மோ
வென்றெண்ணம் வருவிக்கு மாதர்சிற் றின்பமோ
வென்னின்மக மேரு வாக்கிச்
சுமைபெறு மென்றுதான் சும்மாடு மாயெமைச்
சுமையாளு மாக்கி நாளுந்
துர்ப்புத்தி பண்ணியுள நற்புத்தி யாவையுஞ்
சூறையிட் டிந்த்ர சாலம்
அமைபெறவொரு கூத்துஞ் சமைந்தாடு மனமாயை
யம்மம்ம வெல்ல வெளிதோ
அருள்பெற்ற பேர்க்கெலா மொளிபெற்று நிற்குமீ
தருளோ வலாது மருளோ
சமயநெறி காணாத சாக்ஷிநீ சூக்ஷமமாத்
தமியனேற் குளவு புகலாய்

சர்வபரி பூரண வகண்டதத் துவமான
    சச்சிதா னந்த சிவமே. (ச)

இனியே தெமக்குனருள் வருமோ வெனக்கருதி
    யேங்குதே நெஞ்ச மையோ
இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்
    றெண்ணவோ திடமில் லையே
அனியாய மாயிந்த வுடலைநா னென்றுவரு
    மந்தகற் காளாக வோ
வாடித் திரிந்துநான் கற்றதுங் கேட்டது
    மவலமாய்ப் போதனன் றோ
கனியேனும் வறியசெங் காயேனு முதிர்சருகு
    கந்தமூ லங்க ளேனுங்
கனல்வாதை வந்தெய்தி னள்ளிப் புசித்துநான்
    கண்மூடி மௌனி யாகித்
தனியே யிருப்பதற் கெண்ணினே னெண்ணமிது
    சாமிநீ யறியாத தோ
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
    சச்சிதா னந்த சிவமே. (ரு)

மத்தமத கரிமுகிற் குலமென்ன நின்றிலகு
    வாயிலுடன் மதியகடு தோய்
மாடகூ டச்சிகர மொய்த்தசந் திரகாந்த
    மணிமேடை யுச்சி மீது
முத்தமிழ் முழக்கமுடன் முத்தநகை யார்களொடு
    முத்துமுத் தாய்க்கு லாவி
மோகத் திருந்துமென் யோகத்தி னிலைநின்று
    மூச்சைப் பிடித்த டைத்துக்
கைத்தல நகப்படை விரித்தபுலி சிங்கமொடு
    கரடிநுழை நூழை கொண்ட
கானமலை யுச்சியிற் குகையூ டிருந்துமென்

கரதலா மலக மென்னச்
சத்தமற மோனநிலை பெற்றவர்க ளுப்வர்காண்
சனகாதி துணிவி தனறே
சர்வபரி பூரண் வகண்டதத் துவமான
சச்சிதா னந்த சிவமே. (௬)

கைத்தலம் விளங்குமொரு நெல்லியங் கனியெனக்
கண்டவே தாக மத்தின்
காட்சிபுரு டார்த்தமதின் மாட்சிபெறு முத்தியது
கருதி னனுமான மாதி
உத்திபல வாநிரு விகற்பமே யில்லையா
லொன்றோ டிரண்டென் னவோ
வுரையுமிலை நீயுமிலை நானுமிலை யென்பது
மேபாயநீ யுண்டு நானுஞ்
சித்தமுள தல்லவெனும்வசன நீயறிவை
தெரியார்க டெரிய வசமோ
செப்புநீக வலநீதி யொப்புவமை யுல்லவே
சின்முத்தி ராக்க மரபிற்
சத்தமற வெளியாண்ட குருமௌனி கையினற்
றமியனேற் குதவு பொருளே
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்த சிவமே. (௭)

காயாத மரமீது கல்லேறு செல்லுமோ
கடவுணீ யாங்க ளடியேங்
கர்மபந் தத்தினற் சன்மபந் தம்பெறக்
கற்பித்த தன்ன தருளே
வாயார வுண்டபேர் வாழ்த்துவது நொந்தபேர்
வைவது வு மெங்க ளுலக
[illegible] வைதிக வொழுங்குதீனை
வாழ்த்தினற் பெறு பேறுதான்

றயாது பெறுவரென முறையிட்ட தாற்பின்ன
ருளாறுவது கரும மன்று.
முயப்பநெறி யீதென்னி னுசிதநெறி யெந்தநெறி
யுலகிலே பிழைபொறுக்குந்
தாயாம கருணையு முனக்குண் டெனக்கினிச்
சஞ்சலங் கெடவருள்செய் வாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்த சிவமே. (அ)

இன்னம் பிறப்பதற் கிடமென்னோ னிவ்வுடல
மிறவா திருப்ப மூலத்
தெழுமங்கி யுயிர்தொழுகு மதிமண் டலத்திலுற
வென்னம்மை குண்ட லினியாற்
பின்னம் பிறக்காது சேயென வளர்த்திடப்
பேயேனை நல்க வேண்டும்
பிறவாத நெறியெனக் குண்டென்னி னிம்மையே
பேசுகர்ப் பூர தீபம்
மின்னும் படிக்கநன் டாகார வன்னைபால்
வினையேனை யொப்பு வித்து
விட்டுநெறி கட்டுடுதன் மிகவுமன் றிவையன்றி
விவகார முண்டென்னி லோ
தன்னந் தனிச்சிறிய னுற்றிலேன் போற்றிவளர்
சன்மார்க்க முத்தி முதலே
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்த சிவமே. (கூ)

வேதாவை யிவ்வணம் விதித்ததே தென்னினுன்
வினைப்பகுதி யென்ப னந்த
வினைபேச வறியாது நிற்கவிவை மனதால்
விளைந்ததான் மனதை நாடிற்
போதமே நிற்குமப் போதத்தை நாடிலோ

போதமு நிலைவி ளக்கம்
பொய்யென்று தெய்வமறை யாவுமே நீயென்று
போக்குவர வறநி கழ்த்தும்
ஆதார வாதேய முழுதுநீ யாதலா
லகலமீ தென்னை யாட்டி
யாடல்கண் டவனுநீ யாடுகின் றவனுநீ
யருளுநீ மௌன ஞான
தாதாவு நீபெற்ற தாய்தந்தை தாமுநீ
தமருநீ யாவுநீ காண்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்த சிவமே. (௧௦)

கோர்ந்தவிழ் மலர்ச்சோலை நன்னீழல் வைகிநுங்
குளிர்தீம் புனற்கை யள்ளிக்
கொள்ளுகினு மந்நீ ரிடைத்திளைத் தாடினுங்
குளிர்சந்த வாடை மடவார்
வந்துலவு கின்றதென முன்றிலிடை யலைவே
வசதிபெறு போதும் வெள்ளை
வட்டமதி பட்டப் பகற்போல நிலவுதர
மகிழ்போதும் வேலை யமுதம்
விந்தைபெற வறுசுவையில் வந்ததென வமுதுண்ணும்
வேளையிலு மாலை கந்தம்
வெள்ளிலை யடைக்காய் விரும்பிவேண் டியவண்ணம்
விளையாடி விழிது யிலினுஞ்
சந்ததமு நின்னருளை மறவா வரந்தந்து
தமியேனை ரக்ஷை புரிவாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்த சிவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

# தேசோமயானந்தம்.

மருமலர்ச் சோலைசெறி நன்னீழன் மலையாதி
மன்னுமுனி வர்க்கே வலாய்
மந்த்ரமா லிகைசொல்லு மியமநிய மாதியா
மார்க்கத்தி னின்று கொண்டு
கருமருவு காயத்தை நிர்மலம தாகவே
கமலா சனாதி சேர்த்துக்
காலைப் பிடித்தனலை யம்மைகுண் டலியடிக்
கலைமதியி னூடு தாக்கி
உருகின்ற வமிர்தத்தை யுண்டுண் டுறங்காம
லுணர்வான விழியை நாடி
ஒன்றோ டிரண்டெனாச் சமரச சொருபசுக
முற்றிடவென் மனதின் வண்ணந்
திருவருண் முடிக்கவித் தேகமொடு காண்பனோ
தேடரிய சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந் தமே. (௧)

இப்பிறவி யெனுமோ ரிருட்கடலின் மூழ்கிநா
னென்னுமொரு மகர வாய்ப்பட்
டிருவினை யெனுந்திரையி னெற்றுண்டு புற்புத
மெனக்கொங்கை வரிசை காட்டுந்
துப்பிதழ் மடந்தையர் மயற்சண்ட மாருதச்
சுழல்வந்து வந்த டிப்பச்
சோராத வாசையாங் கானாறு வானதி
சுரந்ததென மேலு மார்ப்பக்
கைப்பரிசு காரர்போ லறிவான வங்கமுங்
கைவிட்டு மதிம யங்கிக்
கள்ளவங் கக்காலர் வருவரென் றஞ்சியே
கண்ணருவி காட்டு மெளியேன்

செப்பரிய முத்தியாங் கரைசேர வுங்கருணை
செய்வையோ சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந் தமே. (உ

சந்தைதாய் தமர்தார மகவென்னு மிவையெலாஞ்
சந்தையிற் கூட்ட மிதிலோ
சந்தேக மில்லைமணி மாடமா ளிகைமேடை
சதுரங்க சேனை யுடனே
வந்ததோர் வாழ்வுமோ ரிந்த்ரசா லக்கோலம்
வஞ்சனை பொறாமை லோபம்
வைத்தமன மாங்கிருமி சேர்ந்தமல பாண்டமோ
வாஞ்சனையி லாத கனவே
எந்தநா ளுஞ்சரி யெனத்தேர்ந்து தேர்ந்துமே
யிரவுபக லில்லா விடத்
தேகமாய் நின்றநின் னருள்வெள்ள மீதிலே
யானென்ப தறவு மூழ்கிச்
சிந்தைதான் றெளியாது சுழலும்வகை யென்கொலோ
தேடரிய சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந் தமே. (ங

ஆடாம லோய்ந்திட்ட பம்பரம் போல்விசை
யடங்கி மனம்வீழ நேரே
யறியாமை யாகின்ற விருளகல விருளொளியு
மல்லா திருந்த வெளிபோற்
கோடா தெனைக்கண் டெனக்குணின்ற சாந்தவெளி
கூடியின் பாதீத மூங்
கூடினே னேசரியை கிரியையின் முயன்றுநெறி
கூடினே னேவல்ல னியான்
ஈடாக வேயாறு விட்டினி னிரம்பியே

யிலகிவளர் பிராண னென்னு
மிருதிதி யினைக்கட்டி யோகபர னாகாம
லேழைக் குடும்ப னாகித்
தேடா தழிக்கவொரு மதிவந்த தென்கொலோ
தேடரிய சத்தாகி யென்
சித்தநிலை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந் தமே. (ச)

பாடாது பாடிப் படித்தளவில் சமயமும்
பஞ்சுபடு சொல்ல னிவனைப்
பார்த்தோ பார்த்தோ வென்றுசபை கூடவும்
பரமார்த்த மிதுவென்ன வே
ஆடாது மாடிநெஞ் சுருகிநெக் காடவே
யமலமே யேக மேயெம்
மாதியே சோதியே யெங்குநிறை கடவுளே
யரசே யெனக்கூவி நான்
வாடாது வாடிமென் முகவாட்ட முங்கண்டு
வாடா வெனக்கருணை நீ
வைத்திடா வண்ணமே சங்கேத மாவிர்த
வன்மையை வளர்ப்பித்த தார்
தேடாது தேடுவோர் தேட்டற்ற தேட்டமே
தேடரிய சத்தாகி யென்
சித்தநிலை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந் தமே. (ரு)

பிரியாத தன்னருட் சிவஞானி யாய்வந்து
பேசரிய வாசி யாலே
பேரின்ப வுண்மையை யளித்தனையென் மனதறப்
பேரம்ப லக்க டவுளாய்
அறிவா யிருந்திடும் நாதவொலி காட்டியே
யமிர்தப் பிரவாக சித்தி

மின்போ லு மிடையொடியு மொடியுமென மொழிதல்போன்
மென்சிலம் பொலிக ளார்ப்ப
வீங்கிப் புடைத்துவிழு சுமையன்ன கொங்கைமட
மின்னார்கள் பின்னே வலால்
என்போ லலைந்தவர்கள் கற்றூர்கள் கல்லார்க
ளிருவர்களி லொருவ ருண்டோ
வென்செய்கே னம்மம்ம வென்பாவ மென்கொடுமை
யேதென் றெடுத்து மொழிவேன்
அன்பால் வியந்துருகி யடிப்பற்ற மரமென்ன
வடியிலே வீழ்ந்து வீழ்ந்தெம்
மடிகளே யுமதடிமை யாங்களெனு நால்வருக்
கறமாதி பொருளு ரைப்பத்
தென்பாலின் முகமாகி வடவா லிருக்கின்ற
செல்வமே சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந் தமே. (௯0)

புத்தமிர்த போகமுங் கற்பகநீ ழலிற்
பொலிவுற விருக்கு மியல்பும்
பொன்னுலகி லயிரா வதத்தேறு வரிசையும்
பூமண்ட லாதிக் கமும்
மத்தவெறி யினர்வேண்டு மாலென்று தள்ளவுமே
மாலுமொரு சுட்டு மறவே
வைக்கின்ற வைப்பாளன் மௌனதே சிகனென்ன
வந்தநின் னருள்வாழி காண்
சுத்தபரி பூரண வகண்டமே யேகமே
சுருதிமுடி வான பொருளே
சொல்லரிய வுயிரினிடை யங்கங்கு நின்றருள்
சுரந்துபொழி கருணை முகிலே
சித்தநிலை முத்திநிலை விளைகின்ற பூமியே

தேடரிய சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந் தமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

# சிற்சுகோதயவிலாசம்.

காக மோடுகழு கலகை நாய்நரிகள்
சுற்று சோறிடுது ருத்தியைக்
கால்இ ரண்டுநவ வாசல் பெற்றுவளர்
காம வேணடன சாலையை
மோக வாசைமுறி யிட்ட பெட்டியைமு
மலமி குந்தொழுகு கேணியை
மொய்த்து வெங்கிருமி தத்து கும்பியை
முடங்க லார்கிடை சரக்கினை
யாக விந்த்ர தனு மின்னை யொத்திலக
வேத மோதியகு லாலனார்
வினைய வெய்யதடி கார னையமன்
வந்த டிக்குமொரு மட்கலத்
தேக மானபொயை மெய்யெ னக்கருதி
யைய வையமிசை வாடவோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே. (க)

நாரிக ளோடுகுண மேது மின்றியன
லொழுக நின்றிடு மிரும்பனற்
கூடலின் றியது வாயி ருந்தபடி
கொடிய வாணவ வறைக்குளே
அறிவ தேதுமற வறிவி லாமைமய

மாயி ருக்குமெனை யருளினு
ளளவி லாததனு கரண மாதியை
யளித்த போதுனை யறிந்துநான்
பிறிவி லாதவண நின்றி டாதபடி
பலநி றங்கவரு முபலமாய்ப்
பெரிய மாயையி லழுந்தி நின்னது
ப்ரசாத நல்லருள் மறந்திடுஞ்
சிறிய னேனுமுனை வந்த ணைந்துசுக
மாயி ருப்பதினி யென்றுகாண்
டெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே. (உ)

ஐந்து பூதமொரு கான னீரென
வடங்க வந்தபெரு வானமே
யாதி யந்தநடு வேது மின்றியரு
ளாய்நிறைந் திலகு சோதியே
தொந்த ரூபமுட னரூப மாதிகுறி
குணமி றந்துவளர் வஸ்துவே
துரிய மேதுரிய வுயிரி னுக்குணர்வு
தோன்ற நின்றருள் சுபாவமே
எந்த நாளுநடு வாகி நின்றருளிரு
மாதியே கருணை நீதியே
யெந்தை யேயென விடைந்திடைந் துருகு
மெளிய னேன்கவலை தீரவுஞ்
சிந்தை யானதை யறிந்து நீயுனருள்
செய்ய நானுமினி யுய்வனோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே. (ங)

ஐவ ரென்றபுல வேடர் கொட்டம
தடங்க மர்க்கடவன் முட்டியா

படவி தின்றுமலை யருகி னின்றுசரு
காதி தின்றுபனி வெயிலினான்
மெய்வ ருந்துதவ மில்லைநற் சரியை
கிரியை யோகமெனு மூன்றதாய்
மேவு கன்றசவு பான நன்னெறி
விரும்ப வில்லையுல கத்திலே
பொய்மு டங்குதொழில் யாத தற்குநல
சார தித்தொழி னடத்திடும்
புத்தி யூகமறி வற்ற மூகமிவை
பொருளெ னக்கருது மருளன்யான்
தெய்வ நல்லருள் படைத்த வன்பரொடு
சேர வுங்கருணை கூர்வையோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே. (௭)

ஏக மானவுரு வான நீயருளி
னால னேகவுரு வாகியே
யெந்த நாளகில கோடி சிர்ஷ்டிசெய
விசையு நாள்வரைய நாண்முத
லாக நாளது வரைக்கு முன்னடிமை
கூடவே சனன மானதோ
வனந்த முண்டுநல சனன மீதினு
ளறிய வேண்டுவன வறியலாம்
மோக மாதிதரு பாச மானதை
யறிந்து விட்டுனையு மெனையுமே
முழுது ணர்ந்துபக மான வின்பவெள
ளமுழ்க வேண்டிர்து வின்றியே
தேக மேநழுவி நானுமோர் நழுவின்

பின்னை யுய்யும்வகை யுள்ளதோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே. (௫)

நியம லக்ஷணமு மியம லக்ஷணமு
மாச னாதிவித பேதமு
நெடிது ணர்ந்திதய பத்ம பீடமிசை
நின்றி லங்குமச பாநலத்
தியல திந்துவளர் மூல குண்டலியை
யினிதி றைஞ்சியவ னருளினு
லெல்லை யற்றுவளர் சோதி மூலவன
லெங்கண் மோனமனு முறையிலே
வய்மி குந்துவரு மமிர்த மண்டல
மதிக்கு ளேமதியை வைத்துநான்
வாய்ம டுத்தமிர்த வாரியைப் பருகி
மன்னு மாரமிர்த வடிவமாய்ச்
செயமி குந்துவரு சித்த யோகநிலை
பெற்று ஞானநெறி யடைவனே
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே. (௬)

எறிதி ரைக்கடனி கர்த்த செல்வமிக
வல்ல லென்றொருவர் பின்செலா
தில்லை யென்னுமுரை பேசி டாதுலகி
லெவரு மாமென மதிக்கவே
நெறியின் வைகிவளர் செல்வ முஞ்சு சவி
நோய்க ளற்றசுக வாழ்க்கையாய்
நியம மாதிநிலை நின்று ஞானநெறி
நிட்டை கூடவுமெந் நாளுமே
அறிவி னின்றவுரு வாயு ணர்த்தியது
மன்றி மோனவுரு வாகியே

யகில மீதுவர வந்த சீரருளை
    யைய வையவினி யென்சொல்கேன்
சிறிய னேனைநம தடிமை யென்றுனது
    திருவு ளத்தினி லிருந்ததோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
    சிற்சு கோதய விலாசமே. (எ)

எவ்வுயிர்த் திரளு முலகி லென்னுயி
    ரெனக்கு ழைந்துருகி நன்மையா
மிதமு ரைப்பவென தென்ற யாவையு
    மெடுத்தெ றிந்துமத யானைபோற்
றவ்வை யற்றநடை பயில வன்பரடி
    கண்டதே வருளின் வடிவமாக்
கண்ட யாவையு மகண்ட மென்னவிரு
    கைகுவித்து மலர் தூவியே
பவ்வ வெண்டிரை கொழித்த தண்டரளம்
    விழியு திர்ப்பமொழி குளறியே
பாடி யாடியு ளுடைந்து டைந்தெழுது
    பாவை யொத்தசைத லின்றியே
திவ்ய வன்புருவ மாகி யன்பரொடு
    மின்ப வீட்டினி லிருப்பனோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
    சிற்சு கோதய விலாசமே. (அ)

மத்தர் பேயரொடு பாலர் தன்மையது
    மருவி யேதுரிய வடிவமாய்
மன்னு தேசமொடு கால மாதியை
    மறந்து நின்னடிய ரடியிலே
பத்தி யாய்நெடிது நம்பு மென்னையொரு
    மைய றந்தகில மாயையைப்
பாரு பாரென நடத்த வந்ததென

பாரதத் தினுமி துள்ளதோ
சுத்த நித்தவியல் பாகு மோவுனது
விசுவ மாயைநடு வாகவே
சொல்ல வேண்டும் வகை நல்லகாதிகதை
சொல்லு மாயையினு மில்லையென்
சித்த மிப்படி மயங்கு மோவருளை
நம்பி ஞோர்கள்பெறு பேறிதோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே. (கூ)

பன்மு கச்சமய நெறிப டைத்தவரு
மியாங்க ளேகடவு ளென்றிடும்
பாத கத்தவரும் வாத தர்க்கமிடு
படிற ருந்தலை வணங்கிடத்
தன்மு கத்திலுயிர் வரவ ழைக்குமெம
தரும னும்பகடு மேய்க்கி யாய்த்
தனியி ருப்பவட நீழ லூடுவளர்
சனக ஞதிமுனி வோர்கடஞ்
சொன்ம யக்கமது தீர வங்கைகொடு
மோன ஞானம துணர்த்தியே
சுத்த நித்தவரு ளியல்ப தாகவுள
சோம சேகரகிர் பாலுவாய்த்
தென்மு கத்தின் முகமாயி ருந்தகொலு
வெம்மு கத்தினும் வணங்குவேன்
றெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

# ஆகாரபுவனம் சிதம்பரரகசியம்.

ஆகார புவனமின்பா கார மாக
வங்கனே யொருமொழியா லகண்டா கார
யோகானு பூதிபெற்ற வன்ப ராவிக்
குறு துணையே யென்னளவு முகந்த நட்பே
வாகாரும் படிக்கிசைகின் றணிவா யென்ன
மலர்ந்தமல ரிடைவாசம் வயங்கு மாபோற்
றேகாதி யுலகமெங்குங் கலந்து தானே
இருக்கின்றா னந்தமயத் தெய்வக் குன்றே. (௧)

அனந்தபத வுயிர்க்கொடொறு முயிரா யென்று
மானந்த நிலையாகி யளவைக் கெட்டாத்
தனந்தனிச்சின் மாத்திரமாய்க் கீழ்மேல் காட்டாச்
சத்துசத்தா யருட்கோயிற் றழைத்த தேவே
இனம்பிரிந்த மான்போலு னிடையா வண்ண
மின்பமுற வன்பர்பக்க லிருத்தி வைத்துக்
கனந்தருமா னமேதன் னிருளிற் றானே
கனிபலித்த வானந்தக் கட்டிப் பேறே. (௨)

பேறனைத்து மனுவெனவே யுதறித் தள்ளப்
பேரின்ப மாகவந்த பெருக்கே பேசா
வீறனைத்து மிக்கெறிக்கே யென்ன வென்னை
மேவென்ற வரத்தேபாழ் வெய்ய மாயைக்
கூறனைத்துங் கடந்தவெல்லைச் சேடமாகிக்
குறைவறநின் றிடுநிறைவே குவமா நின்ற
ஆறனைத்தும் புகுங் கடல்போற் சமயகோடி
யத்தனையுந் தொடர்ந்துபுகு மாதி நட்பே. (௩)

ஆதியந்த மெனுமெழு வாயீறற் றோங்கி
யருமறையின் னமுங்காணு தாற்ற நாளு
பேதமதங் களுமலைய மலைபோல் வாதப்

பெற்றி யரும்வாய் வாசப்பேய ராகச்
சாதகமோ னத்திலென்ன வடவா னீழற்
றண்ணருட்சந் திரமௌலி தடக்கைக் கேற்க
வேதகசின் மாத்திரமா யெம்ம னோர்க்கும்
வெளியாக வைத்தவொன்றே விமல வாழ்வே. (௪)

விமலமுதற் குணமாகி நூற்றெட் டாகி
வேதமெடுத் தெடுத்துரைக்க விருக்கக் கேற்க
அமையுமிலக் கணவடிவா யதுவும் போதா
தப்பாலுக் கப்பாலா யருட்கண் ணாகிச்
சமயமுடன் சமயப்பாலிழ் தலும்பாத தானத்
தன்னருட் தெய்வைக்காக்கு ஞ் சாக்ஷிப் பேறே
இமையளவு முபகார மல்லால் வேறொன்
றியக்காகக் குணைக்கடலா யிருக்க வொன்றே. (௫)

ஒன்றாகிப் பலவாகிப் பலவாக் கண்ட
வொளியாகி வெளியாகி யுருவு மாகி
நன்றாகித் தீதாகி மற்று மாகி
நாசமுட னுற்பத்தி நண்ணு தாகி
இன்றாகி நாளையுமாய் மேலு மான
வெல்லைதயே யெம்மானே யென்றென் றேங்கிக்
கன்றாகிக் கதறினர்க்குச் சேதா வாகிக்
கசிந்திடுவர்க் கருள்கருணைக் கருணை விண்ணே. (௬)

அருள்பழுத்த பழச்சுவையே கரும்பே தேனே
யாரமிர்தே யென்கண்ணே யரிய வான
பொருளனைத்துந் தரும்பொருளே கருணை நீக்காப்
பூரணமாய் நின்றவொன்றே புனித வாழ்வே
கருதரிய கருத்ததனுட் கருத்தாய் மேவிக்
காலமுந்தே சமும்வகுத்துக் கருவி யாகி

விரிவினையுங் கூட்டியுயிர்த் திரளை யாட்டும்
விழுப்பொருளே யான்சொலும்விண் ணப்பங் கேளே. (௭)

விண்ணவரிந் திரன்முதலோர் நார தாதி
விநாயகசப்த ரிஷிகள்சன கிணை வல்லோர்
எண்ணரிய சித்தர்மனு வாதி வேந்த
ரிருக்காதி மறைமுனிவ ரெல்லா மிந்தக்
கண்ணுதலன் றுனைமதிக்கத் தானே யுள்ளங்
கையினெல்லிக் கனிபோலக் காட்சி யாகத்
திண்ணியநல் லறிவாலிச் சமயத் தன்றே
செப்பரிய சித்திமுத்தி சேர்ந்தா ரென்றும். (௮)

செப்பரிய சமயநெறி யெல்லாந் தன்றன்
றெய்வமே தெய்வமெனுஞ் செயற்கை யான
அப்பரிசா ளரும்மஃதே பிடித்தா லிப்பா
லபிமதந்தந் நூல்களும்விரித்தே யனுமா னாதி
அப்பவிரித் துரைப்பரிங்கன் பொய்மெய் யென்ன
வொன்றிலையொன் றெனப்பார்ப்ப தொவ்வா தார்க்கும்
இப்பரிசாஞ் சமயமுமா யல்ல வாகி
யாதுசம யமும்வணங்கு மியல்ப தாகி. (௯)

இயல்பென்றுந் திரியாம லியம மாதி
யெண்குணமுங் காட்டியன்பா லின்ப மாகிப்
பயனருளப் பொருள்கள்பரி வார மாகிப்
பண்புறவுஞ் சௌபான பக்ஷங் காட்டி
மயலறுமந் திரஞ்சிக்ஷை சோதி டாதி
மற்றங்க நூல்வணங்க மௌன மோலி
அயர்வறச்சென் னியில்வைத்து ராசாங் கத்தி
லமர்ந்ததுவை திகசைவ மழகி தந்தோ. (௧௦)

அந்தோவி ததிசயமிச் சமயம் போலின்
றறிஞரெல்லா நடுவறிய வணிமா வாதி

வந்தாடித் திரிபவர்க்கும் பேசா மோனம்
வைத்திருந்த மாதவர்க்கு மற்று மற்றும்
இந்த்ராதி போகநலம் பெற்ற பேர்க்கு
மிதுவன்றித் தாயகம்வே றில்லை யில்லை
சந்தான கற்பகம்போ லருளைக் காட்டத்
தக்கநெறி யிந்நெறியே தான்சன் மார்க்கம். (கக)

சன்மார்க்க ஞானமதின் பொருளும் வீறு
சமயசங்கே தப்பொருளுந் தானென் றாகப்
பன்மார்க்க நெறியினிலுங் கண்ட தில்லை
பகர்வரிய தில்லைமன்றுட் பார்த்த போதங்
கென்மார்க்க மிருக்குதெல்லாம் வெளியே யென்ன
வெச்சமயத் தவர்களும்வந் திறைஞ்சா நிற்பர்
கன்மார்க்க நெஞ்சமுள வெனக்குந் தானே
கண்டவுட னனந்தங் காண்ட லாகும். (கஉ)

காண்டல்பெறப் புறத்தினுள்ள படியே யுள்ளுங்
காட்சிமெய்ந்நூல் சொலும்படியாங் கடவு ளேநீ
நீண்டநெடு மையுமகலக் குறுக்குங் காட்டா
நிறைபரிபூ ரணவறிவாய் நித்த மாகி
வேண்டுவிருப் பொடுவெறுப்புச் சமீபந் தூரம்
விகைலனு குதன்முதலாம் விவகா ரங்கள்
பூண்டவள வைகன்மனவாக் காதி யெல்லாம்
பொருந்தாம லெக்கப்புறமும் புணர்க்கை யாக. (கங)

ஆகியசற் காரியவூ கத்துக் கேற்ற
வமலமாய் நடுவாகி யனந்த சத்தி
யோகமுறு மானந்த மயம தாகி
யுயிர்க்குயிரா யென்னாளு மோங்கா நிற்ப
மோகவிருண் மாயைவினை யுயிர்கட் கெல்லா
மொய்த்ததெல்கொ லுபகார முயற்சி யாகப்

பாகமிக வருளவொரு சத்தி வந்து
பதிந்ததென்கொ ளுனெனுமப் பான்மை யென்கொல்.(கச)

நூறொன்று மோரகந்தை யெவர்க்கும் வந்து
நலிந்தவுடன் சகமாயை நானா வாகித்
தான்வந்து தொடருமித்தால் வளருந் துன்பச்
சாகரத்தின் பெருமையெவர் சாற்ற வல்லார்
ஐயென்று முடலென்றுங் கரண மென்று
முள்ளென்றும் புறமென்று மொழியா நின்ற
வானென்றுங் காலென்றுந் தீநீ ரென்று
மண்ணென்று மலையென்றும் வனம தென்றும். (கரு)

மலைமலையாங் காட்சிகள் காணாமை யாதி
மறப்பென்று நினைப்பென்று மாயா வாரி
அலையலையா யடிக்குமின்ப துன்ப மென்று
மதைவிளைக்கும் வினைகளென்று மதனைத் தீர்க்கத்
தலைபலவாஞ் சமயமென்றுந் தெய்வ மென்றுஞ்
சாதகரென் றும்மதற்குச் சாட்சி யாகக்
கலைபலவா நெறியென்றுந் தர்க்க மென்றுங்
கடலுறுறன் மணலெண்ணிக் காணும் போதும். (கசு)

காணரிய வல்லவெல்லாந் தானே கட்டுக்
கட்டாக வினையுமதைக் கட்டோ டேதான்
வீணினிற்கர்ப் பூரமலை படுதீப் பட்ட
வித்தையெனக் காணவொரு விவேகங் காட்ட
ஊணுறக்க மின்பதுன்பம் பேரு ராதி
யொவ்விடவு மெனைப்போல வுருவங் காட்டிக்
கோணறவோர் மான்காட்டி மானை யீர்க்குங்
கொள்கையென வருண்மௌன குருவாய் வந்து. (கஎ)

வந்தெனுடல் பொருளாவி மூன்றுந் தன்கை
வசமெனவே யத்துவா மார்க்க நோக்கி

வைந்துபுல னைம்பூதங் கரண மாதி
யடுத்தகுண மத்தனையு மல்லை யல்லை
இந்தவுட லறிவறியா மையுநீ யல்லை
யாதொன்று பற்றினத னியல்பாய் நின்று
பந்தமறும் பளிங்கனைய சித்து நீயுன்
பக்குவங்கண் டறிவிக்கும் பான்மை யேம்யாம். (கஅ)

அறிவாகி யானந்த மய்மா யென்று
மழியாத நிலையாகி யாதின் பாலும்
பிறியாமற் றண்ணருளே கோயி லான
பெரியபரம் பதியதனைப் பெறவே வேண்டின்
நெறியாகக் கூறுவன்கே ளெந்த நாளு
நிற்குண நிற்குளம்வாய்த்து நீடு வாழ்க
செறிவான வறியாமை யெல்லா நீங்க
சிற்சுகம்பெற் றிடுக பந்தந் தீர்கவென்றே. (கக)

பந்தமறு மெய்ஞ்ஞான மான மோனப்
பண்பொன்றை யருளியந்தப் பண்புக் கேதான்
சிந்தையில்லை நானென்னும் பான்மை யில்லை
தேசமில்லை காலமில்லை திக்கு மில்லை
தொந்தமில்லை நீக்கமில்லை பிரிவுமில்லை
சொல்லுமில்லை யிராப்பகலாந் தோற்றமில்லை
அந்தமில்லை யாதியில்லை நடுவு மில்லை
யகமுமில்லை புறமுமில்லை யனைத்து மில்லை. (உ0)

இல்லையில்லை யென்னினென்று மில்லா தல்ல
வியல்பாகி யென்றுமுள்ள வியற்கை யாகிச்
சொல்லரிய தன்மையதா யான்று னென்னத்
தோன்றுதெல் லாம்விழுங்குஞ் சொருப மாகி
அல்லையுண்ட பகல்போல வவித்தை யெல்லா
மடையவுண்டு தடையறவுன் னறிவைத் தானே

வெல்லவுண்டிங் குன்னையுந்தா னாகக் கொண்டு
வேதகமாய்ப் பேசாமை விளக்குந் தானே. (உக)

ஆரறனை தன்மயமே யல்லா லொன்றைத்
தலையெடுக்க வொட்டாது தலைப்பட் டாங்கே
போராலுங் கர்ப்பூர தீபம் போலப்
போயொளிப்ப தல்லாது புலம்வே றின்றும்
ஊராகா ரத்திரைேடு ஞேய மற்ற
ஞாதுருவு நழுவாம னழுவி நிற்கும்
ஆறனு மிதன்பெருமை யெவர்க்கார் சொல்வா
ரதுவாறு லதுவாவ ரதுவே சொல்லும். (உஉ)

அதுவென்ற லெதுவெனவொன் றடுக்குஞ் சங்கை
யாதலினு லதுவெனலு மறவே விட்டு
மதுவுண்ட வண்டெனவுஞ் சனக ராதி
மன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தா ரென்றும்
பதியிந்த நிலையெனவு மென்னை யாண்ட
படிக்குநிரு விகற்பத்தாற் பரமா னந்த
கதிகண்டு கொள்ளவுநின் னருள்கூ றிந்தக்
கதியன்றி யுறங்கேன்மேற் கருமம் பாரேன். (உங)

பாராதி விண்ணனைத்து நீயாச் சிந்தை
பரியமட லாவெழுதிப் பார்த்துப் பார்த்து
வாராயோ வென்ப்ராண நாதா வென்பேன்
வளைத்துவளைத் தெனைநீயா வைத்துக் கொண்டு
பூராய மாமேலொன் றறியா வண்ணம்
புண்ணாளர் போனெஞ்சம் புலம்பி யுள்ளே
நீராள மாயுருகிக் கண்ணீர் சோர
நெட்டுயிர்த்து மெய்ம்மறந்தோர் நிலையாய் நிற்பேன். (உச)

ஆயுமறி வாகியுன்னைப் பிரியா வண்ண
மனைந்துசுகம் பெற்றவன்ப ரையோ வென்னத்

தீயசொலைச் சமயத்துஞ் செல்லச் சிந்தை
தெளிந்திடவுஞ் சமாதானஞ் செய்வேன் வாழ்வான்
காயிலைபுன் சருகாதி யருந்தக் கானங்
கடன்மலையெங் கேயெனவுங் கவலை யாவேன்
வாயில்கும்பம் போற்கிடந்து புரள்வேன் வானின்
மதிகதிரை முன்னிலையா வைத்து நேரே. (௨௫)

நேரேதா னிரவுபகல் கோடா வண்ண
நித்தம்வர வுங்களையிந் நிலைக்கே வைத்தார்
ஆரேயங் கவர்பெருமை யென்னே யென்பே
னடிக்கின்ற காற்றேநீ யாரா லேதான்
பேராதே சுழல்கின்றா யென்பேன் வந்து
பெய்கின்ற முகில்காளெம் பெருமா னும்போற்
றாராள மாக்கருணை பொழியச் செய்யுஞ்
சாதகமென் னேகருதிச் சாற்று மென்பேன். (௨௬)

கருதரிய விண்ணேநீ யெங்கு மாகிக்
கலந்தனையே யுன்முடிவின் காட்சி யாக
வருபொருளெப் படியிருக்குஞ் சொல்லா யென்பேன்
மண்ணேயுன் முடிவிலெது வயங்கு மாங்கே
துரியவறி வுடைச்சேட னீற்றி னுண்மை
சொல்லானோ சொல்லென்பேன் சுருதி யேநீ
ஒருவரைப்போ லனைவருக்கு முண்மை யாமுன்
னுரையன்றோ வுன்முடிவை யுரைநீ யென்பேன். (௨௭)

உரையிறந்து பெருமைபெற்றுத் திரைக்கை நீட்டி
யொலிக்கின்ற கடலேயிவ் வுலகஞ் சூழக்
கரையுமின்றி யுன்னைவைத்தா ரியாரே யென்பேன்
கானகத்திற் பைங்கிளிகாள் கமல மேவும்
வரிசிறைவண் டினங்காளோ திமங்கா ளிது
மார்க்கமன்றோ நீங்களிது வரையி லேயும்

பெரியபரி பூரணமாம் பொருளைக் கண்டு
பேசியதுண் டோவொருகாற் பேசு மென்பேன். (உஅ)

ஒருவனைவன் யானைகெடக் குடத்துட் செங்கை
போட்டுதல்போ ஞன்பேதை யுப்போ உப்பை
கருவவிட்டுங் கர்ப்பூர மதனிற் றீபம்
வயங்கவிட்டு மைக்கியமுன்னி வருந்தி நிற்பேன்
அருளுடைய பரமென்றோ வன்று தானே
யானுனென் றும்மெனக்கே யாண வாதி
பெருகுவினைக் கட்டென்று மென்றுற் கட்டிப்
பேசியதன் றேயருளால் பேசிற் றன்றே. (உகூ)

அன்றுமுத லின்றைவரைச் சனன கோடி
யடைந்தடைந்திங் கியாதனையா லழிந்த தல்லால்
இன்றைவரை முத்தியின்றே யெடுத்த தேக
மெப்போதோ தெரியாதே யிப்போ தேதான்
நன்றுமனக் கவலைகெடப் புலநா யேனைத்
தொழும்புகொளச் சீகாழித் துரையே தூது
சென்றிடவே பொருளைவைத்த நாவ லோய்நஞ்
சிவனப்பா வென்றவருட் செல்வத் தேவே. (௩0)

தேவர்தொழும் வாதவூர்த் தேவே யென்பேன்
திருமூலத் தேவேயிச் சகத்தோர் முத்திக்
காலுறச் சிவவென்வாக் குடனே வந்த
வரசேசும் மாவிருந்தூன் னருளைச் சாரப்
பூவுலகில் வளரருண கிரியே மற்றைப்
புண்ணியர்கா ளோவென்பேன் புரையொன் றில்லா
வெளியம்போ லசைவறவுந் தானே நிற்பே
ஞேதரிய துயர்கெடவே யுரைக்கு முன்னே. (௩க)

ஓதரிய சுகர்போல வேனே னென்ன
வொருவரிலை யோவெனவு முரைப்பேன் றுனே

பேதமபே தங்கெடவு மொருபே சாமை
பிறவாதோ வாலடியிற் பெரிய மோன
நாதனொரு தரமுலகம் பார்க்க விச்சை
நண்ணுறே வென்றென்றே நாணு வாகிக்
காதன்மிகு மணியிழையா ரெனவா டுற்றேன்
கருத்தறிந்து புரப்பதுன்மேற் கடன்முக் காலும். (கஉ)

காலமொடு தேசவர்த்த மான மாதி
கலந்துநின்ற நிலைவாழி கருணை வாழி
மாலறவுஞ் சைவமுதன் மதங்க ளாகி
மதாதீத மானவருண் மரபு வாழி
சாலமிகு மெளியேனிவ் வழக்குப் பேசத்
தயவுவைத்து வளர்த்தவருட் டன்மை வாழி
ஆலடியிற் பரமகுரு வாழி வாழி
யகண்டிதா காரவரு ளடியார் வாழி. (கக)

திருச்சிற்றம்பலம்.

# தேன்முகம்.

தேன்முகம் பிலிற்றும்பைந்தாட் செய்யபங் கயத்தின்மேவு
நான்முகத் தேவேநின்னு ணட்டிய வகிலமாயை
கான்முயற் கொம்பேயென்கோ கானலம் புனலேயென்கோ
வான்முக முளரியென்கோ மற்றென்கோ விளம்பல்வேண்டும்.

வேண்டுவ படைத்தாய்நுந்தை விதிப்படி புரந்தானத்தைக்
காண்டக வழித்தான்முக்கட் கடவுடா ளினையவாற்றால்
ஆண்டவ னெவனேவென்ன வறிகிலா தகிலநீயே
ஈண்டிய வல்லறிர வெம்மனோர்க் கியம்புகண்டாய். (உ)

கண்டன வல்லவென்றே கழித்திடு மிறுதிக்கண்ணே
கொண்டது பரமானந்தக் கோதிலா முத்தியத்தாற்
பண்டையிற் படைப்புங்காப்பும் பறந்தன மாயையோடே
வெண்டலை விழிகைகாலில் விளங்கிட நின்றான்யாவன். (௩)

விளங்கவெண் ணீறுபூசி விரிசடைக் கங்கைதாங்கித்
துளங்குகன் னுதற்கண் டோன்றச் சுழல்வளி நெடுமூச்சாகக்
களங்கமி லுருவந்தானே ககனமாய்ப் பெரியப்பூமி
வளர்ந்ததா ளென்னவுள்ள மன்றென மறையொன்றின்றி. (௪)

மறைமுழக் கொலிப்பத்தானே வாதமோ டபயக்கைகண்
முறைமையி னோங்காத முரசெனக் கறங்கவெங்குங்
குறைவிலா வணைநிறைந்து கோதிலா நடனஞ்செய்வான்
இறையவ னெனலாமியார்க்கு மிதயசம் மதமீதல்லால். (௫)

அல்லலாந் தொழில்படைத்தே யடிக்கடி யுருவெடுத்தே
மல்லன்மா ஞாலங்காக்க வருபவர் கடவுளென்னிற்
றொல்லையாம் பிறவிவேலை தொலைந்திடா திருணீங்காது
நல்லது மாயைதானு நானென வந்துநிற்கும். (௬)

நானென நிற்குஞான ஞானமன் றந்தஞான
மோனமா யிருக்கவொட்டா மோனமின் றாகவேதான்
தேனென ருசிக்கு மன்பாற் சிந்தைநைந் துருகும்வண்ணம்
வானென நிறைந்தானந்த மாகடல் வளைவதின்றே. (௭)

இன்றென விருப்போமென்னி னென்றுஞ்சூ னியமாமுத்தி
நன்றொடு தீதுமன்றி நாமுன்னே பெறுமவித்தை
நின்றது பெத்தந்தானே நிரந்தர முத்தியென்னின்
ஒன்றொரு வரைநான்கேட்க வுணர்வில்லை குருவுமில்லை. (௮)

இல்லையென் றிடினிப்பூமி யிருந்தவா றிருப்போமென்னின்
நல்லவன் சாருவாக னன்சொலு நெறிக்குவீணிற்

ரெல்லையே ஞூகமாதி தொடுப்பதேன் மயக்கமேதிங்
கொல்லைவந் திருமினென்ன வுறவுசெய் திடுவனந்தோ. (கூ)

அந்தணர் நால்வர்காண வருட்குரு வாகிவந்த
எந்தையே யெல்லாந்தானென் றியம்பின னெமைப்படைத்த
தந்தைநீ யெம்மைக்காக்குந் தலைவனே நுந்தையன்றோ
பந்தமில் சித்திமுத்தி படைக்கநின் னருள்பாலிப்பாய். (க஠)

திருச்சிற்றம்பலம்.

# பன்மாலை.

பன்மாலைத் திரளிருக் கத்தமையுணர்ந்தோர்
பாமாலைக் கேநீதான் பக்ஷமென்று
நன்மாலை யாவெடுத்துச் சொன்னார்நல்லோர்
நலமறிந்து கல்லாத நானுஞ்சொன்னேன்
சொன்மாலை மாலையாக் கண்ணீர்சோரத்
தொண்டனே னெந்நாளுந் துதித்துநிற்பேன்
என்மாலை யறிந்திங்கே வாவாவென்றே
யெனைக்கலப்பாய் திருக்கருணை யெம்பிரானே. (க)

கருணைமொழி சிறிதில்லை னீதலில்லேன்
கண்ணீர்கம் பலையென்றன் கருத்துக்கேற்க
ஒருபொழுதும் பெற்றறியே னென்னையாளு
மொருவாவுன் னடிமைநா னொருத்தனுக்கோ
இருவினையு முக்குணமுங் கரணநான்கு
மிடர்செய்யைம் புலனுங்கா மாதியாறும்
வரவரவு மேழைக்கோ ரெட்டதான
மதத்தொடும்வந் தெதிர்த்தநவ வடிவமன்றே. (உ)

வடிவனைத்துந் தந்தவடி வில்லாச்சுத்த
வான்பொருளே யெளியனேன் மனமாமாயைக்
குடிகெடுக்கத் தசங்கட்டிக் கொண்டமோன
குருவேயென் றெய்வமே கோதிலாத
படியெனக்கா னந்தவெள்ளம் வந்துதேக்கும்
படியெனக்குந் திருக்கருணை பற்றுமாறே
அடியெடுத்தென் முடியிலின்னம் வைக்கவேண்டு
மடிமுடியென் றில்லாத வகண்டவாழ்வே. (௩)

வாழ்வனைத்து மயக்கமெனத் தேர்ந்தேன்றேர்ந்த
வாறேநா னப்பாலோர் வழிபாராமற்
றாழ்வுபெற்றிங் கிருந்தேனீ தென்னமாயந்
தடையுற்றான் மேற்கதியுந் தடையதாமே
ஊழ்வலியோ வல்லதுன்றன் றிருக்கூத்தோவிங்
கொருதமியேன் மேற்குறையோ வுணர்த்தாயின்னம்
பாழவதிப் படவெனக்கு முடியாதெல்லாம்
படைத்தளித்துத் துடைக்கவல்ல பரிசினானே. (௪)

நானெனிங் கெனுமகந்தை யெனக்கேன்வைத்தாய்
நல்வினை தீவினையெனவே நடுவேநாட்டி
ஊனொரு முடற்சுமையென் மீதேன்வைத்தா
யுயிரெனவு மென்னையொன்று வுள்ளேன்வைத்தாய்
ஆனமை யாயகில நிகிலபேத
மனைத்தினுள்ளுந் தானாகி யறிவானந்தத்
தேனாகிப் பாலாகிக் கனியாய்க்கன்னற்
செழும்பாகாய்க் கற்கண்டாய்த் திகழ்ந்தவொன்றே. (௫)

ஒன்றியொன்றி நின்றுநின்று மென்னையென்னை
யுன்னியுன்னும் பொருளலைநீ யுன்பாலன்பால்
நின்றதன்மைக் கிரங்கும்வயி ராக்கியனல்லே
னிவர்த்தியவை வேண்டுமிந்த நீலனுக்கே

என்றுமென்று மிந்நெறியோர் குணமுமில்லை
யிடுக்குவார் கைப்பிள்ளை யேதோவேதோ
ன்றுமனத் துடனூடு தழைதின்றூற்போற்
கல்வியுங்கேள் வியுமாகிக் கலக்குற்றேனே. (௬)

உற்றதுணை நீயல்லாற் பற்றுவேறுன்
றுன்னேன்பன் னுலகத் தோடியாடிக்
கற்றதுங்கேட் டதுமிதனுக் கேதுவாகுங்
கற்பதுங்கேட் பதுமமையுங் காணுநீத
நற்றுணையே யருட்டாயே யின்பமான
நாதாந்த பரம்பொருளே நாரணுதி
சுற்றமுமாய் நல்லன்பர் தமைச்சேயாகத்
தொழும்புகொள்ளுங் கனகனமே சோதிக்குன்றே. (எ)

தூன்றாத மூவுருவா யருவாய்ஞானக்
கொழுந்தாகி யறுசமயக் கூத்துமாடி
நின்றூயே மாயையெனுந் திரையைநீக்கி
நின்னையா ரறியவல்லார் நினைப்போர்நெஞ்சம்
மன்றாக வின்பக்கூத் தாடவல்ல
மணியேயென் கண்ணேமா மருந்தேநால்வர்க்
கன்றாலின் கீழிருந்து மோனஞான
மமைத்தசின்முத் திரைக்கடலே யமரரேறே. (அ)

திரையில்லாக் கடல்போலச் சலனந்தீர்ந்து
றெளிந்துருகும் பொன்போலச் செகத்தையெல்லாங்
கரையவே கனிந்துருக்கு முகத்திலேநீ
கனிந்தபர மானந்தக் கட்டியிந்நாள்
வரையிலே வரக்காணே னென்னூற்கட்டி
வார்த்தைசொன் னூற் சுகம்வருமோ வஞ்சனேனை
இரையிலே யிருத்திநிரு விகற்பமான
வின்பநிட்டை கொடுப்பதையா வெந்தநாளோ. (௯)

எந்நா ளுனக்கடிமை யாகுநாளோ
　　வெந்நாளோ கதிவருநா ளெளியனேன்றன்
சிந்தைநா ளுவரைக்கு மயங்கிற்றல்லாற்
　　றெளிந்ததுண்டோ மௌனியாய்த் தெளியவோர்சொற்
றந்தநாண் முதலின்பக் கால்சற்றல்லாற்
　　றடையறவா னந்தவெள்ளந் தானேபொங்கி
வந்நா ளில்லையெத்த வலைந்தேனுன்னை
　　மறவாவில் பத்தாலே வாழ்கின்றேனே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

# நினைவொன்று.

## ஞானிகளிடம்.

நினைவொன்று நினையாம னிற்கினக மென்பார்
　　நிற்குமிட மேயருளா நிட்டையருளொட்டுந்
தனையென்று மறந்திருப்ப வருள்வடிவா னதுமேற்
　　றட்டியெழுந் திருக்குமின்பந் தன்மயமே யதுவாம்
பினையொன்று மிலையந்த வின்பமெனு நிலயம்
　　பெற்றாரே பிறவாமை பெற்றார்மற் றுந்தான்
மனையென்று மகவென்றுஞ் சுற்றமென்று மசுத்த
　　வாதனையா மாசையொழி மன்றொருசொற் கொண்டே. ()

ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொடுக்கு மந்த
　　வொருமொழியே மலமொழிக்குமொழிக்குமென மொழிந்த
குருமொழியே மலையிலக்கு மற்றைமொழி யெல்லாங்
　　கோடின்றி வட்டாடல் கொள்வதொக்குங் கண்டாய்
கருமொழியிங் குனக்கில்லை மொழிக்குமொழி ருசிக்கக்
　　கரும்பனைய சொற்கொடுனைக் காட்டவுங்கண் டனைமேற்

றருமொழியிங் குனக்கில்லை யுன்னைவிட்டு நீங்காத்
தற்பரமா யானந்தப் பொற்பொதுவாய் நில்லே. (உ)

நில்லாத வாக்கைநிலை யன்றெனவே கண்டாய்
நேயவருண் மெய்யன்றோ நிலயமதா நிற்கக்
கல்லாதே யேன்படித்தாய் கற்றதெல்லா மூடங்
கற்றதெல்லா மூடமென்றே கண்டனையு மன்று
சொல்லாலே பயனில்லை சொன்முடிவைத் தானே
தொடர்ந்துபிடி மர்க்கடம்போற் றொட்டதுபற் றுநில்
எல்லாரு மறிந்திடவே வாய்ப்பறைகொண் டடிநீ
யிராப்பகலில் லாவிடமே யெமக்கிடமென் றறிந்தே. (௩)

இடம்பொரு ளேவலைக்குறித்து மடம்புகுநா யெனவே
யெங்கேநீ யகப்பட்டா யிங்கேநீ வாடா
மடம்பெறுபாழ் நெஞ்சாலே யஞ்சாதே நிராசை
மன்னிடமே யிடமந்த மானிலத்தே பொருளுந்
திடம்பெறவே நிற்கினெல்லா வுலகமுழும்வந் தேவல்
செய்யுமந்த நிலைநின்றோர் சனகன்முதன் முனிவர்
கடம்பெறுமா மதயானை யென்னவுநீ பாசக்
கட்டான நிகளபந்தக் கட்டவிழப் பாரே. (௪)

பாராதி யண்டமெலாம் படர்கானற் சலம்போற்
பார்த்தனையே முடிவினின்று பாரெதுதா னின்ற
தாராலு மறியாத சத்தன்றோ வதுவா
யங்கிருந் யெங்கிருந்து மதுவாவை கண்டாய்
பூராய மாகவுநீ மற்றொன்றை விரித்துப்
புலம்பாதே சஞ்சலமாப் புத்தியை நாட்டாதே
ஓராதே யொன்றையுநீ முன்னிலைவை யாதே
யுள்ளபடி முடியுமெலா முள்ளபடி காணே. (௫)

உள்ளபடி யென்னவுநீ மற்றொன்றைத் தொடர்ந்திட்
டுளங்கருத வேண்டாநிஷ் களங்கமதி யாகிக்

கள்ளமனத் துறவைவிட்டெல் லாந்துறந்த துறவோர்
கற்பித்த மொழிப்படியே கங்குல்பக லற்ற
வெள்ளவெளிக் கடன்மூழ்கி யின்பமயப் பொருளாய்
விரவியெடுத் தெடுத்து விள்ளவும்வா யின்றிக்
கொள்ளைகொண்ட கண்ணீருங் கம்பலையு மாகிக்
கும்பிட்டுச் சகம்பொயெனத் தம்பட்ட மடியே. (சு)

அடிமுடியு நடுவுமற்ற பரவெளிமேற் கொண்டா
லத்துவித வானந்த சித்தமுண்டா நமது
குடிமுழுதும் பிழைக்குமொரு குறையுமில்லை யெடுத்த
கோலமெல்லா நன்றாகுங் குறைவுநிறை வறவே
விடியுமுத யம்போல வருளுதயம் பெற்ற
வித்தகரோ டுங்கூடி விளையாட லாகும்
படிமுழுதும் விண்முழுதுந் தந்தாலுங் களியாப்
பாலருட னுன்மத்தர் பிசாசர்குணம் வருமே. (எ)

வரும்போமென் பனவுமின்றி யென்றுமொரு படித்தாய்
வானாதி தத்துவத்தை வளைந்தருந்தி வெளியாம்
இரும்போகல் லோமரமோ வென்னுநெஞ்சைக் கனன்மே
விட்டமெழு காவுருக்கு மின்பவெள்ள மாகிக்
கரும்போகண் டோசீனி சருக்கரையோ தேனோ
கனியமிர்தோ வெனருசிக்குங் கருத்தவிழ்ந்தோ ருணர்வார்
அரும்போநன் மணங்காட்டுங் காமரசங் கன்னி
யறிவாளோ வபக்குவர்க்கோ வந்நலந்தான் விளங்கும். ()

தானேயு மிவ்வுலக மொருமுதலு மாகாத்
தன்மையினாற் படைத்தளிக்குந் தலைமையது வான
கோனேக வொருமுதலிங் குண்டெனவும் யூகங்
கூட்டியதுஞ் சகமுடிவிற் குலவுறுமெய்ஞ் ஞான
வானேக வம்முதலே நிற்குநிலை நம்மான்
மதிப்பரிதா மெனமோனம் வைத்ததுமுன் மனமே

ஆறலு மனஞ்சடமென் றழுங்காதே யுண்மை
யறிவித்த விடங்குருவா மருளிலதொன் றிலையே. (கூ)

திருச்சிற்றம்பலம்.

# பொன்னைமாதரை.

பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன்
என்னை நாடிய வென்னுயிர் நாதனே
உன்னை நாடுவ னுன்னருட் டுவெளி
தன்னை நாடுவன் றன்னந் தனியனே. (க)

தன்ன தென்றுரை சாற்று வனவெலாம்
நின்ன தென்றனை நின்னிடத் தே தந்தேன்
இன்ன மென்னை யிடருறக் கூட்டினுற்
பின்னை யுய்கிலன் பேதைய னுவியே. (உ)

ஆவி யேயுனை யானறி வாய்நின்று
சேவி யேன்கள்ச் சிந்தை திறைகொடேன்
பாவி யேனுள பான்மையைக் கண்டுநீ
கூவியா ளென்னை யாட்கொண்ட கோலமே. (ங)

கோல மின்றிக் குணமின்றி நின்னருட்
சீல மின்றிச் சிறியன் பிழைப்பனே
ஆல முண்டு மமிர் தருவாய்வந்த
கால மெந்தை கதிநிலை காண்பதே. (ச)

காணுங் கண்ணிற் கலந்தகண் ணேயுனைச்
சேணும் பாருந் திரிபவர் காண்பரோ
ஆணும் பெண்ணு மதுவெனும் பான்மையும்
பூணுங் கோலம் பொருந்தியு ணிற்கவே. (ரு)

நிற்கு நன்னிலை நிற்கப்பெற் ருரருள்
வர்க்க மன்றி மனிதரன்றே யையா
நூர்க்கு ணக்கடற் சோங்கன்ன பாவியேற்
கெற்கு ணங்கண் டெனபெயர் சொல்வதே. (௬)

சொல்லை யுன்னித் துடித்தத லாலருள்
எல்லை யுன்னி யெனையங்கு வைத்திலேன்
வல்லை நீயென்னை வாவென் றிடாவிடிற்
கல்லை யாமிக் கருமி நடக்கையே. (௭)

கையு மெய்யுங் கருத்துக் கிசையவே
ஐய தந்தநற் கைய மினியுண்டோ
பொய்ய னேன்சிந்தைப் பொய்கெடப் பூரண
மெய்ய தாமின்ப மென்று விளைவதே. (௮)

என்று முன்னை யிதய வெளிக்குளே
துன்ற வைத்தன னேயருட் சோதிநீ
நின்ற தன்மை நிலைக்கென்னை நேர்மையாம்
நன்று நீதற வைத்த நடுவதே. (௯)

வைத்த தேகம் வருந்த வருந்திடும்
பித்த னுனருள் பெற்றுந் திடமிலேன்
சித்த மோன சிவசின்ம யானந்தம்
வைத்த வைய வருட்செம்பொற் சோதியே. (௧௦)

செம்பொன் மேனிச் செழுஞ்சுட ரேமுழு
வம்ப னேனுனை வாழ்த்து மதியின்றி
இம்பர் வாழ்வினுக் கிச்சைவைத் தேன்மனம்
நம்பி வாவெனி னுனென்கொல் செய்வதே. (௧௧)

செய்யுஞ் செய்கையுஞ் சிந்திக்குஞ் சிந்தையும்
ஐய நின்னதென் றெண்ணு மறிவின்றி

வெய்ய காம வெகுளி மயக்கமாம்
பொய்யி லேசுழன் றேனென்ன புன்மையே. (க௨)

புன்பு லானரம் பென்புடைப் பொய்யுடல்
அன்பர் யார்க்கு மருவருப் பல்லவோ
என்பொ லாமணி யேயிறை யேயித்தாற்
றுன்ப மன்றிச் சுகமொன்று மில்லையே. (க௩)

இல்லை யுண்டென் றெவர்பக்க மாயினுஞ்
சொல்ல வோவறி யாததோ மூம்பன்யான்
செல்ல வேறொரு திக்கறி யேனெலாம்
வல்ல நீயெனை வாழ்விக்க வேண்டுமே. (க௪)

வேண்டுஞ் சீரருள் மெய்யன்பர்க் கேயன்பு
பூண்ட நானென் புலமறி யாததோ
ஆண்டை நீயுன் னடியவ னென்று
தூண்டு வேனன்றித் தொண்டனென் சொல்வதே. (க௫)

எனக்கு ளேயுயி ரென்ன விருந்தநீ
மனக்கி லேசத்தை மாற்றல் வழக்கன்றே
கனத்த சீரருட் காட்சிய லாதொன்றை
நினைக்க வோவறி யாதென்ற னெஞ்சமே. (க௬)

நெஞ்ச கந்தனை நேசித்த மார்க்கண்டர்க்
கஞ்ச லென்ற வருளறிந் தேயையா
தஞ்ச மென்றுன் சரணடைந்தே னெங்குஞ்
செஞ்செ வேநின்ற சிற்சுக வாரியே. (க௭)

வாரி யேழு மலையும் பிறவுந்தான்
சீரி தானநின் சின்மயத் தேயென்றால்
ஆரி லேயுள தாவித் திரளதை
ஓரி லேனெனை யாண்ட வொருவனே. (க௮)

ஒருவ ரென்றனைத் துள்ளுங் குறிப்பறிந்
தருள்வ ரோவெனை யாளுடை யன்னையே
மருளா னேன்பட்ட வாதை விரிக்கினோ
பெருகு நாளினிப் பேச விதியின்றே. (௧௯)

என்று நெக்கன் புருக்கில னென்றே
அன்று தொட்டெனை யாளர சேயென்று
நின்ற ரற்றிய நீலனைக் கைவிட்டால்
மன்ற மெய்ப்பிடி நின்னருள் வாழ்த்துமே. (௨0)

வாழ்த்து நின்னருள் வாய்மையைத் தாலன்றிப்
பாழ்த்த சிந்தைப் பதகனு முய்வனோ
சூழ்ந்து நின்ற தொழும்பரை யானந்தத்
தாழ்த்து முக்க ணருட்செய்பொற் சோதியே. (௨௧)

சோதி யேசுட ரேசுக மேதுணை
நீதி யேநிச மேநிறை வேநிலே
ஆதி யேயுனை யானடைந் தேனகம்
வாதி யாதருள் வாயருள் வாளையே. (௨௨)

வானைப் போல விளைந்துகொண் டானந்தத்
தேனைத் தந்தெனைச் சேர்ந்து கலந்தமெய்ஞ்
ஞானத் தெய்வத்தை நாடிவ ருளெனும்
ஈனப் பாழ்கெட வென்று மிருப்பனே. (௨௩)

இரும்பைக் காந்த மிழுக்கின்ற வாறெனைத்
திரும்பிப் பார்க்கவொட் டாமற் றிருவடிக்
கரும்பைத் தந்துகண் ணீர்கம் பலையெலாம்
அரும்பச் செய்யென தன்னையொப் பாயனே. (௨௪)

அன்னை யப்பனென் றேவித் துணைபெறுந்
தன்னை யொப்பற்ற சற்குரு வென்பதென்

என்னைப் பூரண வின்ப வெளிக்குளே
துன்ன வைத்த சுடரெனத் தக்கதே. (உ௫)

தக்க கேள்வியிற் சார்ந்தநற் பூமியின்
மிக்க தாக விளங்கு முதலொன்றே
எக்க ணுந்தொழ யாவையும் பூத்துக்காய்த்
தொக்க நின்றுமொன் றாய்நிறை வானதே. (உகூ)

ஆன மான சமயங்க ளாறுக்குந்
தான மாய்நின்று தன்மயங் காட்டிய
ஞான பூரண நாதனை நாடியே
தீன னேனின்பந் தேக்கித் திளைப்பனே. (உ௭)

தேக்கி யின்பந் திளைக்கத் திளைக்கவே
ஆக்க மாயெனக் கானந்த மாகியே
போக்கி னோடு வரவற்ற பூரணந்
தாக்கி நின்றவா தன்மய மாமதே. (உ௮)

அதுவென் றுன்னு மதுவு மறநின்ற
முதிய ஞானிகண் மோனப் பொருளது
எதுவென் றெண்ணி யிறைஞ்சுவ னேழையேன்
மதியு ணின்றின்ப வாரி வழங்குமே. (உ௯)

வாரிக் கொண்டெனை வாய்மடுத் தின்பமாய்ப்
பாரிற் கண்டவை யாவும் பருகினை
ஓரிற் கண்டிடு மேமன் கனவென
யாருக் குஞ்சொல வாயிலை யையனே. (௩0)

ஐய மற்ற வதிவரு ணர்க்கெலாங்
கையி லாமல கக்கனி யாகிய
மெய்ய னேயிந்த மேதினி மீதுழல்
பொய்ய னேற்குப் புகலிட மெங்ஙனே. (௩௧)

எங்கு னேயுய்ய யானென தென்பதற்
றங்கு னேயுன் னருண்மய மாகிலேன்
திங்கள் பாதி திகழப் பணியணி
கங்கை வார்சடைக் கண்ணுத லெந்தையே. (௩௨)

நுண்ணிற் காண்பதுன் காட்சிகை யாற்றொழில்
பண்ணல் பூசை பகர்வது மந்திரம்
மண்ணொ டைந்தும் வழங்குயிர் யாவுமே
அண்ண லேநின் னருள்வடி வாகுமே. (௩௩)

வடிவெ லாநின் வடிவென வாழ்த்திடாக்
கடிய னேனுமுன் காரணங் காண்பனோ
நெடிய வானென வெங்கு நிறைந்தொளிர்
அடிக ளேயர சேயரு ளத்தனே. (௩௪)

அத்த னேயகண் டானந்த னேயருட்
சுத்த னேயென வுன்னைத் தொடர்ந்திலேன்
மத்த னென்பெறு மாமல மாயவான்
கத்த னேகல்வி யாதது கற்கவே. (௩௫)

கற்று மென்பலன் கற்றிடு நூன்முறை
சொற்ற சொற்கள் சுகாரம்ப மோநெறி
நிற்றல் வேண்டு நிருவிகற் பச்சுகம்
பெற்ற பேர்பெற்ற பேசாப் பெருமையே. (௩௬)

பெருமைக் கேயிறு மாந்து பிதற்றிய
கருமிக் கையக தியுமுண் டாங்கொலோ
அருமைச் சீரன்பர்க் கன்னையொப் பாகவே
வருமப் பேரொளி யேயுன்ம னந்தமே. (௩௭)

உன்ம னிக்கு ளொளிர்பாஞ் சோதியாஞ்
சின்ம யப்பொரு ளேபழஞ் செல்வமே

புன்ம லத்துப் புழுவன்ன பாவியேன்
கன்ம னத்தைக் கரைக்கக் கடவதே. (௩௮)

கரையி லின்பக் கடலமு தேயிது
வரையி னானுனை வந்து கலந்திலேன்
உரையி லாவின்ப முள்ளவர் போலவித்
தரையி லேநடிக் கேனென்ன தன்மையே. (௩௯)

மையு லாம்விழி மாதர்க டோதகப்
பொய்யி லாழும் புலையினிப் பூரைகாண்
கையி லாமல கக்கனி போன்றவென்
ஐய னேயெனை யாளுடை யண்ணலே. (௪0)

அண்ண லேயுன் னடியவர் போலருட்
கண்ணி னாலுனைக் காணவும் வாவெனப்
பண்ணி னாலென் பசுத்துவம் போயுயும்
வண்ண மாக மனோலயம் வாய்க்குமே. (௪௧)

வாய்க்குங் கைக்கு மௌன மௌனமென்
றேய்க்குஞ் சொற்கொண் டிராப்பக லற்றிடா
நாய்க்கு மின்பமுண் டோநல் லடியரைத்
தோய்க்கு மானந்தத் தூவெளி வெள்ளமே. (௪௨)

தூய தான துரிய வறிவெனுந்
தாயு நீயின்பத் தந்தையு நீயென்றுற்
சேய தாமிந்தச் சீவத் திரளன்றே
ஆயும் பேரொளி யான வகண்டமே. (௪௩)

அகண்ட மென்ன வருமறை யாகமம்
புகன்ற நின்றன்மை போதத் தடங்குமோ
செகங்க ளெங்குந் திரிந்துநன் மோனத்தை
உகந்த பேருனை யொன்றுவ ரையனே. (௪௪)

ஐய னேயுனை யன்றி யொருதெய்வங்
கையி னாற்றொழ வுங்கரு தேன்கண்டாய்
பொய்ய னாகிலும் பொய்யுரை யேன்சுத்த
மெய்ய னாமுனக் கேவெளி யாகுமே. (சரு)

வெளியி னின்ற வெளியாய் விளங்கிய
ஒளியி னின்ற வொளியாமுன் றன்னைநான்
தெளிவு தந்தகல் லாலடித் தேவென்று
களியொ ருந்தவன் றேகற்ற கல்வியே. (சசா)

கல்லை யுற்ற கருத்தினர் கார்நிறத்
தல்லை யொத்த குழலின ராசையால்
எல்லை யற்ற மயல்கொள வோவெழிற்
றில்லை யிற்றிக ழுந்திருப் பாதனே. (சஎ)

திருவ ருட்டெய்வச் செல்வி மலைமகள்
உருவி ருக்கின்ற மேனி யொருபரங்
குருவை முக்கணெங் கோவைப் பணிநெஞ்சே
கருவி ருக்கின்ற கன்மமிங் கில்லையே. (சஅ)

கன்ம மேது கடுநர கேதுமேற்
சென்ம மேதெனைத் தீண்டக் கடவதோ
என்ம னோரத மெய்தும் படிக்கருள்
நன்மை கூர்முக்க ணாதனி ருக்கவே. (சகூ)

நாத கீதனென் னாதன்முக் கட்பிரான்
வேத வேதியன் வெள்விடை யூர்திமெய்ப்
போத மாய்நின்ற புண்ணியன் பூந்திருப்
பாத மேகதி மற்றிலை பாழ்நெஞ்சே. (ருo)

மற்று னக்கு மயக்கமென் வன்னெஞ்சே
கற்றை வார்சடைக் கண்ணுத லோனருள்

பெற்ற பேரவ ரேபெரி யோரெலாம்
முற்று மோர்ந்தவர் மூதுரை யர்த்தமே. (ருக)

உரையி றந்துளத் துள்ள விகாரமாந்
திரைக டந்தவர் தேடுமுக் கட்பிரான்
பரைநி றைந்த ப்ரப்பெங்ங னங்ஙனே
கரைக டந்தின்ப மாகக் கலப்பனே. (ருஉ)

கலந்த முத்தி கருதினுங் கேட்பினு
நிலங்க ளாதியு நின்றெமைப் போலவே
அலந்து போயின மென்னு மருமறை
மலர்ந்த வாய்முக்கண் மாணிக்கச் சோதியே. (ருங)

சோதி யாதெனைத் தொண்டருட் கூட்டியே
போதி யாதவெல் லாமெளப் போதிக்க
ஆதி காலத்தி லுன்னடிக் காந்தவம்
ஏது நான்முயன் றேன்முக்க ணைந்தையே. (ருச)

எந்த நாளைக்கு மீன்றருடாயென
வந்த சீரருள் வாழ்கவெல் றுன்னுவேன்
சிந்தை நோக்கந் தெரிந்து குறிப்பெலாந்
தந்து காக்குந் தயாமுக்க ணுதியே. (ருரு)

கண்ண கன்றவிக் காசினி யூடெங்கும்
பெண்ணொ டாண்முத லாமென் பிறவியை
எண்ண வோவரி தேழை கதிபெறும்
வண்ண முக்கண் மணிவந்து காக்குமே. (ருகூ)

காக்கு நின்னருட் காட்சியல் லாலொரு
போக்கு மில்லையென் புந்திக் கிலேசத்தை
நீக்கி யாளுகை நின்பர மன்பினர்
ஆக்க மேமுக்க ணனந்த மூர்த்தியே. (ருஎ)

ஆனந் தங்கதி யென்னவென் ஞனந்த
மோனஞ் சொன்ன முறைபெற முக்கணெங்
கோனின் றீந்த குறிப்பத னல்வெறுந்
தீனன் செய்கை திருவருட் செய்கையே. (ருஅ)

கையி னற்றெழு தேத்திக் கசிந்துளம்
மெய்யி னனுனைக் காண விரும்பினேன்
ஐய னேயர சேயரு ளேயருட்
டைய லோர்புறம் வாழ்சக நாதனே. (ருக)

சகத்தின் வாழ்வைச் சதமென வெண்ணியே
மிகுத்த தீமை விளைய விளைக்கின்றேன்
அகத்து ளாரமு தாமைய நின்முத்திச்
சுகத்தி னன்வந்து தோய்வ தெக்காலமே. (சு0)

கால மூன்றுங் கடந்தொளி ராநின்ற
சீல மேநின் றிருவரு ளாலிந்த்ர
சால மாமிச் சகமென வெண்ணிநின்
கோல நாடுத லென்று கொடியனே. (சுக)

கொடிய வெவ்வினைக் கூற்றைத் துரந்திடும்
அடிக ளாம்பொரு ளேநினைக் கன்பினறிப்
படியி லெழுமை பற்றுகின் றேன்வெறு
மிடியி னேன்கதி மேவும் விதியின்றே. (சுஉ)

விதியை யும்விதித் தென்னை விதித்திட்ட
மதியை யும்விதித் தம்மதி மாயையிற்
பதிய வைத்த பசுபதி நின்னருட்
கதியை யெப்படிக் கண்டு களிப்பதே. (சுரு)

கண்ட கண்ணுக்குக் காட்டுங் கதிரெனப்
பண்டு மின்றுமென் பானின் றுணர்த்திடும்

அண்ட னேயுனக் கோர்பதி னுயிரந்
தெண்ட னென்பொய்ம்மை தீர்த்திடல் வேண்டுமே. (௬௪)

வேண்டும் யாவு மிறந்து வெளியிடைத்
தூண்டு வாரற்ற சோதிப் பிரானின்பாற்
பூண்ட வன்பர்தம் பொற்பணி வாய்க்குமேல்
ஈண்டு சென்ம மெடுப்ப னனந்தமே. (௬௫)

எடுத்த தேக மிறக்கமு னேயெனைக்
கொடுத்து நின்னையுங் கூடவுங் காண்பனோ
அடுத்த பேரறி வாயறி யாமையைக்
கெடுத்த வின்பக் கிளர்மணிக் குன்றமே. (௬௬)

குன்றி டாத கொழுஞ்சுட ரேமணி
மன்று ளாடிய மாணிக் கமேயுனை
அன்றி யார்துணை யாருற வார்கதி
என்று நீயெனக் கின்னருள் செய்வதே. (௬௭)

அருளெ லாந்திரண் டோர்வடி வாகிய
பொருளெ லாம்வல்ல பொற்பொது நாதவென்
மருளெ லாங்கெடுத் தேயுள மன்னலால்
இருளெ லாமிரிந் தெங்கொளித் திட்டதே. (௬௮)

எங்கு மென்னை யிகலுற வாட்டியே
பங்கஞ் செய்த பழவினை பற்றற்றால்
அங்க ணுவுன் னடியிணை யன்றியே
தங்க வேறிட முண்டோ சகத்திலே. (௬௯)

உண்ட வர்க்கன்றி யுட்பசி யோயுமோ
கண்ட வர்க்கன்றிக் காத லடங்குமோ
தொண்ட ருக்கெளி யானென்று தோன்றுவான்
வண்ட மிழ்க்கிசை வாக மதிக்கவே. (௭0)

மதியுங் கங்கையுங் கொன்றையு மத்தமும்
பொதியுஞ் சென்னிப் புனிதநின் பொன்னடிக்
கதியை விட்டிந்தக் காமத்தி லாழ்ந்தவென்
விதியை யெண்ணி விழிதுயி லாதன்றே. (எக)

அன்றெ னச்சொல வாமென வற்புதம்
நன்றெ னச்சொல நண்ணிய நன்மையை
ஒன்றெ னச்சொன வொண்பொரு ளேயொளி
இன்றெ னக்கருள் வாயிரு ளேதவே. (எ௨)

இருவ ரேபுகழ்ந் தேத்தற் கினியராம்
ஒருவ ரேதுணை யென்றுண ராய்நெஞ்சே
வருவ ரேகொடுங் காலர்கள் வந்தெதிர்
பொருவ ரேயவர்க் கென்கொல் புகல்வதே. (எ௩)

புகழுங் கல்வியும் போதமும் பொய்யிலா
அகமும் வாய்மையு மன்பு மளித்தவே
சுகவி லாசத் துணைப்பொரு ளோற்றமாங்
ககன மேனியைக் கண்டனன் கண்களே. (எ௪)

கண்ணு ணின்ற வொளியைக் கருத்தினை
விண்ணு ணின்று விளங்கிய மெய்யினை
எண்ணி யெண்ணி யிரவும் பகலுமே
நண்ணு கின்றவர் நான்முகுந் தெய்வமே. (எ௫)

தெய்வம் வேறுள தென்பவர் சிந்தனை
கைவ ரென்பது நற்பர தற்பர
சைவ சிற்சிவ னேயுனைச் சார்ந்தவர்
உய்வ ரென்பதும் யானுணர்ந் தேனுற்றே. (எ௬)

ஊற்ற வேளைக் குறுதுணை யாயிந்தச்
சுற்ற மோநமைக் காக்குஞ் சொலாய்நெஞ்சே

கற்றை வார்சடைக் கண்ணுதல் பாதமே
பற்ற தாயிற் பரசுகம் பற்றுமே. (௭௭)

பற்ற லாம்பொரு ளேபரம் பற்றினால்
உற்ற மாதவர்க் குண்மையை நல்குமே
மற்றும் வேறுள மார்க்கமெ லாமெடுத்
தெற்று வாய்மன மேகதி யெய்தவே. (௭௮)

திருச்சிற்றம்பலம்.

# ஆ ர ண ம்.

ஆரண மார்க்கத் தாகம வாசி யற்புத மாய்நடந் தருளுங், காரண முணர்த்துங் கையுநின் மெய்யுங் கண்கண்டேன் றுடைய வென் கண்ணே, பூரண வறிவிற் கண்டில மதனாற் போற்றியிப் புந்தியோ டிருந்து, தாரணி யுள்ள மட்டுமே வணங்கத் தமிய னேன் வேண்டிடத் தருமே. (௧)

இடமொரு மடவா ளுலகினைக் கீந்திட் டெவ்வுல கத்தைய மீன்றுந், தடமுறு மகில மடங்குநா ளம்மை தன்னையு மொழித்துவின் னெனவே, படருறு சோதிக் கருணையங் கடலே பாயிருட் படுகரிற் கிடக்கக், கடனதோ நினைப்பு மறப்பெனுந் திரையைக் கவர்ந்தெனை வளர்ப்பதுன் கடனே. (௨)

வளம்பெறு ஞான வாரிவாய் மடுத்து மண்ணையும் விண்ணையுந் தெரியா, தளம்பெறுந் துரும்பொத் தாவியோ டாக்கை யானந்த மாகவே யலந்தேன், களம்பெறு வஞ்ச நெஞ்சினர் காணுக் காட்சியே சாக்ஷியே யறிஞர், உளம்பெறுந் துணையே பொதுவினி னடிக்கு முண்மையே யுள்ளவா றிதுவே. (௩)

உள்ளமே நீங்கா வென்னை வா வாவென் றுலப்பிலா வானந்த மான, வெள்ளமே பொழியுங் கருணைவான் முகிலே வெப்பிலாத் தண்ணருள் விளக்கே, கள்ளமே தூக்குந் தூவெளிப் பரப்பே கருவெனக் கிடந்தபாழ் மாயப், பள்ளமே வீழா தெனைக்கரை யேற்றிப் பாலிப்ப துன்னருட் பரமே. (௪)

பரம்பர மாகிப் பக்குவம் பழுத்த பழவடி யார்க்கருள் பழுத்துச், சுரந்தினி திரங்குந் தானகற் பகமே சோதியே தொண்டனே னின்னை, இரந்துநெஞ் சுடைந்து கண்டுயில் பெருமலிருந்தது மென்கணி லிருட்டைக், கரந்துநின் கண்ணுற் றுயில்பெறல் வேண்டிக் கருதினேன் கருத்திது தானே. (௫)

கருத்தினுட் கருத்தா யிருந்துநீ யுணர்த்துங் காரணங் கண்டுசும் மாதான், வருத்தமற் றிருந்து சுகம்பெறு வண்ணம் வருந்தினேன் மதியின்மை தீர்ப்பார், ஒருத்தரா ருளப்பா டுணர்பவர் யாவ ருலகவர் பன்னெறி யெனக்குப், பொருத்தமோ சொல்லாய் மௌனசற் குருவே போற்றிநின் பொன்னடிப் போதே. (௬)

அடியெனு மதுவு மருளெனு மதுவு மறிந்திடி னிர்க்குணநிறைவு, முடியெனு மதுவும் பொருளெனு மதுவு மொழிந்திடிற் சுகமன மாயைக், குடிகெட வேண்டிற் பணியற நிற்றல் குணமெனப் புன்னகை காட்டிப், படிமிசை மௌனி யாகிநீ யாளப் பாக்கிய மென்செய்தேன் பரனே. (௭)

என்செய லின்றி யாவுநின் செயலென் றெண்ணுவே னெவ்வொருகாலம், புன்செயன் மாயை மயக்கினென் செயலாப் பொருந்துவே னஃதொரு காலம், பின்செயல்யாது நினைவின்றிக் கிடப்பேன் பித்தனே னன்னிலை பெறநின், றன்செயலாக முடித்திடல் வேண்டுஞ் சச்சிதா னந்தசற் குருவே. (௮)

திருவுரு வாகி மௌனியாய் மௌனக் கொள்கையை யுணர்த்தினை யதனுற், கருவுரு வாவ தெனக்கிலை யிந்தக் காயமோ

பொய்யெனக் கண்ட, திருவுரு வாள ரனுபவ நிலையுஞ் சேருமோ வாவலோ மெத்த, அருவுரு வாகி யல்லவாய்ச் சமய மளவிடா வானந்த வடிவே. (கூ)

வடிவிலா வடிவாய் மனநினை வணுகா மார்க்கமாய் நீக்க ருஞ் சுகமாய், முடிவிலா வீட்டின் வாழ்க்கைவேண் டினர்க்குன் மோனமல் லால்வழி யுண்டோ, படியிரு ளகலச் சின்மயம் பூத்த பசுங்கொம்பை யடக்கியோர் கல்லால், அடியிலே யிருந்த வான ந்த வரசே யன்பரைப் பருகுமா ரமுதே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

# சொல்லற்கரிய.

சொல்லற்கரியபரம்பொருளேசுகவாரிதியேசுடர்க்கொழுந்தே
வெல்லற்கரியமயலிலெனைவிட்டெங்கொளித்தாயாகெட்டேன்
கல்லிற்பசியநாருரித்துக்கடுக்கற்பெரியகடலடைக்கும்
அல்லிற்கரியவந்தகனுக்காளாக்கினையோவறியேனே. (க)

அறிவிற்கறிவுதாரகமென்றறிந்தேயறிவோடறியாமை
நெறியிற்புகுதாதோர்படித்தாய்நின்றநிலையுந்தெரியாது
குறியற்றகண்டாதீதமயக்கோதிலமுதேநினைக்கூறுகிப்
பிறிவற்றிருக்கவேண்டாவோபேயேற்கினிநீபேசாயே. (உ)

போசாவறுபூதியையடியேன்பெற்றுப்பிழைக்கப்பேரருளாற்
றேசோமயந்தந்தினியொருகாற்சித்தத்திருளுந்தீர்ப்பாயோ
பாசாடவியைக்கடந்தவன்பர்பற்றுமகண்டப்பரப்பான
ஈசாபொதுவினடமாடுமிறைவாகுறையாவின்னமுதே. (ங)

இன்பக்கடலிற்புகுந்திரவும்பகலுந்தோற்றாமல், அன்பிற் கரைந்துகரைந்துநையவென்றுவாரேசிவனைக்கூவிப், பின்புற்றழுஞ்

சேயென்விழிநீர்பெருக்கிப்பெருக்கிப்பித்தாகித், துன்பக்கடல்வி
ட்டகல்வேனோசொரூபானந்தச்சுடர்க்கொழுந்தே. (௪)

கொழுந்துதிகழ்வெண்பிறைச்சடிலக்கோவேடன்றிற்கூத்தாடற்
செழுந்தசுடரேயிமையவரையென்றாய்கண்ணுக்கினியானே
தொழுந்தெய்வமுநீகுருவுநீதுணைநீதந்தைதாயுநீ
அழுந்தும்பவநீநன்மையுநீயாவியாக்கைநீதானே. (௫)

தானேயகண்டாகாரமயந்தன்னிலெழுந்துபொதுநடஞ்செய்
வானேயாயப்பிறப்பறுப்பான்வந்துன்னடிக்கேகரங்கூப்பித்
தேனேயென்னைப்பருகவல்லதெள்ளாரமுதேசிவலோகக்
கோனேயெனுஞ்சொன்னினதுசெவிகொள்ளாதென்னோகூறாயே.

கூறுநின்றவிடர்க்கவலைக்குடும்பக்கூத்துட்டுளைந்துதடு
மாறுகின்றபாவியைநீவாவென்றழைத்தாலாகாதோ
நீறார்மேனிமுக்கணுடைநிமலாவடியார்நினைவினிடை
ஆறும்பெருகும்பெருங்கருணையரசேயென்னையாள்வானே. (௭)

வானேமுதலாம்பெரும்பூதம்வகுத்துப்புரந்துமாற்றவல்ல
கோனேயென்னைப்புரக்குநெறிகுறித்தாயிலையேகொடியேனைத்
தானேபடைத்திங்கென்னபலன்றன்னைப்படைத்தாயுன்கருத்தை
நானேதென்றிங்கறியேனேநம்பினேன்கண்டருள்வாயே. (௮)

கண்டார்கண்டகாட்சியுநீகாணார்காணுக்கள்வனுநீ
பண்டாருயிர்நீயாக்கையுநீபலவாஞ்சமயப்பகுதியுநீ
எண்டோண்முக்கட்செம்மேனியெந்தாய்நினக்கேயெவ்வாறு
தொண்டாய்ப்பணிவரவர்பணிநீசூட்டிக்கொள்வதெவ்வாறே. ()

ஆட்டியெனவேதென்றிடுஞ்சுமையைச் சுமத்தியென்னையுஞ் சுமையா
ளாக், கட்டிப்பிடித்துவினைவழியேகூத்தாட்டினையேநினதருளா
ல், வீட்டைக்கருதுமப்போதுவெளியாமுலகவியப்பனைத்தும், ஏட்
டுக்கடங்காச்சொப்பனம்போலெந்தாயிருந்ததென்சொல்வேன்.

திருச்சிற்றம்பலம்.

---

# வம்பனேன்.

வம்பனேன்கள்ளங்கண்டுமன்னருள்வெள்ளராய
உம்பர்பாலேவல்செய்யென்றுணர்த்தினையோகோவானோர்
தம்பிரானேநீசெய்ததயவுக்குங்கைம்மாறுண்டோ
எம்பிரானுய்ந்தேனுய்ந்தேனினியொன்றுங்குறைவிலேனே. (௧)

குறைவிலாநிறைவாய்ஞானக்கோதிலானந்தவெள்ளத்
துறையிலேபடிந்துமூழ்கித்துளைந்துநான்றோன்றுவாறுள்
றுறையிலேயுணர்த்திமோனவொண்சுடர்வைவாடந்த
இறைவனேயனைப்பிரிந்திங்கிருக்கிலேனிருக்கிலேனே. (௨)

இருநிலமாதிநாதமீறதாமிவைகடந்த
பெருநிலமாயதூயபேரொளிப்பிழம்பாய்நின்றுங்
கருதருமகண்டானந்தக்கடவுணின்காட்சிகாண
வருகவென்றழைத்தாலன்றிவாழ்வுண்டோவஞ்சனேற்கே. (௩)

வஞ்சனையழுக்காறாதிவைத்திடும்பாண்டமான
நெஞ்சனைவலிதின்மேன்மேனெக்குநெக்குருகப்பண்ணி
அஞ்சலிசெய்யுங்கையுமருவிநீர்விழியுமாகத்
தஞ்சமென்றிரங்கிக்காக்கத்தற்பராபரமுனக்கே. (௪)

உனக்குநானடித்தொண்டாகியுன்னடிக்கன்புசெய்ய
எனக்குநீதோற்றியஞ்சேலென்னுநாளெந்தநாளோ
மனக்கிலேசங்கடீர்ந்தமாதவர்க்கிரண்டற்றோங்குந்
தனக்குநேரில்லாவொன்றேசச்சிதானந்தவாழ்வே. (௫)

வாழ்வென்வபந்தேயென்னைவசஞ்செய்துமருட்டும்பாழ்த்த
ஊழ்வினைப்பகுதிகெட்டிங்குன்னையுங்கிட்டுவேனோ
தாழ்வெனுஞ்சமயநீங்கித்தலைமையுணர்ந்தோர்கட்கெல்லாஞ்
சூழ்வெளிப்பொருளேமுக்கட்சோதியேயமரரேறே. (௬)

உருவாம்பரிபாவாடையிருங்கலையுரியாவென்றும்
நாறுநற்சாந்தநீறுஞ்சமமுமதாக்கொண்ட
கூறருந்துணைத்தேயுன்றன்குரைகழல்குறுகினல்லால்
ஆறுமோதாபசோபமகலுமோவல்லரனே. (எ)

ஞானமுந்தவமும்யோகத்தன்மையுமுணராவென்பால்
ஞானமுந்தெளிவிட்டாவின்பநன்மையுநல்குவாயோ
பானலங்கவர்ந்ததீஞ்சொற்பச்சிளங்கிளிகாண
வானவரிறைஞ்சநின்றுள்வயங்கியநடத்திறனே. (அ)

நடத்தியிவ்வுலகையெல்லாநாதநீநிறைந்ததன்மை
திடத்தொடுணர்ந்தானந்தத்தெள்ளமுதருந்திடாதே
விடத்திரளனையகாமவேட்கையிலழுந்திமாயைச்
சடத்தினைமெய்யென்றெண்ணித்தளரவோதனியனேனே. (கூ)

தனிவளர்பொருளேமாறுத்தண்ணருங்கருணைபூத்த
இனியகற்பகமேமுக்கணெந்தையேநினைக்கன்பின்றி
கனிபெருங்குடிலங்காட்டுநயனவேற்கரியகூந்தல்
வனிதையர்மயக்கிலாழ்ந்துவருந்தவோவம்பனேனே. (கO)

திருச்சிற்றம்பலம்.

---

# சிவன்செயல்.

சிவன்செயலாலேயாதும்வருமெனத்தேறேனாளும்
அவன்றருவினைவையெல்லாமகற்றிலேனசைவெள்ளங்
கவர்ந்துகொண்டிழுப்பவந்தக்கட்டிலேயகப்பட்டையோ
பவந்தனையீட்டியீட்டிப்பதைக்கின்றேன்பாவியேனே. (க)

பாவியேனினியென்செய்கேன்பரமனேபணிந்துன்பாதஞ்
சேவியேன்விழிநீர்மல்கச்சிவசிவவென்றுதேம்பி

ஆவியேநிறையவந்தவமுதமேயென்னேனந்தோ
சாவியோஞ்சமயத்தாழ்ந்துசகத்திடைத்தவிக்கின்றேனே. (உ)

இடைந்திடைந்தேங்கிமெய்புளகிப்பவெழுந்தெழுந்தையநின் சரணம், அடைந்தனனினிநீகைவிடேலுனக்கேயபயமென்றஞ்சலிசெய்துள், உடைந்துடைந்தெழுதுசித்திரப்பாவையொத்துநானசைவறநிற்பத், தொடர்ந்துநீயெனையாட்கொள்ளுநாளென்றோசோதியேயாதிநாயகனே. (௩)

ஆதியாய்நடுவாயந்தமாய்ப்பந்தம் யாவுமற்றகம்புறநிறைந்த, சோதியாய்ச்சுகமாயிருந்த வெம்பெருமான்றொண்டனேன்சகத்திலேயிருக்கப், போதியாவண்ணங்கைவிடன்முறையோபுன்மையேனென்செய்கேன்மனமோ, வாதியா நின்ற தன்றியும் புலனைசேர்வாயிலோதீயினுங்கொடிதே. (௪)

வாயிலோரைந்திற்புலனெனும்வேடர்வந்தெனையீர்த்துவெங்காமத், தீயிலேவெதுப்பியுயிரொடுந்தின்னச்சிந்தைநைந்துருகிமெய்மறந்து, தாயிலாச்சேய்போலலைந்தலைப்பட்டேன்றுயினுங்கருணையாமன்றுள், நாயகமாகியொளிவிடுமணியேநாதனேஞானவாரிதியே. (௫)

ஞானமேவடிவாய்த் தேடுவார் தேடுநாட்டமேநாட்டத்துணிறைந்த, வானமேயெனக்குவந்துவந் தோங்குமார்க்கமேமருளர்தாமறியா, மோனமேமுதலேமுத்திநல்வித்தேமுடிவிலாவின்பமேசெய்யுந், தானமேதவமே நின்னைநா னினைந்தேன் றமியனேன்றனைமறப்பதற்கே. (௬)

மறமலியுலகவாழ்க்கையேவேண்டும்வந்து நின்னன்பர் தம்பணியாம், அறமதுவிடைக்கின்றியானந்தவற்புதநிட்டையினிமித்தம், துறவதுவேண்டுமெளியயெனக்குத்தூயநல்லருடரினின்னைப், பிறவியும்வேண்டும்யானெனதிறக்கப்பெற்றவர்பெற்றிடும்பேறே. (௭)

பெற்றவர்பெற்றபெருந்தவக்குன்றே பெருகியகருணைவாரிதியே, நற்றவத்துணையேயானந்தக்கடலேஞாதருஞானஞேயங்கள், அற்றவர்க்கருதநட்புடைக்கலப்பேயநேகமாய்நின்னடிக்கன்பு, கற்றதுங்கேள்விகேட்டதுநின்னைக்கண்டிடும்பொருட்டன்றோகாணே. (அ)

அன்றுநால்வருக்குமொளிநெறிகாட்டு மன்புடைச்சோதியேசெம்பொன், மன்றுண்முக்கண்ணுங்காளகண்டமுமாய்வயங்கியஞானமேமெய்யன்றுட், டுன்றுகூரிருளைத்துரந்திடுபதியேதுன்பமுமின்பமுமாகி, நின்றவாதனையைக்கடந்தவர்நினைவேநேசமேநின்பரம்யானே. (௯)

யானெனல்காணேன்பூரணநிறைவில்யாதினுமிருந்தபேரொளிசீ, தானெனநிற்குஞ்சமத்துறவென்னைத்தன்னவனுக்கவுந்தகுங்கால், வானெனவயங்கியொன்றிரண்டென்னுமார்க்கமாநெறிக்குமாறுத், தேனெனருசித்துளன்பரைக்கலந்தசெல்வமேசிற்பரசிவமே. (க0)

திருச்சிற்றம்பலம்.

# தன்னையொருவர்.

தன்னையொருவர்க்கறிவரிதாய்த்தானேதானாயெங்குநிறைந்
துன்னற்கரியபரவெளியாயுலவாவமுதாயொளிவிளக்காய்
என்றுங்கலந்தாயானறியாதிருந்தாயிறைவாவினியேனும்
நின்னைப்பெறுமாறெனக்கருளாநிலையைக்கொடுக்கநினையாயோ.()

நினைவுநினைவுக்கெட்டாதநெறிபெற்றுணர்ந்தநெறியாளர்
வினையைக்களைக்குப்பரமவின்பவெள்ளப்பெருக்கேநினதருளான்
மனைவிபுதல்வரன்னைபிதாமாடுவீடென்றிடுமயக்கந்
தனையுமறந்திங்குனைமறவாத்தன்மைவருமோதமியேற்கே. (உ)

வரும்போமென்னுமிருநிலைமைமன்றேதொருதன்மைத்தாகிக்
கரும்போதேனேமுக்கனியோவென்னவென்னுட்கலந்துநலந்
தரும்பேரின்பப்பொருளேநின்றன்னைநினைந்துநெக்குருகேன்
இரும்போகல்லோமரமோவென்னிதயமியாதென்றறியேனே. ()

அறியுந்தரமோநானுன்னையறிவுக்கறிவாய்நிற்கையிலுற்; பிறியுந்தரமோநீயென்னைப்பெம்மானேபேரின்பமதாய்ச், செறியும்பொருளேநின்னையன்றிச்செறியாப்பொருளுன்பெறும் பேற்றை, நெறியின்றொருமுகவிசாரித்தாலினக்கோவில்லையெனக்காமே. (ச)

ஏனதென்பதும்பொய்யானெனல்பொய்யெல்லாமிறந்தவிடங்காட்டும், தினதென்பதும்பொய்நீயெனல்பொய்நிற்குநிலைக்கேநேசித்தேன், மனமதென்பதுமோவென்வசமாய்வாராதையகின்னருளோ, தனமதென்பதுக்குமிடங்காணேன்றமியேனெவ்வாறுய்வேனே. (ரு)

உய்யும்படிக்குன்றிருக்கருணையொன்றைக்கொடுத்தாலுடையாய்பாழ்ம், பொய்யுமவாவுமழுக்காறும்புடையட்டோடுநன்னெறியாம், மெய்யுமறிவுபெறும்பேறும்விளங்குமெனக்குன்னடியார்பாற், செய்யும்பணியுங்கைகூடுஞ்சிந்தைத்துயருந்தீர்ந்திடுமே. ()

சிந்தைத்துயரொன்றொருபாவிசினந்துசினந்துபோர்முயங்க
நிந்தைக்கிடமாய்ச்சகவாழ்வைநிலையென்றுணர்ந்தேநிற்கின்றேன்
எந்தப்படியுன்னருள்வாய்க்குமெனக்கப்படிநீயருள்செய்வாய்
பந்தத்துயரற்றவர்க்கெளியபரமானந்தப்பழம்பொருளே. (எ)

பொருளைப்பூவைப்பூவையரைப் பொருளென் றெண்ணுமொருபாவி, இருளைத்துரந்திட்டொளிநெறியையென்னுட்பதிப்பதென்றுகொலோ, தெருளத்தெருளவன்பர்நெஞ்சந்தித்தித்துருகத்தெவிட்டாத, அருளைப்பொழியுங்குணமுகிலேயறிவானந்தத்தாரமுதே. (அ

ஆராவமிர்தம்விரும்பினர்களறியவிடத்தையமிர்தாக்கும்
பேரானந்தசித்தனெனும்பெரியோயாவிக்குரியோய்கேள்
காராகிரகவலையினிடைக்கட்டுண்டிருந்தகளைகளெல்லாம்
ஊராலொருநாட்கையுணவேற்றுண்டாலெனக்கிங்கொழிந்திடுமே

எனக்கென்றிருந்தவுடல்பொருளும்யானுநினவென்றீந்தவண்ணம் அனைத்துமிருந்துமிலதாகவருளாய்நில்லாதழிவழக்காய், மனத்தாட்புகுந்துமயக்கவுமென்மதிக்குட்களங்கம்வந்ததென்னோ, தனக்கொன்றுவமையற்றநிறைந்ததனியேதன்னந்தனிமுதலே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

---

# ஆசையெனும்.

ஆசையெனும்பெருங்காற்றூடிலவம்பஞ்செனவு மனதலையுங்காலம், மோகம்வருமிதனாலேகற்றதுங்கேட்டதுந்தூர்ந்துமுத்திக்கான, நேசமுநல்வாசமும்போய்ப்புலனாயிற்கொடுமைபற்றித்திப்பரந்தோ, தேசுபழுத்தருள்பழுத்தபராபரமேநிராசையின்றேற்றெய்வமுண்டோ. (௧)

இரப்பானெங்கொருவனவன் வேண்டுவ கேட்டருள்செயெனவேசற்றேதான், புரப்பான்றனருணாடியிருப்பதுபோலெங்குநிறைபொருளேகேளாய், மரப்பான்மைநெஞ்சினன்யான்வேண்டுவகேட்டருள்செயவேமௌனத்தோடந், தரப்பான்மையருணிறைவிலிருப்பதுவோபராபரமேசகசநிட்டை. (௨)

சாட்டையிற்பம்பரசாலம்போலெலாம்
ஆட்டுவானிறையெனவறிந்துநெஞ்சமே
தேட்டமொன்றறவருட்செயலினிற்றியேல்
வீட்டறந்துறவறமிரண்டுமேன்மையே. (௩)

தன்னெஞ்சநினைப்பொழியாதறிவிலிநான்ஞானமெனுந் தன்மைபேச, உன்னெஞ்சமகிழ்ந்தொருசொல்லுரைத்தனையேயதனையுன்னியுருகேனையா, வன்னெஞ்சோவிரங்காதமரநெஞ்சோவிருப்புநெஞ்சோவைரமான, கன்னெஞ்சோவலதுமண்ணாங்கட்டிநெஞ்சோவெனதுநெஞ்சங்கருதிற்றானே. (ரு)

வாழிசோபனம்வாழிநல்லன்பர்கள்
சூழவந்தருடோற்றமுஞ்சோபனம்
ஆழிபோலருளையன்மவுனத்தால்
ஏழையேன்பெற்றவின்பமுஞ்சோபனம். (௬)

கொடுக்கின்றோர்கள்பாற்குறைவையாதியானெனுங்குதர்க்கம்
விடுக்கின்றோர்கள்பாற்பிரிகிலாதுள்ளன்புவிடாதே
அடுக்கின்றோர்களுக்கிரங்கிடுந்தண்டமிழலங்கல்
தொடுக்கின்றோர்களைச்சோதியாதருபரஞ்சோதி. (௬)

உலகமாயையி லேயெளியேன்றனை யுழலவிட்டனையேயுடையாயருள், இலகுபேரின்பவீட்டினிலென்னையுமிருத்திவைப்பதெக்காலஞ்சொலாயெழிற், றிலகவாணுதற்பைந்தொடிகண்வலை தேக்கநாடகஞ்செய்தடியார்க்கெலாம், அலகிலாவினைதீர்க்கத்துசங்கட்டுமப்பனேயருளானந்தசோதியே. (எ)

முன்னிலைச்சுட்டொழிதியெனப் பல்காலுநெஞ்சே நான்மொழிந்தேனேநின், றன்னிலைக்காட்டாதேயென்னையொன்றாக்கூட்டாதேசரணன்போந்த, அந்நிலையேநிலையந்தநிலையிலேசித்திமுத்தியனைத்துந்தோன்றும், நன்னிலையீதன்றியிலைசுகமென்றேசுகர்முதலோர்நாடினாரே. (அ)

அத்துவிதம்பெறும்பேறென்றறியாமலியானெனும்பேயகந்தையோடு, மத்தமதியினர்போலனந்திடப்பவின்னமின்னம்வருந்துவேனோ, சுத்தபரிபூரணமாய்நின்மலமாயகண்டிதமாய்ச்சொரூபானந்த, சத்திகணீங்காதவனந்தன்மயமாயருள்பழுத்துத்தழைத்தவொன்றே. (௯)

தந்தைதாயுநீயென்னுயிர்த்துணையுநீசஞ்சலமதுதீர்க்க
வந்ததேசிகவடிவுநீயுனையலான்மற்றொருதுணைகாணேன்
அந்தமாதியுமளப்பருஞ்சோதியேயாதியேயடியார்தஞ்
சிந்தைமேவியதாயுமானவனெனுஞ்சிரகிரிப்பெருமானே. (க0)

காதில்லோலையைவரைந்துமேற்குமிழையுங்கறுவிவேள்கருநீலப்
போதுபோன்றிடுங்கண்ணியர்மயக்கிலெப்போதுமேதளராமன்
மாதுகாதலிபங்கனையபங்கனைமாடமாளிகைசூழுஞ்
சேதுமேவியராமநாயகன்றனைச்சிந்தைசெய்மடநெஞ்சே. (கக)

அண்டமுமாய்ப்பிண்டமுமாயளவிலாதவாருயிருக் கோருயி
ராயமர்ந்தாயாறற், கண்டவரார்கேட்டவராருன்றனுன்னைக்கா
ண்பதல்லாலென்னறிவாற்காணப்போமோ, வண்டுளபமணிமார்
பன்புதல்வனோடு மனைவியொடுங் குடியிருந்து வணங்கிப் போற்
றும், புண்டரிகபுரத்தினிறுதாந்தமௌனபோதாந்தநடம்புரியும்
புனிதவாழ்வே. (கஉ)

பொறியிற்செறியைம்புலக்களியைப்புந்திக்கவராற்புகுந்திழு
த்து, மறுகிச்சுழலுமனக்குரங்குமாளவாளாவிருப்பேனோ, அறி
வுக்கறிவாய்ப்பூரணமாயகண்டானந்தமயமாகிப், பிறிவற்றிருக்
கும்பெருங்கருணைப்பெம்மானேயெம்பெருமானே. (கங)

உரையுணர்விறந்துதம்மையுணர்பவருணர்வினூடே
கரையிலாவின்பவெள்ளங்காட்டிடுமுகிலேமாறுப்
பரையெனுங்கிரணஞ்சூழ்ந்தபானுவேநின்னைப்பற்றித்
திரையிலார்போற்சித்தந்தெளிவனோசிறியனேனே. (கச)

கேவலசகலமின்றிக்கீழொடுமேலாயெங்கு
மேவியவருளின்கண்ணுய்மேவிடமேலாயின்பந்
தாவிட்டவின்பாதீதத்தணியிடையிருத்திவைத்த
தேவெனுமௌனிசெம்பொற்சேவடிசிந்தைசெய்வாம். (கரு)

நேற்றுளாரின்றுமாளாநின்றனரதனைக்கண்டும்
போற்றிலேனின்னையந்தோபோக்கினேன்வீணைகாலம்
ஆற்றிலேனகண்டானந்தவண்ணமேலயளவின்மாயைச்
சேற்றிலேயின்னம்வீழ்ந்துதிளைக்கவோசிறியனேனே. (கசு)

போதமென்பதேவிளக்கொவ்வுமவித்தைபொய்யிருளாந்
தீதிலாவிளக்கெடுத்திருட்டேவுஞ்சிக்கா
தாதலாலறிவாய்நின்றவிடத்தறியாமை
ஏதுமில்லையென்றெம்பிரான்சுருதியேயியம்பும். (கஎ)

சுருதியேசிவாகமங்களேயுங்களாற்சொல்லும்
ஒருதனிப்பொருளளவையீதென்னவாயுண்டோ
பொருதிரைக்கடனுண்மணலெண்ணினும்புகலக்
கருதவெட்டிடாநிறைபொருளளவையார்காண்பார். (கஅ)

மின்னைப்போன்றனவகிலமென்றறிந்துமெய்ப்பொருளாம்
உன்னைப்போன்றநற்பரம்பொருளில்லையென்றோர்ந்து
பொன்னைப்போன்றநின்போதங்கொண்டுன்பணிபொருந்தா
என்னைப்போன்றுளவேழையரையவிங்கெவரே. (கசு)

தாயுந்தந்தையுமெனக்குறவாவதுஞ்சாற்றின்
ஆயுநீயுநின்னருளுநின்னடியருமன்றோ
பேயனேன்றிருவடியிணைத்தாமரைபிடித்தேன்
நாயனேயெனையாளுடைமுக்கணுயகனே. (உ0)

காந்தமதை யெதிர்காணிற் கருந்தாது செல்லுமந்தக் காந்தத் தொன்று, தேய்ந்தவிடமெங்கேதானங்கேதான்சலிப்பறவுமிருக் குமாபோற், சாந்தபதப்பரம்பொருளேபற்றுபொருளிருக்குமத் தாற்சலிக்குஞ்சித்தம், வாய்ந்தபொருளில்லையெனிற்பேசாமைநி ன்றநிலைவாய்க்குமன்றே. (உக)

பொற்புறுங்கருத்தேயகமாயதிற்பொருந்தக்
கற்பின்மங்கையரென்விழிகதவுபோற்கவினச்

சொற்பனத்தினுஞ்சோர்வின் றியிருந்தநான்சோர்ந்து
நிற்பதற்கிந்தவினைவந்தவாறென்கொனிமலா. (உஉ)

வந்தவாறிந்தவினைவழியிதுவெனமதிக்கத்
தந்தவாறுண்டோவுள்ளுணர்விலையன் றித்தமியேன்
நொந்தவாறுகண்டிரங்கவுமிலைகற்றநூலார்
எந்தவாறினித்தற்பராவுய்குவேனேழை. (உங)

சொல்லாலும் பொருளாலு மளவையாலுந்தொடரவொண்ணாவருமெய்யைத்தொடர்ந்துநாடி, நல்லார்களவையகத்தேயிருக்கவைத்தாய்நன்னர்நெஞ்சந்தன்னலமுநணுகுவேனோ, இல்லாவியாயுலகோடியிரையின்றிட் டெண்ணரியயோகினுக்கு மிவனேயென்னல், கல்லாலின்கீழிருந்தசெக்கர்மேனிக்கற்பகமேபராபரமேகைலைவாழ்வே. (உச)

சாக்கிரமாநுதலினிலிந்திரியம்பத்துஞ்சத்தாதிவசனாதிவாயுபத்து, நீக்கமிலந்தக்கரணம்புருடனோடுநின்றதுமுப்பானைந்துநிலவுங்கண்டத், தாக்கியசொப்பனமதனில்வாயுபத்துமடுத்தனசத்தாதிவசனாதியாக, னோக்குகரணம்புருடனுடனேகூடநுவல்வரிருபத்தைந்தாநுண்ணியோரே. (உரு)

சுழுத்தியிதயந்தனிற்பிராணன்சித்தஞ் சொல்லரிய புருடனுடன்மூன்றதாகும், வழுத்தியநாபியிற்றுரியம்பிராணனோடுமன்னுபுருடனுங்கூடவயங்காநிற்கும், அழுத்திடுமூலந்தன்னிற்றுரியாதீதமதனிடையேபுருடனென்றியமருஞானம், பழுத்திடும்பக்குவராதிவரவத்தைபைந்திற்பாங்குபெறக்கருவிநிற்கும்பரிசுதானே. ()

இடத்தைக்காத்திட்டசுவாவெனப்புன்புலாலிறைச்சிச்
சடத்தைக்காத்திட்டநாயினேனுன்னன்பர்தயங்கு
மடத்தைக்காத்திட்டசேடத்தால்விசேடமாய்வாழ
விடத்தைக்காத்திட்டகண்டத்தோய்நின்னருள்வேண்டும். (உஎ)

வாதனைப்பழக்கத்தினுன்மனமந்தமனத்தால்
ஓதவந்திடுமுரையுரைப்படிதொழிலுளவாம்
ஏதமம்மனமாயையென்றிடிற்கண்டவெல்லாம்
ஆதரஞ்செயாப்பொய்யுதற்கையமுண்டாமோ. (உஅ)

ஐபவாதனைப்பழக்கமேமனநினைவதுதான்
வையமீதினிற்பரம்பரையாதினுமருவு
மெய்யினின்றெளிர்பெரியவர்சார்வுற்றுவிளங்கிப்
பொய்யதென்பதையொருவிமெய்யுணருதல்போதம். (உகூ)

நூலமிலான் குணங்குறியிலான் குறைவிலான்கொடிதாம்
புலமிலான்றனக்கென்னவோர்பற்றிலான்பொருந்தும்
இலமிலான்மைந்தர்மனைவியில்லானெவனவன்சஞ்
சலமிலான்முத்திதரும்பரசிவனெனத்தகுமே. (௩௦)

கடத்தைமண்ணெனவுடைந்தபோதோவிந்தக்கருமச்
சடத்தைப்பொய்யெனவிறந்தபோதோசொலத்தருமம்
விடத்தைநல்லமிர்தாவுண்டுபொற்பொதுவெளிக்கே
நடத்தைக்காட்டியெவ்வுயிரையுநடப்பிக்குநலத்தோய். (௩க)

நானெனவுநீயெனவுமிருதன்மைநாடாமனடுவேசும்மா, தானமருநிலையிதுவேசத்தியஞ்சத்தியமெனநீதமியனேற்கு, மோனகுருவாகியங்கைகாட்டினையே திரும்பவுநான் முளைத்துத்தோன்றி, மானதமார்க்கம்புரிந்திங்கலைந்தேனேபரந்தேனேவஞ்சனேனே.

தன்மயஞ்சுபாவஞ்சுத்தந்தண்ணருள்வடிவஞ்சாந்த
மின்மயமானவண்டவெளியுருவானபூர்த்தி
என்மயமெனக்குக்காட்டாதெனையபகரிக்கவந்த
சின்மயமகண்டாகாரந்தகூநிணுதிக்கமூர்த்தம். (௩௩)

சிற்றறும்பனசிற்றறிவாளனேதெளிந்தான்
மற்றரும்பெனமலரெனப்பேரறிவாகிக்

கற்றரும்பியகேள்வியான்மதித்திடக்கதிச்சீர்
முற்றரும்பியமௌனியாய்ப்பரத்திடைமுளைப்பான். (ஙச)

மயக்குசிந்தனைதெளிவெனவிருநெறிவகுப்பால்
நயக்குமொன்றன்பாலொன்றிலையெனனலவழக்கே
இயக்குமுற்றிடுமயக்கத்திற்றெளிவுறலினிதாம்
மயக்கமல்லதோர்தெளிவுடையவர்க்கெய்தல்பண்போ. (ஙரு)

அருள்வடிவேழுமூர்த்தமவைகள்சோபானமென்றே
கருதிசொல்லியவாற்றாலேதொழுந்தெய்வமெல்லாமொன்றே
மருவொணாக்கில்லைமுன்பின்வருநெறிக்கிவ்வழக்குத்
தெருளின்முன்னில்லையாமுன்னைச்சேர்ந்தியான்றெளிகின்றேனே.

எத்தனைபிறப்போ வெத்தனையிறப்போ வெளியனேற் கிதுவ ரையமைத்த, தத்தனையெல்லாமறிந்தநீயறிவையறிவிலியறிகிலே னந்தோ, சித்தமும்வாக்குந்தேகமுநினவேசென்மமுமினியெனு னாற்று, வைத்திடுங்கென்னைநின்னடிக்குடியாமறைமுடியிருந்த வான்பொருளே. (ஙஎ)

வான்பொருளாகியெற்குநீயிருப்பவந்தெனைக்கொடுத்துநீயா னா, தேன்பொருள்போலக்கிடக்கின்றேன்முன்னையிருவினைவாத னையன்றே, தேன்பொருளானவமிர்தமேநின்னைச்சிந்தையிற்பாவ னைசெய்ய, நான்பொருளானேனல்லனல்லரசேநானிறந்திருப்ப துநாட்டம். (ஙஅ)

நாட்டமூன்றுடையசெந்நிறமணியேநடுவுறுநாயகவிளக்கே, கோட்டமில்குணத்தோர்க்கெளியநிர்க்குணமேகோதிலா வமிர்த மேயன்னே, வாட்டமின்னெஞ்சங்கிண்ணமாச்சேர்த்துவாய்மடுத்த ருந்தினனெங்கே, பாட்டளிநறவமுண்டயர்ந்ததுபோற்பற்றயர்ந் திருப்பதென்றோ. (ஙகூ)

என்னுடையுயிரேயென்னுளத்தறிவேயென்னுடையன்பெனு நெறியாய், கன்னன்முக்கனிதேன்கண்டமிர்தென்னக்கலந்தெனை

மேவிடக்கருணை, மன்னியவுறவேயுன்னைநான்பிரியாவண்ணமெ ன்மனமெனுங்கருவி, தன்னதுவழியற்றென்னுழைக்கிடப்பத்த ண்ணருள்வரமதுவேண்டும். (ச0)

திருச்சிற்றம்பலம்.

# எனக்கெனச்செயல்.

எனக்கெனச்செயல்வேறிலையாவுமிங்கொருநின்
றனக்கெனத்தகுமுடல்பொருளாவியுந்தந்தேன்
மனத்தகத்துளவழுக்கெலாமாற்றியெம்பிரானீ
நினைத்ததெப்படியப்படியருளுதனீதம். (க)

உளவறிந்தெலாநின்செயலாமெனவுணர்ந்தோர்க்
களவிலானந்தமளித்தனையறிவிலாப்புன்மைக்
களவுநாயினேற்கிவ்வணமமைத்தனைகருத்தாக்
தளருந்தன்மையிங்காரொடுபுகலுவேனக்கோய். (உ)

என்னைத்தானின்னவண்ணமென்றறிகிலாவேழை
தன்னைத்தானறிந்திடவருள்புரிதியேற்றக்கோய்
பின்னைத்தானின்றனருள்பெற்றமாதவப்பெரியோர்
நின்னைத்தானிகராரெனவாழ்த்துவர்நெறியால். (ங)

ஏதமின்றித்தன்னடியிணைக்கன்புதானீட்டுங்
காதலன்பர்க்குக்கதிநிலைபீதெனக்காட்டும்
போதநித்தியபுண்ணியவெண்ணரும்புவன
நாததற்பரநாவெவ்வாறுய்குவேனவிளாய். (௪)

வேதமெத்தனையத்தனைசிரத்தினும்விளங்கும்
பாதநித்தியபரம்பரநிரந்தரபரம
நாததற்பரசிற்பரவடிவமாய்நடிக்கு
நீதநிர்க்குணநினையன்றியொன்றுநானினையேன். (ரு)

நெறிகடாம்பலபலவுமாயந்தந்நெறிக்காஞ்
செறியுந்தெய்வமும்பலபலவாகவுஞ்செறிந்தால்
அறியுந்தன்மையிங்காருனையறிவினாலறிந்தோர்
பிறியுந்தன்மையில்லாவகைகலக்கின்றபெரியோய். (சா)

பெரியவண்டங்களெத்தனையமைத்ததிற்பிறங்கும்
உரியபல்லுயிரெத்தனையமைத்ததற்குறுதி
வருவதெத்தனையமைத்தனையமைத்தருள்வளர்க்கும்
அரியதத்துவவெண்ணிறந்தவண்ணமேனமைத்தாய். (எ)

கணமேனுநின்காரணந்தன்னையேகருத்தில்
உணருமாதவர்க்கானந்தமுதவினையொன்றுங்
குணமிலாதபொய்வஞ்சனுக்கெந்தைநிற்குணமா
மணமுலாமலர்ப்பதந்தரின்யாருனைமறுப்பார். (அ)

கன்னன்முக்கனிகண்டுதேன்சருக்கரைகலந்த
தென்னமுத்தியிற்கலந்தவர்க்கின்பமாயிருக்கு
மின்னலைத்தநின்னற்பதந்துணையெனநம்பச்
சொன்னவர்க்கெனலாங்கைம்மாறில்லையென்சொல்வேன். (கூ)

தந்தைதாய்தமர்மகவெனுமவையெலாஞ்சகத்திற்
பந்தமாமென்றேயருமறைவாயினாற்பகர்ந்த
எந்தைநீயெனையின்னமவ்வல்லலிலிருத்திற்
சிந்தைதான்றெளிந்தெவ்வணமுய்வணஞ்செப்பாய். (கo)

துய்யன்றண்ணருள்வடிவினன்பொறுமையாற்றுலங்கு
மெய்யனென்றுனையையனேயடைந்தனன்மெத்த
நொய்யனுன்னியவறிவிலனென்றெனைநூறுக்கும்
பொய்யனென்றெனைப்புறம்விடினென்செய்வேன்புகலாய். (கக)

ஒன்றதாய்ப்பலவாயுயிர்த்திரட்கெலாமுறுதி
என்றதாயென்றுமுள்ளதாயெவற்றினுமிசைய

நின்றதாய்நிலைநின்றிடுமறிஞவென்னெஞ்சம்
மன்றதாயின்பவுருக்கொடுநடித்திடின்வாழ்வேன். (க௨)

துனியிருந்தருட்சகசமேபொருந்திடத்தமியேற்
கினியிரங்குதல்கடனிதுசமயமென்னிதயக்
கனிவுமப்படியாயினதாதலாற்கருணைப்
புனிதநீயறியாதவொன்றுள்ளதோபுகலாய். (க௩)

திருந்துசீரடித்தாமரைக்கன்புதான்செய்யப்
பொருந்துநாணல்லபுண்ணியஞ்செய்யுநாள்பொருந்தா
திருந்தநாள்வெகுதீவினையிழைத்தநாளென்றால்
அருந்தவாவுனைப்பொருந்துநாளெந்தநாளடிமை. (க௪)

பின்னுமுன்னுமாய்நடுவுமாயாவினும்பெரிய
தென்னுந்தன்மையாயெவ்வுயிர்த்திரளையுமியக்கி
மன்னுந்தண்ணருள்வடிவமேயுனக்கன்புவைத்துந்
துன்னுமின்னலேன்யானெனுமகந்தையேன்சொல்லாய். (க௫)

மின்னையன்னபொய்வாழ்க்கையேநிலையெனமெய்யாம்
உன்னைநான்மறந்தெவ்வணமுய்வணமுறையாய்
முன்னைவல்வினைவேரறமுடித்தென்றுமுடியாத்
தன்னைத்தன்னடியார்க்கருள்புரிந்திடுந்தக்கோய். (க௬)

அம்பராபரவெம்முயிர்த்துணைவவென்றிறைஞ்சும்
உம்பரிம்பர்க்குமுளக்கணேநடிக்கின்றவுன்றன்
அம்பொன்மாமலர்ப்பதத்தையேதுணையெனவடிமை
நம்பினேனினிப்புரப்பதெக்காலமோநவிலாய். (க௭)

பாடியாடிநின்றிரங்கிநின்பதமலர்முடிமேற்
சூடிவாழ்ந்தனரமலநின்னடியர்யான்றெழும்பன்
நாடியேயிந்தவுலகத்தைமெய்யெனநம்பித்
தேடினேன்வெறுந்தீமையேயென்னினிச்செய்வேன். (க௮)

களவுவஞ்சனைகாமமென்றிவையெலாங்காட்டும்
அளவுமாயையிக்காரெனக்கமைத்தனையையா
உளவிலேயெனக்குள்ளவாறுணர்த்தினுன்னடிமை
வளருமாமதிபோன்மகிழ்தளர்வின்றிவாழ்வேன். (க௯)

வானநாயகவானவர்நாயகவளங்கூர்
ஞானநாயகநான்மறைநாயகநலஞ்சேர்
மோனநாயகநின்னடிக்கன்பின்றிமுற்றுந்
ஊனுறுபகம்வாடவோவென்செய்வேன்செப்பாய். (உ0)

ஏதமற்றவர்க்கன்பமேபொழிகின்றவிறையே
பாதகக்கருங்கன்மனங்கோயிலாப்பரிந்து
ஆதகத்தனுயாதினுமிச்சைமேற்றோன்றும்
வாதனைக்கிடமாயினேனெவ்வணம்வாழ்வேன். (உக)

தெளிவொடைகையோவறிகிலானறிவிலான்சிறிதும்
அளியிலானிவன்றிருவருட்கயலெனவறிந்தோ
எளியனுக்கினையென்செய்வேனென்செய்வேனெல்லா
ஒளியுமாய்நிறைவெளியுமாயாவுமாமுரவோய். (உஉ)

கண்ணினுண்மணியென்னவேதொழுமன்பர்கருத்துள்
நண்ணுகின்றநின்னருளெனக்கெந்தநாணணுகும்
மண்ணும்விண்ணுமற்றுள்ளபூதமுமாருப்
பெண்ணுமாணுமாயல்லவாய்நிற்கின்றபெரியோய். (உ௩)

சகமெலாந்தனிபுரந்தனைதகவுடைத்தக்கோர்
அகமெலாநிறைந்தானந்தமாயினையளவின்
மகமெலாம்புரிந்தோரைவாழ்வித்தனைமாறு
இகமெலாமெனைப்பிறந்திடச்செய்ததேனெந்தாய். (உ௪)

ஏய்ந்தநல்லருள்பெற்றவர்க்கேவலாயெளியேன்
வாய்ந்தபேரன்புவளர்க்கவுங்கருணைநீவளர்ப்பாய்

ஆய்ந்தமாமறையெத்தனையத்தனையறிவாற்
றோய்ந்தபேர்கட்குந்தோன்றிலாத்தோன்றலாந்தூயோய். (உரு)

நூக்கநின்னருட்கேள்வியோ நெறிநின்றித்தமியேன்
மிக்கதெய்வமேநின்னின்பவெள்ளத்தில்வீழேன்
ஒக்கருய்தந்தைமகவெனும்பாசக்கட்டுடனே
துக்கவெள்ளத்திலாழ்கின்றேனென்செய்வான்றுணிந்தேன். ( )

பவம்புரிந்திடும்பாவியேற்கருணிலைபதியத்
தவஞ்செயும்படிதயவுசெய்தருள்வதேகருமம்
அவம்புரிந்திடார்க்கானந்தவமிர்தத்தையளிக்க
நவங்கொடத்துவத்திரையெறிகடலெனுநலத்தோய். (உஎ)

உற்றுணர்ந்தெலாநீயலதில்லையென்றனையே
பற்றுகின்றனரெந்தைநின்னடியர்யான்பாவி
முற்றுமாயமாஞ்சகத்தையேமெய்யெனமுதருன்
அற்றிருந்திடத்தொழில்செய்வான்றனைநிகரானேன். (உஅ)

திருச்சிற்றம்பலம்.

---

# மண்டலத்தின்.

---

மண்டலத்தின்மிசையொருவன்செய்தவித்தையகோவெனவும்வாரணாதி, அண்டமவையடுக்கடுக்காயந்தரத்தினிறுத்துமவதானம்போல, எண்டருநல்லிலாண்டகோடியைத்தன்னருள்வெளியிலிலகவைத்துக், கொண்டுநின்றவற்புதத்தையெவராலுநிச்சயிக்கக்கூடாவொன்றை. (க)

ஒன்றிரண்டாய்விவகரிக்கும்விவகாரங்கடந்தேழாம் யோகபூமி, நின்றுதெளிந்தவர்பேசாமௌனநியாயத்தைநிறைநிறைவைத்தன்னை, அன்றியொருபொருளிலதாவெப்பொருட்குந்தான்முத

லாயசலமாகி, என்றுமுள்ளவின்பத்தைத்தண்ணென்றசாந்தபத
வியற்கைதன்னை. (௨)

பதமூன்றுங்கடந்தவர்க்குமேலானஞானபதப்பரிசுகாட்டிச்
சதமாய்நிராலம்பசாக்ஷியதாயாரம்பத்தன்மையாகி [மாங்கி
விதப்பூரவுங் கடந்தவித்தை யெனுமிருளைக் கண்டெழுந்துவிமல
பதமுறுங்காறுத்தவானந்தசாகரத்தைமௌனவாழ்வை. (௩)

வாழ்வளித்துந்தந்தவின்ப மாகடலைநல்லமிர்தை மணியைப்
பொன்னைத், தாழ்வறவென்னுளத்திருந்தத்துவத்தையத்துவித
சாரந்தன்னைச், சூழ்பெரும்பேரொளியை யொளிபரந்தபரவெளி
யையில்பச்சுகத்தைமாறு, ஏழுலகுங்கலந்தின்றுய்நாளையாயென்
றுமாமியற்கைதன்னை. (௪)

தன்னையறிந்தவர்தம்மைத்தானாகச்செய்தருளுஞ்சமத்தைலோக
மின்னைநிகர்த்திடவழியாச்சொரூபானந்தச்சுடரைவேதமாதி
யென்னையறிவரிதென்னச்சமயகோடிகளிடையவிடையறுத [யை.
பொன்னைவிரித் திடுமுலகந் தும்பருமிம்பரும் பரவும்புனிதமெய்

பரவரியபரசிவமா யதுவெனலாய்நானெனலாய்ப் பாசசாலம்
விரவிநின்றவிசித்திரத்தையையபதத் தினிதிருந்தவிவேகந்தன்
னை, இரவுபகனினைப்புமறப்பெனுந்தொந்தமறியார்களிதயம்வே
தச், சிரமெனவாழ்பராபரத்தையானந்தநீங்காதசிதாகாசத்தை.

அத்துவிதவனுபவத்தையனந்தமறையின்னமின்ன மறியே
மென்று, நித்தியத்தைநிராமயத்தைநிர்க்குணத்தைத்தன்னருளா
லென்னைப்புக்குள்ளே, வைத்துவைத்துப்பார்ப்பவரைத் தானாகவெந்
நாளும்வளர்த்துக்காக்குஞ், சித்தினைமாதுவெளியைத் தன்மய
மாமானந்தத்தெய்வந்தன்னை. (எ)

தன்னிலேதானாகநினைந்துகனிந்தவிழ்ந்துசுக சமாதியாகப்,
பொன்னிலேபணிபோலுமாயைதருமனமேயுன்புரைகடர்ந்தாய்,
என்னிதோயான்பிழைப்பே னெனக்கினியா ருன்போல்வா ரில்லை

யில்லை, உன்னிலோ திருவருளுக்கொப்பாவா யென்னுயிர்க்கோரு றவுமாவாய். (அ)

உறவுடலையெடுத்தவரிற்பிரமாதி யேனுமுனையொழிந்துதன் ளற், கறவுமரிதரிதன்றோ விகபரமுமுன்னையன்றி யாவதுண் டோ, வறிதிலுன்னையசத்தென்னல் வழக்கன்றுசத்தெனவும் வா ழ்த்துவேனென், சிறுமைகெடப்பெருமையினின் சென்மமீதயத் தினினீசெல்லல்வேண்டும். (௯)

வேண்டியநாளென்றேனும்பழகியநீயெனைப்பிரிந்தவிசாரத் தாலே, மாண்டுகிடக்கின்ற விந்தவெல்லையையும் பூரணமாவனைக் கஞ்செய்வேன், ஆண்டகுருமௌனிதன்னால் யானெனதற்றவனை ருணுவேன்பூவிற், பாண்டகவென்சித்திமுத்தியெனக்குண்டா முன்னாலென்கவலைதீர்வேன். (௧௦)

தீராதவென்சனனவழக்கெல்லாந்தீருமிந்தச்சனனத்தோடே
ஆரேனுமரிவறியசீவன்முத்தியுண்டாகுமையவையோ
காரேனுங்கற்பகப்பூங்காவேனுமுனக்குவமைகாட்டப்போமோ
பாராதியாகவெழுமண்டலத்திலின்மகிமைபகரலாமோ. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

# பாயப்புலி.

பாயப்புலிமுனமான்கன்றைக்காட்டும்படியகில
மாயைப்பெரும்படைக்கேயிலக்காவெனைவைத்தனையோ
நீயெப்படிவருத்தாலுநன்றேநின்பெருங்கருணை
தாயொத்தடியர்க்கருள்சச்சிதானந்தத்தற்பரமே. (க)

தற்பரமாஞ்சிற்பரமாகமன்றந்தனினடித்து
நிற்பரம்போருகன்பால்பணிநீதரென்னெஞ்சகமாங்

கற்பரந்தாங்குக்கரைந்திடவானொத்தகாட்சிநல்கும்
பொற்பரமாயென்வினைக்கருந்தாதைப்பொடிசெய்ததே. (௨)

செய்யுந்தவஞ்சற்றுமில்லாதநானுன்திருவடிக்கே
கொய்யும்புதுமலரிட்டுமெய்யன்பர்குழாத்துடனே
கையுஞ்சிரமிசைக்கூப்பிநின்றாடிக்கசிந்துருகி
உய்யும்படிக்கருள்செய்வதென்றோபுலியூரத்தனே. (௩)

அத்தனைச்சிற்றம்பலவனையென்னுயிராகிநின்ற
சித்தனைச்சுத்தவெளியானவனைச்சுகவடிவாம்
முத்தனைச்சித்துநிராதாரமாகியநின்மலனை
எத்தனைநாள்செல்லுமோமாமணமேகண்டிறைஞ்சுதற்கே. (௪)

கண்டாருளத்தொளிர்காலூன்றிப்பெய்யுங்கருணைமுகில்
அண்டார்புரத்துக்குமன்பர்வினைக்குமசனிதன்னைக்
கொண்டாடினோர்முனங்கூத்தாடுமத்தன்றன்கோலமெல்லாம்
விண்டாலம்மாவொன்றுங்காணாதுவெட்டவெறுவெளியே. (௫)

வெளியானநீயென்மனவெளியூடுவிரவினையால்
ஒளியாருங்கண்ணுமிரவியும்போனின்றுலாவுவன்காண்
அளியாருங்கொன்றைச்சடையாடவம்புலியாடக்கங்கைத்
துளியாடமன்றுணடமாடுமுக்கட்சுடர்க்கொழுந்தே. (௬)

கொழுந்தாதுறைமலர்க்கோதையர்மோகக்குரைகடலின்
அழுந்தாதவண்ணநின்பாதப்புணைதந்தருள்வதென்றோ
எழுந்தாதரவுசெயெம்பெருமானென்றிறைஞ்சிவிண்ணோர்
தொழுந்தாதைதேய்வெண்பொடிபூத்தமேனிச்சுகப்பொருளே. (௭)

சுகமாயுஞானத்திருமேனியாநல்லதொண்டர்கள்
அகமேபொற்கோயிலெனமகிழ்ந்தேமன்றுளாடியகற்
பகமேயுன்பொன்னடிநீழல்கண்டாலன்றிப்பாவிக்கிந்தச்
செகமாயையானவருங்கோடைநீங்குந்திறமிலையே. (௮)

நீங்காதுயிருக்குயிராகிநின்றநின்னையறிந்தே
தூங்காமற்றூங்கினல்லாதேயெனக்குச்சுகமுமுண்டோ
ஓங்காரமாமைந்தெழுத்தாற்புவனத்தையுண்டுபண்ணிப்
பாங்கானடத்தும்பொருளேயகண்டபரசிவமே. (கூ)

சிவமாதிநான்முகக்கோர்வந்தமாமறைசெப்புகின்ற
நவமாயிலங்கியவொன்றேயிரண்டற்றநன்மைபெறு
தவமேதருமைம்புலப்பொறிக்கேயென்னறிவுபொல்லாப்
பவமேவிளக்கவென்றேவெளிமானெனப்பாய்ந்ததுவே. (க0)

ஆறொத்திலங்குசமயங்களாறுக்குமாழ்கடலாய்
வீறிப்பரந்தபரமானவானந்தவெள்ளமொன்று
தேறித்தெளிந்துநிலைபெற்றமாதவர்சித்தத்திலே
ஊறிப்பரந்தண்டகோடியெல்லாநின்றுலாவியதே. (கக)

நடக்கினுமோடினுநிற்கினும்வேறொருநாட்டமின்றிக்
கிடக்கினுஞ்செவ்விதிருக்கினுநல்லருட்கேள்வியிலே
தொடக்குமென்னெஞ்சமனமற்றபூரணத்தொட்டிக்குளே
முடக்குவன்யான்பரமானந்தநித்திரைமூடிடுமே. (கஉ)

எண்ணுததெண்ணியநெஞ்சேதுயரொழியென்னிரண்டு
கண்ணேயுறங்குறங்கென்னுணைமுக்கட்கருணைப்பிரான்
றண்ணார்கருணைமவுனத்திறன்முத்திசாதிக்கலாம்
நண்ணுததொன்றில்லையெல்லாநலமுநமக்குளவே. (கங)

நானென்றொருமுதலுண்டென்றநான்றலைநாணவென்னுட்
டானென்றொருமுதல்பூரணமாகத்தலைப்பட்டொப்பில்
ஆனந்தந்தந்தென்னறிவையெல்லாமுண்டவசநல்கி
மோனந்தனைவிளைத்தாலினியாதுமொழிகுவதே. (கச)

தானந்தவஞ்சற்றுமில்லாதநானுண்மைதானறிந்து
மோனப்பொருளெனக்கண்டிடச்சற்குருமோனனுமாய்த்

நானென்றனக்கிங்கிரங்கிலையேயினிச்சிந்தைக்கென்றும்
ஆனந்தந்தானல்லவோபரமேசச்சிதானந்தமே. (கரு)

எனக்கோர்சுதந்தரமில்லையப்பாவெனக்கெய்ப்பில்வைப்பாய்
மனக்கோதகற்றும்பரம்பொருளேயென்னைவாழ்வித்திட
னினக்கேபரநின்னைநீங்காதபூரணநீள்கருணை
தனக்கேபரமினிச்சும்மாவிருக்கத்தருமென்றுமே. (கசு)

இடம்பெறுவீடும்மின்னார்சேய்சகமுமிருநிதியும்
உடம்பைவிட்டாருயிர்போம்போதுகூடியுடன்வருமோ
மடம்பெறுமாயைமனமேயினியிங்குவாமவுனி
யிடம்பெறவைத்தமவுனஞ்சகாயந்தெரிந்துகொள்ளே. (கஎ)

நாற்றச்சடலத்தையொன்பதுவாசனடைமனையைச்
சோற்றுப்பசையினைமும்மலபாண்டத்தொடக்கறையை
ஆற்றுப்பெருக்கன்னகன்மப்பெருக்கையடர்கிருமிச்
சேற்றைத்துணையென்றநாய்க்குமுண்டோகதிசேர்வதுவே. (கஅ)

பொய்யாருலகநிலைபல்லெகானற்புனலெனவே
மெய்யாவறிந்தென்னவென்னாலிதனைவிடப்படுமோ
கையான்மவுனந்தெரித்தேகல்லானிழற்கண்ணிருந்த
ஐயாவப்பாவென்னரசேமுக்கண்ணுடையாரமுதே. (ககூ)

ஆராவமுதெனமோனம்வகித்துக்கல்லானிழற்கீழ்ப்
பேராதுநால்வருடன்வாழ்முக்கண்ணுடைப்பேரரசே
சீராயுருகவுள்ளன்புதந்தேசுகநிட்டையைநீ
தாராவிடினென்பெருமூச்சுத்தானத்தனஞ்செயனே. (உ௦)

வாயுண்டுவாழ்த்தமவுனஞ்செய்போதுமவுனவருட்
டாயுண்டுசேயென்னவென்னைப்புரக்கச்சதானந்தமா
நீயுண்டுநின்னைச்சரண்புகநாணுண்டென்னெஞ்சமையா
தீயுண்டிருந்தமெழுகலவோகதிசேர்வதற்கே. (உக)

ஞற்கண்டதன்றமவுபதேசியளிக்கையினிப்
பாற்கண்டுகொண்டனன்மேலேயமிர்தம்பருகுவனே. (உஅ)

சொல்லாற்றொடர்பொருளாற்றொடராப்பரஞ்சோதிநின்னை
வல்லாளர்கண்டவழிகண்டிலேன்சகமார்க்கத்திலுஞ்
செல்லாதென்சிந்தைநடுவேகிடந்துதிகைத்துவிம்மி
அல்லானதும்பகலானதும்வாய்விட்டரற்றுவனே. (உகூ)

அறியாதவென்னையறிவாய்நீயென்றகப்புறமும்
பிரியாதறிவித்தபேரறிவாஞ்சுத்தப்பேரொளியோ
குறியாதவானந்தக்கோவோவமுதருள்குண்டலியோ
நெறியென்படிக்குயர்கண்டிகல்லாணிமுற்சேர்ந்ததுவே. (௩0)

எல்லாமுதவுமுனையொன்றிர்பாவனையேனுஞ்செய்து
புல்லாயினுமொருபச்சிலையாயினும்போட்டிறைஞ்சி
நில்லேனல்யோகநெறியுஞ்செயேனருணீதியொன்றுக்
கல்லேனெவ்வாறுபரமேபரகதிகாண்பதுவே. (௩க)

ஒன்றுந்தெரிந்திடவில்லையென்றுள்ளத்தொருவவெனக்
கென்றுந்தெரிந்தவிவையவைதேளிரவும்பகலுங்
குன்றுங்குழியம்வனமுமலையுஞ்சரைகடலு
மன்றுமனையுமனமாதித்துவமாயையுமே. (௩உ)

பழுதான்பொய்யவர்மோகவிகாரப்பரவையிடை
விழுகின்றபாவிக்குந்தன்றுட்புணையைவியந்தளித்தான்
எழுகின்றவன்பருளாங்களிகூரத்துலங்குமன்றுள்
எழுகின்றவானந்தக்கூத்தனென்கண்மணியென்னப்பனே. (௩௩)

அழுக்கார்ந்தநெஞ்சுடையேனுக்கையாநின்னருள்வழங்கின்
இழுக்காகுமென்றெண்ணியோவிரங்காதவியல்புகண்டாய்
முழுக்காதலாகிவிழுநீர்பெருக்கியமுத்தரெனுங்
குழுக்காணநின்றநடமாடுந்தில்லைக்கொழுஞ்சுடரே. (௩ச)

காட்டியவன்றக்கரணமுமாயையிக்காயமென்று
சூட்டியகோலமுநாளவியங்கத்துறையிதனுள்
நாட்டியநான்றனக்கென்றோநறிவற்றநாளிவற்றைக்
கூட்டிநின்றாட்டினையேபராமேநல்லகூத்திதுவே. (௪௮)

பொல்லாதமாமர்க்கடமனமேயெனைப்போலடித்த
எல்லாவற்றையும்பற்றிக்கொண்டனையேயென்னை நின்மயமா
நில்லாயருள்வெளிநோவிற்பேணருணிட்டைபொரு
சொல்லாற்பதித்துபரிபூரணானந்தந்தோய்குவனே. (௪௯)

வாராய்நெஞ்சேயுன்றன்றுன்மார்க்கம்யாவையும்வைத்துக்க[illegible]
காராயடிக்கடிசுற்றுகின்றாயுன்னவலமதிக்
கோராயிரம்புத்திசொன்னாலுமோர்கிலேபோகெடுவாய்
பாராயுனைக்கொல்லுவேன்வெல்லுவேனருட்பாங்குகொண்டே. ()

மாதத்திலேயொருதிங்களுண்டாகிமடிவதைநின்
போதத்திலேசற்றும்வைத்திலையேவெறும்புன்மைநெஞ்சே
வேதத்திலேதர்க்கவாதத்திலேவிளங்காதுவிந்து
நாதத்திலேயடங்காதந்தவான்பொருணாடிக்கொள்ளே. (௫௧)

எங்கும்வியாபித்துணர்வாயுனக்கென்னிதயத்துள்ளே
தங்குந்துயரந்தெரிந்தவண்ணந்தடைசெய்ததார்
அங்கங்குழைந்துள்ளுருகுமன்பாளர்க்கணைகடந்து
பொங்குங்கருணைக்கடலேசம்பூரணபோதத்தனே. (௫௨)

வையகமாதர்சுகத்தையும்பொன்னையுமாயைமல
மெய்யையுமெய்யென்றுநின்னடியார்தம்விவேகத்தையும்
ஐயமில்வீட்டையுமெய்ந்நூலையும்பொய்யதாகவெண்ணும்
பொய்யர்தங்கட்பைவிடுவதென்றோபரிபூரணமே. (௫௩)

அளியுங்கனியொத்தருவினையாஞைந்தயர்வுறுவேன்
தெளியும்படிக்கிப்பரியாககாலமுஞ்சித்திக்குமோ

# உடல்பொய்யுறவு.

நேரிசைவெண்பா.

உடல்பொய் யுறவா யினுண்மையுற வாக்க
கடவாரார் தண்ணருளே கண்டாய்—திடமுடனே
உற்றுப்பார் மோனமொன்று சொல்லே யுண்மைநன்றாப்
பற்றிப்பார் மற்றவெல்லாம் பாழ். (க)

பாராதி பூதமெல்லாம் பார்க்குங்கா லப்பரத்தின்
சீராக நிற்குந் திறங்கண்டாய்—நேராக
நிற்குந் திருவருளி னெஞ்சேயா னிற்பதல்லாற்
கிற்குநெறி யாதினிமேற் காண். (உ)

மெய்யான தன்மை விளங்கினல் யார்க்கேனும்
பொய்யான தன்மை பொருந்துமோ—ஐயாவே
மன்னு நிராசையின்னம் வந்ததல்ல வுன்னடிமை
என்னுநிலை யெய்துமா றென். (ங)

அறியாமை மேலிட் டறிவின்றி நிற்குங்
குறிபேற் கறிவென்ற கோலம்—வறிதேயாம்
நீபுணர்த்த நானுணரு நேசத்தா லோவறிவென்
றேயெனக்கோர் நாமமிட்ட தே. (ச)

ஏதுக்குச் சும்மா விருமனமே யென்றுனக்குப்
போதித்த வுண்மையெங்கே போகவிட்டாய்—வாதுக்கு
வந்தெதிர்த்த மல்லரைப்போல் வாதாடி னையேயுன்
புந்தியென்ன போதமென்ன போ. (ரு)

சகமனைத்தும் பொய்யெனவே தானுணர்ந்தாற் றுக்க
சுகமனைத்தும் பொய்யன்றோ சோரா—திகபரத்தும்
விட்டுப் பிரியாத மேலான வத்துவிதக்
கட்டுக்கு ளாவதென்றோ காண். (சா)

கற்கண்டோ தேனோ கனிரசமோ பாலோவென்
சொற்கண்டா தேதெனநான் சொல்லுவேன்—விற்கண்ட
வானமதி காண மவுனிமவு னத்தளித்த
தானமதி லூறுமமிர் தம். (௭)

கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெளிவால்
வாட்டமுறு வற்பவரோ மாறுமோ—நாட்டமுற்று
மெய்யான நிட்டையினை மேவினர்கட் கன்றோதான்
பொய்யாம் பிறப்பிறப்புப் போம். (அ)

மாயா சகத்தை மதியாதார் மண்முதலா
மேயான தத்துவத்தி லெய்துவரோ—நேயானு
பூதியிலே நிற்கப் பொருந்துவர்க ளன்னவர்தம்
நீதியையே யோர்மனமே நீ. (௯)

ஜகமுழுதும் பொய்யெனவே தேர்ந்துணர்ந்தா லாங்கே
நிகரா வத்துவருள் மெய்யே—அகிலெகிழுப்
பாரீ ரொருசொற் படியே யனுபவத்தைச்
சேரீ ரதுவே திறம். (க0)

ஆரணங்க ளாகமங்கள் யாவுமே யானந்த
பூரணமே யுண்மைப் பொருளென்னுங்—காரணத்தை
ஓராயோ வுள்ளுள்ளே பற்றுணர்ந்தவ் வுண்மையினைப்
பாராயோ நெஞ்சே பகர். (கக)

நேராயம் மௌனநிலை நில்லாமல் வாய்பேசி
ஆரா யலைந்திர்நீ ராகெடுவீர்—தேரீர்
திரையுந் திரையுநதிச் சென்னியனை நாவாற்
கரையுங் கரையுமனக் கல். (கஉ)

அற்ப மனமே யகிலவாழ் வத்தனையுஞ்
சொற்பனங்கண் டாயுண்மை சொன்னேனன்—கற்பனையொன்

தில்லா விடத்தே யெனைச்சும்மா வைத்திருக்கக்
கல்லாய்நீ தானோர் கவி. (கந)

ஏதுந் திருவருளி னிச்சையா மென்றென்றெப்
போதும் பொருந்தும் புனிதர்பாற்—றீதுநெறி
செல்லுமோ செல்லாதே செல்லுமிட மின்பமலாற்
சொல்லுமோ வேதத் தொனி. (கச)

கல்லேறுஞ் சில்லேறுங் கட்டியே றும்போலச்
சொல்லேறப் பாழ்த்த துளைச்செவிகொண்—டல்லேறு
நெஞ்சனென நிற்கவைத்தாய் நீதியோ தற்பரமே
வஞ்சனல்லே னீயே மதி. (கரு)

அப்பொருளு மான்மாவு மாரணநூல் சொன்னபடி
தப்பிலாச் சித்தொன்றுஞ் சாதியினால்—எப்படியுந்
தேரிற் றுவிதஞ் சிவாகமமே சொல்லுநிட்டை
ஆருமிடத் தத்துவித மாம். (கசு)

வேத முதலாய் விளங்குஞ் சிவஞ்படிவாம்
போத நிலையிற் பொருந்தாமல்—ஏதமிகு
மோகாதி யல்லலிலே மூழ்கினையே நெஞ்சேயித்
தேகாதி மெய்யோ தெளி. (கஎ)

நோக்கற் கரிதான நுண்ணியவான் மோனநிலை
தாக்கற் குபாயஞ் சமைத்தபிரான்—காக்குமுயிர்
அத்தனைக்கு நானடிமை யாதலினால் யானெனதென்
றித்தனைக்கும் பேசவிட மில். (கஅ)

ஒன்றுமற் நில்லென் றுணர்த்தியநம் மோனகுரு
தன்றுணைத்தா ளீடூழி தாம்வாழ்க—என்றென்றே
திக்கனைத்துங் கைகுவிக்குஞ் சின்மயராந் தன்மையர்க்கே
கைக்குவரு மின்பக் கனி. (கக)

மனத்தாலும் வாக்காலு மன்னவொண்ணு மோன
இனத்தாரே நல்ல வினத்தார்—சனத்தபுகழ்
கொண்டவரு மன்னவரே கூறரிய முத்திநெறி
கண்டவரு மன்னவரே காண். (உ0)

கன்னெறியே மோனக் கரும்பே கவலையறப்
பன்னெறிக்கு முள்ளொளியாம் பான்மையினை—நண்ணிடவுன்
சித்த மிரங்கிலதென் சித்தந் தெளியாவே
நித்தனைக்கு மாதரவு மில். (உக)

அறியாமை சாரி னதுவா யறிவா
நெறியான போத துவாய் நிற்குங்—குறியாற்
சதசத் தருளுணர்த்தத் தானுணரா நின்ற
விதமுற் றறிவெனும்பேர் மெய். (உஉ)

குருலிங்க சங்கமமாக் கொண்ட திருமேனி
ஒருமொன்று மேனிநம்பாற் காட்டா—தருளென்று
கண்டவர்க்கே யானந்தங் கண்டுகொள லாமலது
கொண்டவர்க்கிங் கென்ன கிடைக்கும். (உ௩)

புலியி னதளுடையான் பூதப் படையான்
பலிவிரந்து மெல்லாம் பரிப்பான்—மலிபுனல்சேர்
பொன்முடியான் முக்கட் புனிதன் சரண்புகுந்தோர்க்
கென்முடியா தேதுமுள தே. (உச)

சொல்லுக் கடங்காச் சுகப்பொருளை நாமெனவே
அல்லும் பகலு மரற்றுவதென்—நல்லசிவ
ஞானமயம் பெற்றோர்க ளுமில்லை யென்பரந்தோ
மோனமய மான முறை. (உரு)

ஐயா வருணைகிரி யப்பா வுனைப்போல
மெய்யாக வோர்சொல் விளம்பினர்யார்—வையகத்தோர்

சாற்றரிதென் றேசற்றோர் தன்னனையாய் முக்கண்ணெந்தை
நாற்றிசைக்குங் கைகாட்டினான். (௨௬)

காதற்றுப் போனமுறி கட்டிவைத்தா லாவதுண்டோ
தீதற்ற காயமுமச் செய்கையே—போதமாய்
நிற்பரல்லா லிச்சகத்தி னேரார்க ணேரிடினுந்
தற்பரமாக் கண்டிருப்பார் தாம். (௨௭)

வெள்ளங் குலாவுசடை வெள்ளக் கருணையினான்
கள்ளங் குலாவுவஞ்சக் கள்ளனேன்—உள்ளத்தில்
இல்லனென்றா லன்னவன்றா னெங்கும் வியாபகத்தான்
அல்லனென்றுஞ் சொல்லவழக் காம். (௨௮)

தத்துவப்பே யோடே தலையடித்துக் கொள்ளாமல்
வைத்த வருண்மோன வள்ளலையே—நித்தமன்பு
பூணக் கருதுநெஞ்சு போற்றக் கரமெழும்புங்
காணத் துடிக்குமிரு கண். (௨௯)

தொல்லை வினைக்கீடாய்ச் சுழல்கின்ற நானொருவன்
எல்லையிலா நின்கருணை யெய்துவனோ—வல்லவனா
மோன குருவே முழுதினையுந் தானுணர்ந்த
ஞான குருவே நவில். (௩௦)

மூன்றுகண்ணா முத்தொழிலா மும்முதலா மூவுலகுந்
தோன்றக் கருணைபொழி தோன்றலே—ஈன்றவனை
தன்னைப்போ லன்பு தழைத்தோ யொருதெய்வம்
உன்னைப்போ லுண்டோ வுரை. (௩௧)

நேசிக்குஞ் சிந்தை நினைவுக்கு ளுன்னைவைத்துப்
பூசிக்குந் தானிறைந்து பூரணமா—யோசித்து
நின்றதல்லான் மோனா நிருவிகற்ப நிட்டைநிலை
என்றுவரு மோவறியே னே. (௩௨)

அறிவி லறியாமை யற்றறிவாய் நின்று
பிறிவறவா னந்தமயம் பெற்றுக்—குறியவிழ்ந்தால்
அன்றைக் குடல்வேண்டே னையாவிவ் வாக்கையையே
என்றைக்கும் வேண்டுவனே யான். (௩௩)

உடலைப் பழித்திங் குணவுங் கொடாமல்
விடவிடவே நாடுவரோ மெய்யைப்—படபடென
வேண்டுமே வீந்தவுடன் மெய்யுணராப் பொய்யனான்
ஆண்டநீ தானே யறி. (௩௪)

அறியாயோ வென்னைநீ யாண்டநீ சுத்த
வெறியாய் மயங்கவுமேன் விட்டாய்—நெறிமயங்கிக்
குன்றுஞ் செடியுங் குறுகுமோ வையாவே
கன்றுகெட்டாற் றாயருகே காண். (௩௫)

ஏதுக் குடற்சுமைகொண் டேனிருந்தே னையனே
ஆதிக்க மோன வருட்டாயே—சோதியா
மன்ன நிருவிகற்ப வானந்த நிட்டையிலே
பின்னமற நில்லாத பின். (௩௬)

பின்னு முடற்சுமையாப் பேசும் வழக்கதனால்
என்னபல னுற்றிருந் தோமே—அன்னதனால்
ஆனந்தந் தானேதா னாகுமெம் மையனே
ஏனிந்தத் துன்ப மினி. (௩௭)

துன்பக் கடலிற் றுளைந்ததெல்லாந் தீர்ந்ததே
இன்பக் கடலி லிருமென்ன—அன்பிற்
கரைந்து கரைந்துருகிக் கண்ணருவி காட்ட
விரைந்துவரு மானந்த மே. (௩௮)

கரைந்து கரைந்துருகிக் கண்ணீரா றாக
விரைந்தே நிருவிகற்ப மெய்த—நிரந்தரமும்

நின்னையே சிந்திக்கக் கொடுத்தாய் மோனநான்
என்னைமுழு துங்கொடுத்தே னே. (௩௯)

அல்லும் பகலும்பே ரன்புடனே தானிருந்தாற்
கல்லு முருகாதோ கன்னெஞ்சே—பொல்லாத
தப்புவழி பேசினைந்தாய் சந்ததமு நீயிறந்த
வெப்பிலே யானந்த மே. (௪௦)

கொடுத்தேனே யென்னைக் கொடுத்தவுட னின்ப
மடுத்தேனே நீடூழி வாழ்ந்தேனே—அடுத்தேனே
பெற்றேனே பெற்றுப் பிழைத்தேனே சன்மவல்லல்
இற்றேனே யேழையடி யேன். (௪௧)

பெற்றோம் பிறவாமை பேசாமை யாயிருக்கக்
கற்றோ மெனவுரைக்கக் காரியமேன்—சற்றேனும்
நீக்கற்ற வின்ப நிலைபொருந்தி யேசற்று
வாக்கற்றுற் பேசுமோ வாய். (௪௨)

காலன் றனையுதைத்தான் காமன் றனையெரித்தான்
பாலன் பசிக்கிரங்கிப் பாற்கடலை—ஞாலமெச்சப்
பின்னே நடக்கவிட்டான் பேரருளை நாடாதார்க்
கென்னே நடக்கை யினி. (௪௩)

விண்ணுருவி லென்மேல் விளங்குவபோ லேயிரண்டு
கண்ணுருவி வெள்ளமொடு கைகூப்பித்—தண்ணமிர்த
வெள்ளமே யானந்த வெற்பே யெனத்தொழுவோர்
உள்ளமே ஞான வொளி. (௪௪)

பிள்ளைமதிச் செஞ்சடையான் பேசாப் பெருமையினான்
கள்ளவிழும் பூங்கொன்றைக் கண்ணியான்—உள்ளபடி
கல்லாலின் கீழிருந்து கற்பித்தா னோர்வசனம்
எல்லாரு மீடேற வே. (௪௫)

புலனைந்துந் தானே பொரமயங்கிச் சிந்தை
அலமந் துழலு மடிமை—நலமிருந்த
சித்தான மோன சிவனே நின்சேவடிக்கே
பித்தானு லுண்டோ பிறப்பு. (சசு)

நிறைகுடந்தா னீர்கொளுமோ நிச்சயமா மோன
முறையுணர்ந்தார் யாதை முயல்வார்—பிறையணிந்த
மிக்ககயி லாயமலை வித்தகனே வேதியனே
செக்கரணி மேனியனே செப்பு. (சஎ)

துங்கமழு மானுடையாய் சூலப் படையுடையாய்
திங்களணி செஞ்சடையாய் சேவுடையாய்—மங்கையொரு
பாலுடையாய் செங்கட் பணியாயென் சென்னியின்மேற்
காலுடையாய் நீயே கதி. (சஅ)

இனிய கருணைமுகி லெம்பிரான் முக்கட்
கனியமிர்த வாரியின்பக் கட்டி—தனிமுதல்வ
னித்தன் பரம னிமலனிறை வாய்நிறைந்த
சுத்தனமக் கென்றுந் துணை. (சகூ)

நீதியாய்க் கல்லாலி னீழலின்கீ ழேயிருந்து
போதியா வுண்மையெல்லாம் போதித்தான்—ஏதில்
சனகா தியாய் தவத்தோர்க்கு ஞான
தினகரனு மோன சிவன். (ருo)

தேகச் செயறுனுஞ் சிந்தையுட னேகுழையில்
யோகநிலை ஞானிகளுக் கொப்புவதோ—மோகநிலை
அல்லலிலே வாழ்வாரோ வப்பனே நீயற்ற
எல்லையிலே சும்மா விரு. (ருக)

சும்மா விருக்கச் சுகமுதய மாகுமே
இம்மாயா யோகமினி யேனடா—தம்மறிவின்

சுட்டாலே யாகுமோ சொல்லவேண் டாங்கன்ம
நிட்டா சிறுபிள்ளாய் நீ. (ருஉ)

நீயற்ற வந்நிலையே நிட்டையதி னீயிலையோ
வாயற் றவனே மயங்காதே—போயற்
றிருந்தாலு நீபோகா யென்றுமுள்ளாய் சும்மா
வருந்தாதே யின்பமுண்டு வா. (ருங)

வாவாவென் றின்பம் வரவழைக்கும் கண்ணீரோ
டாவாவென் றேயழுத வப்பனே—நீவாடா
எல்லா நமக்கெனவே யீந்தனையே யீந்தபடி
நில்லா யதுவே நிலை. (ருச)

நில்லாப் பொருளை நினையாதே நின்னையுள்ளோர்
சொல்லாப் பொருட்டிரளைச் சொல்லாதே—கல்லாத
சிந்தை குழைந்துசுகஞ் சேரக் குருவருளால்
வந்தவழி நல்ல வழி. (ருரு)

வழியிதென்று மல்லா வழியிதென்றுஞ் சொல்லிற்
பழிபழியா நல்லருளாற் பார்த்தோர்—மொழியுனக்கே
ஏற்றிருக்கச் சொன்னவன்றே யெங்கும் பெருவெளியாம்
பார்த்தவிட மெல்லாநீ பார். (ருசு)

பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல்
ஆருந் துறக்கை யரிதரிது—நேரே
மனத்துறவு மப்படியே மாணு விவற்றில்
உனக்கிசைந்த வாறென்றே யோர். (ருஎ)

ஓராம லேயொருகா லுன்னுமே லுள்ளொளியைப்
பாராம லுள்ளபடி பார்த்திருந்தால்—வாராதோ
பத்துத் திசையும் பரந்தெழுந்தா னந்தவெள்ளந்
தத்திக் கரைபுரண்டு தான். (ருஅ)

நானான தன்மைவந்து தாக்கினா லவ்விடத்தே
வானாதி மாயை வழங்காதோ—ஞானாகேள்
உன்னுள்ளே தோன்றா வுறவாகி நின்றதென
என்னுள்ளே யென்று மிரு. (௫௯)

என்னையுன்னை யின்னதிது வென்னாம னிற்குநிலை
தன்னையரு ளென்ற தருணத்தில்—அன்னைபெற்ற
பிள்ளைக்குஞ் சொல்லாத பெற்றிகண்டா யையனே
உள்ளத்தி னுள்ளே யுணர். (௬௦)

சொன்னவர்தா நிட்டை தொகுத்திரா நிட்டையிலே
மன்னினவர் போதியார் மாமௌனன்---றன்னுள்
யிருப்பாகக் கைகாட்டி மிக்கவட நீழல்
இருப்பா னிருவிகற்பத் தே. (௬௧)

இந்த நிருவிகற்பத் தெந்தை யிருக்கநிட்டை
சிந்தைநீ தேறாய் செகமனைத்தும்—வந்ததொடர்ப்
பாடுகெட வன்றோவோர் பாத்திரத்துக் காடலல்லால்
ஆடுவதே னாட்டு மவன். (௬௨)

அவனே பரமு மவனே குருவும்
அவனே யகில மனைத்தும்—அவனேதா
னானவரே சொன்னா லவரே குருவெனக்கு
நானவனாய் நிற்பதெந்த நாள். (௬௩)

ஞானங்கள் போகாம னாடோறு நந்தமையே
ஆளவந்தார் தாளின் க் கீழாட்புகுந்தாய்—மீளவுன்னைக்
கட்டாம னிற்குங் கருத்தறிந்தா னென்சேயுன்
ஆட்டாளா னையமில்லை யால். (௬௪)

யானென்றா னெனலறவே யின்பநிட்டை யென்றருணைக்
கோன்றா னுரைத்தமொழி கொள்ளாயோ—தோன்றி

இழுக்கடித்தாய் நெஞ்சேநீ யென்கலைகள் சோர
அழுக்கடிக்கும் வண்ணார்போ லாய். (௬௫)

எங்குஞ் சிவமே யிரண்டற்று நிற்கினெஞ்சே
தங்குஞ் சுகநீ சலியாதே—அங்கங்கென்
றெண்ணாதே பாழி லிறந்து பிறந்துழலப்
பண்ணாதே யானுன் பரம். (௬௬)

மெய்யைப்பொய் யென்றிடவு மெய்யனையாப் பொய்ந்நெஞ்சே
பொய்யைத்தான் மெய்யெனவும் போகுமோ—ஐயமறத்
தன்மயத்தை மெய்யெனவே சார்ந்தனையே லெனக்கும்
என்மயமு நின்மயமு மே. (௬௭)

பூஞ்சர வனநிழலும் புத்தமுதுஞ் சாந்தபதம்
வாங்காத வானந்த மாமழையும்—நீங்காஞ்
சொல்லிறந்து மாண்டவர்போற் றூமௌன பூமியினுள்
இல்லையென நின்ற விடம். (௬௮)

இடம்வான நல்லபொரு ளின்பமெனக் கேவல்
அடங்காக் கருவி யனைத்தும்—உடனுதவ
மந்தார தாருவென வந்து மவுனகுரு
தந்தானோர் சொற்கொண் டுதான். (௬௯)

தானந் தவஞானஞ் சாற்றரிய சித்திமுத்தி
ஆனவையெல்லாந் தாமே யாகுமோ—மோனகுரு
சொன்னவொரு சொல்லாற் சுகமா யிருமனமே
இன்ன மயக்கமுனக் கேன். (௭௦)

உன்னை யுடலை யுறுபொருளைத் தாவெனவே
என்னை யடிமைக் கிருத்தினான்—சொன்னவொரு
சொல்லை மறவாமற் றோய்ந்தானெஞ் சேயுன்றன்
இல்லை பிறப்பதெனக் கே. (௭௧)

பெற்றிலேன் மோனம் பிறந்தவன்றே மோனமல்லாற்
கற்றிலே னேதுங் கதி. (எஅ)

ஏதுக்குஞ் சும்மா விருநீ யெனவுரைத்த
சூதுக்கோ தோன்றாத் துணையாகிப்—போதித்து
நின்றதற்கோ வென்னையா நீக்கிப் பிரியாமற்
கொன்றதற்கோ பேசாக் குறி. (எகூ)

தூறியுங் குணமுமறக் கூடாத கூட்டத்
தறிவறிவாய் நின்றுவிட வங்கே—பிறிவறவுஞ்
சும்மா விருத்திச் சுகங்கொடுத்த மோனநின்பாற்
கைம்மாறு நாளுெழிதல் காண். (அ0)

நான்ற னெனுமயக்க நண்ணுங்கா லென்னுணை
வான்ற னெனநிறைய மாட்டாய்நீ—ஊன்றமல்
வைத்தமவு னத்தாலே மாயை மனமிறந்து
துய்த்துவிடு ஞான சுகம். (அக)

ஞானநெறிக் கேற்றகுரு நண்ணரிய சித்திமுத்தி
தானந் தருமந் தழைத்தகுரு—ஞானமொடு
தாயெனவும் வந்தென்னை தந்தகுரு வென்சிந்தை
கோயிலென வாழுங் குரு. (அஉ)

சித்துஞ் சடமுஞ் சிவத்தைவிட வில்லையென்ற
நித்தன் பரமகுரு நேசத்தாற்—சுத்தநிலை
பெற்றேமே நெஞ்சே பெரும்பிறவி சாராமற்
கற்றேமே மோனக் கரு. (அங)

திருச்சிற்றம்பலம்.

---

# ஏசற்றவந்நிலை.

கொச்சகக்கலிப்பா.

ஏசற்ற வந்நிலையே யெந்தைபரி பூரணமாய்
மாசற்ற வானந்த வாரி வழங்கிடுமே
ஊசற் சுழல்போ லுலகநெறி வாதனையாற்
பாசத்துட் செல்லாதே பல்காலும் பாழ்நெஞ்சே. (௧)

பாழாகி யண்டப் பரப்பையெல்லாம் வாய்மடுத்தும்
ஆழாழி யின்பத் தழுந்தப் படியாயோ
தாழாயோ வெந்தையருட் டாட்கீழ்நெஞ் சேயெனைப்போல்
வாழாது வாழ்ந்தழியா வண்ண மிருப்பாயே. (௨)

இருப்பா யிருந்திடப்பே ரின்பவெளிக் கேநமக்குக்
குருப்பார்வை யல்லாமற் கூடக் கிடைத்திடுமோ
அருட்பாய் நமக்காக வாளவந்தார் பொன்னடிக்கீழ்
மருட்பேயர் போலிருக்க வாகண்டாய் வஞ்சநெஞ்சே. (௩)

வஞ்சமோ பண்டையுள வாதனையா னீயலைந்து
கொஞ்சமுற்று யுன்னைக் குறைசொல்ல வாயுமுண்டோ
அஞ்சலஞ்ச லென்றிரங்கு மானந்த மாகடற்கீழ்
நெஞ்சமே யென்போல நீயழுந்த வாராயோ. (௪)

வாரா வரவாய் வடநிழற்கீழ் வீற்றிருந்த
பூராய நம்மைப் புலப்படுத்த வேண்டியன்றோ
ஓராயோ நெஞ்சே யுருகாயோ வுற்றிருந்து
பாராயோ வவ்வுருவைப் பார்க்கநிறை வாய்விடுமே. (௫)

வாயாதோ வின்பவெள்ளம் வந்துன் வழியாகப்
பாயாதோ நாளும் பயிராய்ப் பிழையேனோ
ஓயாம லுன்னி யுருகுநெஞ்சே யந்நிலைக்கே
தாயான மோனனருள் சந்திக்க வந்திடுமே. (௬)

வந்த வரவை மறந்துலகாய் வாழ்ந்துகன்ம
பந்தமுற வுன்னைப் படிப்பிக்கக் கற்றவர்யார்
இந்தமதி யேனுனக்கிங் கென்மதிகே ளென்றலே
சிந்தநெஞ் சேபரத்திற் சாரினின்ப முண்டாமே. (எ)

இன்பமய மாயுலக மெல்லாம் பிழைப்பதற்குன்
அன்புநிலை யென்பா ரதுவுநினை யன்றியுண்டோ
உன்புலத்தை யோரினருட் கொப்பாவாய் நெஞ்சேநீ
தென்புலத்தா ரோடிருந்து செய்பூசை கொண்டருளே. (அ)

அருளேயோ ராலயமா வான்ந்த மாயிருந்த
பொருளோ டியானிருக்கப் போயொளித்த நெஞ்சேநீ
மருடீர் முயற்கோடோ வான்மலரோ பேய்த்தேரோ
இருடீர நீயுறைந்த தெவ்விடமோ காணேனே. (௯)

எவ்விடத்தும் பூரணமா மெந்தைபிரான் றண்ணருளே
அவ்விடத்தே யுன்னைநெஞ்சே யாராயிற் கண்டிலனே
அவ்விடத்து மாயையிலே மாண்டனையோ வவ்விடமுஞ்
செவ்விடமே நீயுஞ் செனனமற்று வாழியவே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

# காடுங்கரையும்.

---

காடுங் கரையு மனக்குரங்கு கால்விட் டோட வதன்பிறகே
ஓடுந் தொழிலாற்பயனுளதோ வொன்றாய்ப்பலவாயுயிர்க்குயிராய்
ஆடுங் கருணைப் பரஞ்சோதி யருளைப் பெறுதற் கன்புநிலை
தேடும் பருவ மிதுகண்டீர் சேரவாருஞ் செகத் தீரே. (க)

சைவசமய மேசமயஞ் சமயா தீதப் பழம் பொருளைக்
கைவந் திடவே மன்றுள்வெளி காட்டுமிந்தக் கருத்தை விட்டுப்

பொய்வந் துழலுஞ் சமயநெறி புகுதவேண்டா முத்தி தருந்
தெய்வ சபையைக் காண்பதற்குச் சேரவாருஞ் செகத்தீரே.(உ)

காக முறவு கலந்துண்ணக் கண்டீ ரகண்டா காரசிவ
போகமெனும் பேரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாய்
ஏக வுருவாய்க் கிடக்குதையோ வின்புற் றிடநா மினியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேர வாருஞ் செகத்தீரே.(ங)

திருச்சிற்றம்பலம்.

---

# எடுத்ததேகம்.

கட்டளைக்கலிப்பா.

எடுத்த தேகம் பொருளாவி மூன்றுநீ யெனக்கொன் றில்லை யெனமோன நன்னெறி, கொடுத்த போது கொடுத்ததன் றேபி னுங் குளறி நானென்று கூத்தாட மாயையை, விடுத்த வாறுங் கண்ணீரொடு கம்பலை விலகு மாறுமென் வேட்கைப்ர வாகத்தைத், தடுத்த வாறும் புகலாய் சிரகிரித் தாயுமான தயாபர மூர்த்தியே. (க)

நோயும் வெங்கலிப் பேயுந் தொடரநின் னூலிற் சொன்ன முறையிய மாதிநான், தோயும் வண்ண மெனைக்காக்குங் காவலுந் தொழும்பு கொள்ளுஞ் சுவாமியு நீகண்டாய், ஓயுஞ் சன்ம மினி யஞ்ச லஞ்சலென் றுலகங்கண்டு தொழவோ ருருவிலே, தாயுந் தந்தையு மானேய் சிரகிரித் தாயுமான தயாபர மூர்த்தியே. (உ)

திருச்சிற்றம்பலம்.

---

# முகமெலாம்.

முகமெ லாங்கணீர் முத்தரும் பிடச்செங்கை முகிழ்ப்ப
அகமெ லாங்குழைந் தானந்த மாகநல் லறிஞர்
இகமெ லாந்தவ மிழைக்கின்ற ரென்செய்கோ வேழை
சகமெ லாம்பெற நல்லரு ளுதரமாச் சமைந்தோய். (க)

# திடமுறவே.

கொச்சகக்கலிப்பா.

திடமுறவே நின்னருளைச் சேர்த்தென்னைக் காத்தாளக்
கடனுனக்கென் றெண்ணிநின்னைக் கைகுவித்தோ னலனே
அடைவுகெட்ட பாழ்மாயை யாழியிலே யின்னமல்லற்
படமுடியா தென்றுவிப் பற்றே பராபரமே. (க)

ஆராமை கண்டிங் கருட்குருவாய் நீயொருகால்
வாராயோ வந்து வருத்தமெல்லாந் தீராயோ
பூராய மாகவருட் பூரணத்தி லண்டமுதற்
பாராதி வைத்த பதியே பராபரமே. (உ)

வாழாது வாழ்வுனை வந்தடைந்தோ ரெல்லாரும்
ஆழாழி யென்னவரு ளானு ரழுக்காற்றே
டேழா யெனவுலக மேகமினி நானொருவன்
பாழாகா வாறுமுகம் பார்நீ பராபரமே. (௩)

உள்ளத்தி னுள்ளே யொளித்தென்னை யாட்டுகின்ற
கள்ளக் கருணையையான் காணுந் தரமாமோ
வெள்ளத்தை மாற்றி விடக்குண்பார் நஞ்சூட்டும்
பள்ளத்தின் மீன்போற் பதைத்தேன் பராபரமே. (௪)

# தன்னை.

கட்டளைக்கலிப்பா.

தன்னை யறியத் தனதருளாற் றானுணர்த்தும்
மன்னைப் பொருளெனவே வாழாமற் பாழ்நெஞ்சே
பொன்னைப் புவியைமடப் பூவையரை மெய்யெனவே
என்னைக் கவர்ந்திழுத்திட் டென்னபலன் கண்டாயே. (க)

திருச்சிற்றம்பலம்.

# ஆக்குவை.

ஆக்குவை மாயையாவு நொடியினி லவற்றைமாள
நீக்குவை நீக்கமில்லா நினைப்பொடு மறப்புமாற்றிப்
போக்கொடு வரவுமின்றிப் புனிதநல் லருளானந்தந்
தாக்கவுஞ் செய்வாயன்றோ சச்சிதா னந்தவாழ்வே. (க)

திருச்சிற்றம்பலம்.

# கற்புறு சிந்தை.

கற்புறு சிந்தைமாதர் கணவரை யன்றி வேறோர்
இற்புறத் தவரைநாடார் யாங்களு மின்ப வாழ்வுந்
தற்பொறி யாகநல்குந் தலைவநின் னலதோர் தெய்வம்
பொற்புறக் கருதோங் கண்டாய் பூரணா னந்தவாழ்வே. (க)

முருந்திள நகையார்பார முலைமுகந் தழுவிச் செவ்வாய்
விருந்தமிர் தெனவருந்தி வெறியாட்டுக் காளாய் நாளும்
இருந்தலோ காயதப்பே ரினத்தரு யிருந்த வேழை
பொருந்தவுங் கதிமே லுண்டோ பூரணா னந்தவாழ்வே. (உ)

தீதெலா மொன்றும் வன்மை செறிந்திருட் படலம்போர்த்த
பாதக சிந்தைபெற்ற பதகனுன் பாத நீழல்
ஆதர வடைய வுள்ளன் பருள்கிலை யாயின்மற்றியார்
போதனை செய்ய வல்லார் பூரணா னந்தவாழ்வே. (௩)

நாதனே நாதாதீத நண்பனே நடுவாய் நின்ற
நீதனைக் கலந்து நிற்க நெஞ்சமே நீவாவென்றால்
வாதனை பெருக்கி யென்னை வசஞ்செய்து மனந்துன்மார்க்க
போதனை செய்தனன்றோ பூரணா னந்த வாழ்வே. (௪)

எண்ணிய வெண்ண மெல்லா மிறப்புமேற் பிறப்புக்காசை
பண்ணியென் னறிவை யெல்லாம் பாழாக்கி யெனைப்பாழாக்குந்
திண்ணிய வினையைக் கொன்று சிறியனை யுய்யக்கொண்டாற்
புண்ணிய நினக்கே யன்றோ பூரணா னந்தவாழ்வே. (௫)

பத்திநீ பத்திக்கான பலனுநீ பலவாச் சொல்லுஞ்
சித்திநீ சித்தர்சித்தித் திறமுநீ திறமார் மோன
முத்திநீ முத்திக்கான முதலுநீ முதன்மையான
புத்திநீ யெனக்கொன் றுண்டோ பூரணா னந்தவாழ்வே. (௬)

தாயினு மினியநின்னைச் சரணென வடைந்த நாயேன்
பேயினுங் கடையனாகிப் பிதற்றுதல் செய்த னன்றோ
தீயிடை மெழுகாய் நொந்தேன் றெளிவிலேன் வீணேகாலம்
போயின தாற்ற கில்லேன் பூரணா னந்தவாழ்வே. (௭)

திருச்சிற்றம்பலம்.

---

# மலைவளர்காதலி.



பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கண் மித்திரர்கள்
பக்கமுண் டெக்காலமும்

பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாகயம
படரெனுந் திமிரமணுகாக்
கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதிருண்டு
காயசித் திகளுமுண்டு
கறையுண்ட கண்டர்பா லம்மைநின் றருளிற்
கருத்தொன்று முண்டாகுமேல்
நதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
ஞானவா னந்தவொளியே
நாதாந்த ரூபமே வேதாந்த மோனமே
நானெனு மகந்தைதீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே
மதுசூ தனன்றங்கையே
வரைரா சனுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெண்ணுமையே. (க)

தேட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே
சிற்றிடையி லேநடையிலே
சேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே
சிறுபிறை நுதற்கீற்றிலே
பொட்டிலே யவர்கட்டு பட்டிலேல் புனைகந்த
பொடியிலே யடியிலேமேற்
பூரித்த முலையிலே நிற்கின்ற நிலையிலே
புந்திதனை நுழையவிட்டு
நெட்டிலே யலையாம லறிவிலே பொறையிலே
நின்னடியர் கூட்டத்திலே
நிலைபெற்ற வன்பிலே மலைவற்ற மெய்ஞ்ஞான
ஞேயத்தி லேயுனிருதாள்
மட்டிலே மனதுசெல நினதருளு மருள்வையோ
வளமருவு தேவையரசே
வரைரா சனுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெண்ணுமையே. (உ)

பூதமுத லாகவே நாதபரி யந்தமும்
    பொய்யென் றெனைக்காட்டியென்
போதத்தி னடுவாகி யடியீறு மில்லாத
    போதபூ ரணவெளிக்குள்
ஏதுமற நில்லென் றுபாயமா வைத்துநினை
    வெல்லாஞ்செய் வல்லசித்தா
நின்பவுரு வைத்தந்த வன்னையே நின்னையே
    யெளியேன் மறந்துய்வனோ
வேதமுத லானநல் லாகமத் தன்மையை
    விளக்குமுட் கண்ணிலார்க்கு
மிக்கநின் மகிமையைக் கேளாத செவிடர்க்கும்
    வீறுவா தம்புகலும்வாய்
வாதநோ யாளர்க்கு மெட்டாத முக்கணுடை
    மாமருந் துக்கமிர்தமே
வரைரா சனுக்கிருகண் மணியா யுதித்தமலை
    வளர்கா தலிப்பெண்ணுமையே. (௯)

மிடியிட்ட வாழ்க்கையா லுப்பிட்ட கலமெனவு
    மெய்யெலா முள்ளுடைந்து
மீறிட்ட செல்வர்தந் தலைவாயில் வாசமாய்
    வேதனைக ளுறவேதனுங்
கூடியிட்ட வெவ்வினையை யேவிநான் பாவிநான்
    றொடரிட்ட தொழில்களெல்லாந்
உண்டிட்ட சாண்கும்பி யின்பொருட் டாயதுன்
    றொண்டர்பணி செய்வதென்றோ
அடியிட்ட செந்தமிழி னருமையிட் டாரூரி
    லரிவையோர் பரவைவாயி
லம்மட்டு மடியிட்டு நடைநடந் தருளடிக
    ளடியீது முடியீதென
வடியிட்ட மறைபேசு பச்சிளங் கிள்ளையே

வளமருவு தேவையரசே
வரைரா சனுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெணுமையே. (ச)

பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி
புராந்தகி த்ரியம்பகியெழிற்
புங்கவி விளங்குசிவ சங்கரி சகஸ்ரதள
புட்பமிசை வீற்றிருக்கும்
நாரணி மனாதீத நாயகி குணாதீத
நாதாந்த சத்தியென்றுன்
னாமமே யுச்சரித் திடுமடியர் நாமமே
நானுச் சரிக்கவசமோ
ஆரணி சடைக்கடவு ளாரணி யெனப்புகழ
வகிலாண்ட கோடியீன்ற
வன்னையே பின்னையுங் கன்னியென மறைபேசு
மானந்த ரூபமயிலே
வாரணியு மிருகொங்கை மாதர்மகிழ் கங்கைபுகழ்
வளமருவு தேவையரசே
வரைரா சனுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெணுமையே. (ரு)

பாகமோ பெறவுனைப் பாடவறி யேன்மல
பரிபாகம் வரவுமனதிற்
பண்புமோ சற்றுமிலை நியமமோ செய்திடப்
பாவியேன் பாபரூப
தேகமோ திடமில்லை ஞானமோ கனவிலுஞ்
சிந்தியேன் பேரின்பமோ
சேரவென் றுற்கள்ள மனதுமோ மெத்தவுஞ்
சிந்திக்கு தென்செய்குவேன்
மோகமோ மதமோ குரோதமோ லோபமோ
முற்றுமாற் சரியமோதான்

முற்றியிட் டெனைக்கொள்ளு நிதியமோ தேடவெனின்
மூசுவரி வண்டுபோல
மாகமோ டவும்வல்ல னெனையாள வல்லையோ
வளமருவு தேவையரசே
வரைராச னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெண்ணுமையே. (௬)

நீரோடு நூசம்போல் வினையேறு மெய்யெனுந்
தொக்கினுட் சிக்கிநாளுஞ்
சுழலோடு காற்றினிடை யழலேறு பஞ்செனச்
சூறையிட் டறிவையெல்லாம்
ஏனோடு நாளோற வார்த்திக மெனுங்கூற்றி
னட்டேற வுள்ளுடைந்து
நயனங்க ளற்றதோ ரேறு போலவே
நானிலந் தனிலலையவோ
வேளோடு தந்திரையக் கனதந்தி யுடன்வென்று
விரையேறு மாலைசூடி
மின்னோடு மேகங்கள் வெற்பேறி மறைவுற
வெருட்டிய கருங்கூந்தலாய்
வாளோடு கண்ணியே விடையேறு மெம்பிரான்
மனதுக் கிசைந்தமயிலே
வரைராச னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெண்ணுமையே. (௭)

பூதமொடு பழகிவள ரிந்திரிய மாம்பேய்கள்
புந்திமுத லானபேய்கள்
போராடு கோபாதி ராக்ஷசப் பேய்களென்
போதத்தை யூடழித்து
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தானிவ் வல்லலெல்லாம்
வீழும் படிக்குனது மௌனமந் த்ராதிக்ய

வித்தையை வியந்தருள்வையோ
நாதவடி வாகிய மஹாமந்த்ர ரூபியே
நாதாந்த வெட்டவெளியே
நற்சமய மானபயிர் தழையவரு மேகமே
ஞானவா னந்தமயிலே
வாதமிடு பரசமயம் யாவுக்கு முணர்வரிய
மகிமைபெறு பெரியபொருளே
வரைராச னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெண்ணுமையே. (அ)

திருச்சிற்றம்பலம்.

---

# அகிலாண்டநாயகி

# சந்தவிருத்தம்.

வட்ட மிட்டொளிர் பிராண வாயுவெனு
நிகள மோடுகம னஞ்செயு,
மனமெ னும்பெரிய மத்த யானையையென்
வசம டக்கிடின்மு மண்டலத்
திட்ட முற்றவள ராச யோகமிவன்
யோக மென்றறிஞர் புகழவே
யேழை யேனுலகி னீடு வாழ்வனினி
யிங்கி தற்குமனு மானமோ
பட்ட வர்த்தனர் பராவு சக்ரதர
பாக்ய மானசுப யோகமும்
பார காவிய கவித்வ நான்மறை
பாராய ணஞ்செய்மதி யூகமும்
அட்ட சித்தியுந லன்ப ருக்கருள

விருந்து கட்டிப்பொ னன்னமே
யண்ட கோடிபுகழ் காவை வாழுமகி
லாண்ட நாயகியெ னம்மையே. (ரு)

---

## பெரியநாயகிவிருத்தம்.

சேற்றைப் பிடித்துமட் கரகத் தடைத்தபடி
கன்மப் புனற்குளுறுங்
கடைகெட்ட நவவாயில் பெற்றபசு மட்கலக்
காயத்து ளென்னையிருத்திச்
சோற்றைச் சமத்திநீ பந்தித்து வைக்கத்
துருத்திக்குண் மதுவென்னவே
துள்ளித் துடித்தென்ன பேறுபெற் றேனருட்
டோயநீ பாய்ச்சல்செய்து
நாற்றைப் பதித்தெனை ஞானமாம் பயிரதனை
நாட்டிப் புலப்பட்டியு
களைதனை தீப்பூடு மனுகாமன் முன்னின்று
நாடுசிவ போகமான
பேற்றை யருத்தருளி யென்னையா ளல்லையோ
பெரியவகி லாண்டகோடி
பெற்றநா யகிபெரிய கயிலைமா நகர்மருவு
பெரியநா யகியம்மையே. (க)

திருச்சிற்றம்பலம்.

---

## த ந் தை த தா ய்.

தந்தைதாய் மகவுமனை வாழ்க்கை யாக்கை
சகமனைத்து மௌனியரு டைத்த போதே

இந்திரசா லங்கனவு கானனீரா
யிருந்ததுவே யிவ்வியற்கை யென்னே யென்னே. (க)

என்னைநான் கொடுக்கவொருப் பட்டகால
மியாதிருந்தேன் ஒனதுபோயென் னென்னைநீங்கா
அன்னைபோ லருள்பொழியுங் கருணைவாரி
யானந்தப் பெருமுகிலே யரசேசொல்வாய். (உ)

அரசேநின் றிருக்கருணை யல்லா தொன்றை
யறியாத சிறியேனு னதருளுன் முத்திக்
கரைசேரும் படிக்குனருட் புணையைக் கூட்டுங்
கைப்பிடியே கடைப்பிடியாக் கருத்துட் கண்டேன். (௩)

கண்டேனிங் கென்னையுமென் றனையு நீங்காக்
கருணையுநின் றன்னையுநான் கண்டேன் கண்டேன்
விண்டேனென் றெனைப்புறம்பாத் தள்ளவேண்டாம்
விண்டதுநின் னருட்களிப்பின் வியப்பா லன்றே. (ச)

ஓவென்ற சுத்தவெளி யொன்றே நின்றிங்
குயிரையெல்லாம் வம்மினென வுவட்டா வின்பத்
தேவென்ற நீகலந்து கலந்து முத்தி
சேர்த்தனையேற் குறைவாமோ செகவி லாசம். (ரு)

செகத்தையெல்லா மணுவளவுஞ் சிதறா வண்ணஞ்
சேர்த்தணுவில் வைப்பையணுத் திரளை யெல்லாம்
மகத்துவமாப் பிரமாண்ட மாகச் செய்யும்
வல்லவா நீநினைந்த வாறே யெல்லாம். (சு)

சொல்லாலே வாய்துடிப்ப தல்லா னெஞ்சந்
துடித்திருக ணீரருவி சொரியத் தேம்பிக்
கல்லாலே யிருந்தநெஞ்சுங் கல்லான் முக்கட்
கனியேயெனக் குருகிடவுங் காண்பேன் கொல்லோ. (எ)

# பெற்றவட்கே.



பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளை
    பெறும்பேதை யறிவாளோ பேரா னந்தம்
உற்றவர்க்கே கண்ணீர்கம் பலையுண் டாகு
    முறாதவரே கன்னெஞ்ச முடைய ராவார். (௧)

ஆவாவென் றழுதுதொழுங் கைய ராகி
    யப்பனே யானந்த வடிக ளேநீ
வாவாவென் றவர்க்கருளுங் கருணை யெந்தாய்
    வன்னெஞ்சர்க் கிரங்குவதெவ் வாறு நீயே. (௨)

நீயேயிங் கெளியேற்குந் தாக மோக
    நினைவூடே நின்றுணர்த்தி நிகழ்த்த லாலே
பேயேற்குந் தனக்கெனவோ ரன்பு முண்டோ
    பெம்மானே யின்னமன்பு பெருகப் பாராய். (௩)

பாராயோ வென்றுயர மெல்லா மையா
    பகருமுன்னே தெரியாதோ பாவி யேன்முன்
வாராயோ வின்னமொரு காலா னாலு
    மலர்க்காலென் சென்னிமிசை வைத்தி டாயோ. (௪)

வைத்திடிங்கா லைப்பிடித்துக் கண்ணின் மார்பில்
    வைத்தணைத்துக் கொண்டுகையால் வளைத்துக் கட்டிச்
சித்தமிசைப் புகவிருத்திப் பிடித்துக் கொண்டு
    தியக்கமற வின்பசுகஞ் சேர்வ தென்றோ. (௫)

சேராமற் சிற்றினத்தைப் பிரித்தெந் நாளுந்
    திருவடிப்பே ரினத்துடனே சேரா வண்ணம்
ஆராக நானலைந்தே னரசே நீதா
    னறிந்திருந்து மாயையிலே னழுந்த வைத்தாய். (௬)

வைத்தபொரு ளுடலாவி மூன்று நின்கை
    வசமெனவே யான்கொடுக்க வாங்கிக்கொண்டு

சித்தமிசைப் புகுந்ததுதான் மெய்யோ பொய்யோ
சிறியேற்கிங் குளவுரையாய் திகையா வண்ணம். (எ)

திகையாதோ வென்நாளும் பேரா னந்தத்
தெள்ளமுத முதவாமற் றிவலை காட்டி
வகையாக வலக்கழித்தீ ருண்டுடுத்து
வாழ்ந்தேனு னிரண்டுகொன் மாடு போலே. (அ)

மாடுமக்கள் சிற்றிடையார் செம்பொ னுடை
வைத்தகன தனமேடை மாட கூடம்
வீடுமென்பாற் றொடர்ச்சியோ விடைவி டாமன்
மிக்ககதி வீடன்றோ விளங்கல் வேண்டும். (கூ)

விளங்கவெனக் குள்ளுள்ளே விளங்கா நின்ற
வேதகமே போதகமே விமல வாழ்வே
களங்கரகி தப்பொருளே யென்னை நீங்காக்
கண்ணுதலே நாதாந்த காட்சிப் பேறே. (கo)

நாதமே நாதாந்த வெளியே சுத்த
ஞாதுருவே ஞானமே ஞேய மேநல்
வேதமே வேதமுடி வான மோன
வித்தேயிங் கென்னையினி விட்டி டாதே. (கக)

**திருச்சிற்றம்பலம்.**

---

# க ல் லா லி ன்.

கல்லாலி னிழறனி லொருநால் வர்க்குங்
கடவுணீ யுணர்த்துவதுங் கைக்காட் டென்றாற்
சொல்லாலே சொலப்படுமோ சொல்லுந் தன்மை
துரும்புபற்றிக் கடல்கடக்குந் துணிபே யன்றோ. (க)

அன்றேவா மோவெனவுஞ் சமய கோடி
யத்தனையும் வெவ்வேறா யாற்ற நேரே
நின்றுமே நிலைப்பெறுமா றெவ்வா றுங்கே
நின்னருள்கொண் டறிவதல்லா னெறிவே றுண்டோ. (உ)

நேர்பார்க்கி னின்னையன்றி யகிலம் வேறோ
நிலநீர்தீக் கால்வானு நீயலாத
ஊரியாது மில்லையென்றால் யாங்கள் வேறோ
கோதையொரு கூறுடையாய் கூறாய் கூறாய். (ங)

கூறாய வைம்பூதச் சுமையைத் தாங்கிக்
குலைந்லா மனமெனும்பேய்க் குரங்கின் பின்னே
மாறாத கவலையுடன் சுழல வென்னை
வைத்தாயே பரமேநின் மகிமை நன்றே. (ச)

நன்றெனவுந் தீதெனவு மெனக்கிங் குண்டோ
நானாகி நீயிருந்த நியாயஞ் சற்றே
இன்றெனக்கு வெளியாறே லெல்லாம் வல்ல
விறைவாநின் னடியருட னிருந்து வாழ்வேன். (ரு)

வாழ்வெனவுந் தாழ்வெனவு மிரண்டாப் பேசும்
வையகத்தார் கற்பனையா மயக்க மான
பாழ்வலையைக் கிழித்துதறிச் செயல்போய் வாழப்
பரமேநின் னானந்தப் பார்வை யெங்கே. (சா)

எங்கேயெங் கேயருளென் றேழை யிரந்தா
லேழையிவ னெனவுமெண்ணி யிச்சை கூறும்
அங்கேயங் கேவெளிவந் தென்னை யாண்ட
வாரமுதே யுனைக்காண்பா னலந்து போனேன். (எ)

போனநாட் கிரங்குவதே தொழிலா விங்ஙன்
பொருந்துநா ளத்தனையும் போக்கி னேனென்

ஞானநா யகனேநின் மோன ஞான
நாட்டமுற்று வாழ்ந்திருக்கு நாளெந் நாளோ. (அ)

நாட்பட்ட கமலமன்ன விதய மேவு
நறுந்தேனே துன்மார்க்க நாரி மார்கண்
வாட்பட்ட காயமிந்தக் காய மென்றே
வன்கூற்று முயிர்பிடிக்க வருமந் நீதி. (கூ)

நீதியெங்கே மறையெங்கே மண்விண் ணெங்கே
நித்தியரா மவர்களெங்கே நெறிதப் பாத
சாதியெங்கே யொழுக்கமெங்கே யாங்க ளெங்கே
தற்பரநீ பின்னுமொன்றைச் சமைப்ப தானால். (க0)

ஆனாலும் யானெனதிங் கற்ற வெல்லை
யதுபோது மதுகதிதா னல்ல வென்று
போனாலும் யான்போவ னல்லான் மோனப்
புண்ணியனே வேறுமொரு பொருளை நாடேன். (கக)

பொருளேநின் பூரணமே விட்ட காலம்
போக்குவர வுண்டோதற் போத முண்டோ
இருடானுண் டோவல்லால் வெளிதா னுண்டோ
வின்பமுண்டோ துன்பமுண்டோ யாமங் குண்டோ. (கஉ)

உண்டோநீ படைத்தவுயிர்த் திரளி லென்போ
லொருபாவி தேகாதி யுலகம் பொய்யாக்
கண்டேயு மெள்ளளவுத் துறவு மின்றிக்
காசினிக்கு ளலைந்தவரார் காட்டாய் தேவே. (கங)

தேவரெல்லாந் தொழச்சிவந்த செந்தாண் முக்கட்
செங்கரும்பே மொழிக்குமொழி தித்திப் பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்குந் திருச்செ விக்கே
மூடனேன் புலம்பியசொன் முற்று மோதான். (கச)

முற்றுமோ வெனக்கினியா னந்த வாழ்வு
முதறியுக் கினியாய்நின் முளரித் தாளிற்
பற்றுமோ சற்றுமில்லை யையோ வையோ
பாவியேன் கட்கலக்கம் பார்த்தி லாயோ. (கரு)

பார்த்தவெல் லாமழியு மதனாற் சுட்டிப்
பாராதே பார்த்திருக்கப் பரமே மோன
மூர்த்திவடி வாயுணர்த்துங் கைக்காட் டின்மை
முற்றியென தல்லல்வினை முடிவ தென்றோ. (கசா)

என்றனைநீ யன்றளம்யா மென்ப தென்னை
யிதுநிற்க வெல்லாந்தா மில்லை யென்றே
பொன்றிடச்செய் வல்லவனீ யெனைப்ப டைக்கும்
பொற்புடையா யென்னினது பொருந்தி டாதோ. (கஎ)

பொருந்துசக மனைத்தினையும் பொய்பொய் யென்று
புகன்றபடி மெய்யென்றே போத ரூபத்
திருந்தபடி யென்றிருப்ப தன்றே யன்றோ
வெம்பெருமான் யான்கவலை யெய்தாக் காலம். (கஅ)

காலமே காலமொரு மூன்றுங் காட்டுங்
காரணமே காரணகா ரியங்க ளில்லாக்
கோலமே யெனைவாவா வென்று கூவிக்
குறைவறநின் னருள்கொடுத்தாற் குறைவோ சொல்லாய்.()

சொல்லரிய தொருதியெல்லாங் கடந்து நின்ற
சொரூபானந் தச்சுடரே தொண்ட னேனைக்
கல்லாகப் படைத்தாலு மெத்த நன்றே
கரணமுடன் குறைவு கலக்க மாட்டேன். (உ0)

கலங்காத நெஞ்சுடைய ஞான தீரர்
கடவுளுனைக் காணவே காய மாதி

புலங்காணூர் நானொருவன் ஞானம் பேசிப்
பொய்க்கூடு காத்ததென்ன புதுமை கண்டாய். (உக)

கண்டிலையோ யான்படும்பா டெல்லா மூன்று
கண்ணிருந்துந் தெரியாதோ கசிந்துள் ளன்பார்
தொண்டரடித் தொண்டனன்றோ கருணை நீங்காச்
சுத்தபரி பூரணமாஞ் சோதி நாதா. (உஉ)

சோதியா யிருட்பிழம்பைச் சூறை யாடுந்
தூவெளியே யெனைத்தொடர்ந்து தொடர்ந்தெந் நாளும்
வாதியா நின்றவினைப் பகையை வென்ற
வாழ்வேயிங் குனைப்பிரிந்து மயங்கு கின்றேன். (உந)

மயக்குறுமென் மனமணுகாப் பாதை காட்டி
வல்வினையைப் பறித்தனையே வாழ்வே நானென்
செயக்கடவேன் செயலெல்லா நினதே யென்று
செங்கைகுவிப் பேனல்லாற் செயல்வே றில்லை. (உச)

வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லால்
மாறுபடுங் கருத்தில்லை முடிவின் மோன
வாரிதியி னதித்திரள்போல் வயங்கிற் றம்மா. (உரு)

அம்மாவீ ததிசயந்தா னன்றோ வன்றோ
வகண்டநிலை யாக்கியென்னை யறிவாம் வண்ணஞ்
சும்மாவே யிருக்கவைத்தா யையா வாங்கே
சுகமயமா யிருப்பதல்லாற் சொல்வா னென்னே. (உசு)

என்னே நான் பிறந்துழல வந்த வாறிங்
கெனக்கெனவோர் செயலிலையே யேழையேன்பால்
முன்னேசெய் வினையெனவும் பின்னே வந்து
மூளும்வினை யெனவும்வா முறையே னெந்தாய். (உஎ)

தூயான தண்ணருளை நிரம்ப வைத்துத்
தமியேனைப் புரவாமற் றள்ளித் தள்ளிப்
போயானை தென்கொலையா வேக தேசம்
பூரணத்துக் குண்டோதான் புகலல் வேண்டும். (உஅ)

புகலரிய நின்விளையாட் டென்னே யெந்தாய்
புன்மையறி வுடையவென்னைப் பொருளாய்ப் பண்ணி
இகல்வினைக்கு மலமாயை கன்மத் தூடே
யிடருறவுஞ் செய்தனையே யிரக்க மீதோ. (உகூ)

இரக்கமொடு பொறையீத லறிவா சார
மில்லேனு னல்லோர்க ளிட்டங் கண்டாற்
கரக்குமியல் புடையேன்பாழ் நெஞ்ச மெந்தாய்
கரும்தாதோ வல்லுருக்கோ கரிய கல்லோ. (௩௦)

திருச்சிற்றம்பலம்.

---

# பராபரக்கண்ணி.

சீராருந் தெய்வத் திருவருளாம் பூமிமுதற்
பாராதி யாண்ட பதியே பராபரமே. (க)

கன்றுரக் கண்டோர் கருப்பொருள்கா ணுமலருள்
மின்றுஊடி ருந்தவின்ப வெற்பே பராபரமே. (உ)

சிந்தித்த வெல்லாமென் சிந்தையறிந் தேயுதவ
வந்த கருணை மழையே பராபரமே. (௩)

ஆரா வமுதே யரசேயா னந்தவெள்ளப்
பேராறே மோனப் பெருக்கே பராபரமே. (௪)

ஆரறிவா ரென்ன வனந்தமறை யோலமிடும்
பேரறிவே யின்பப் பெருக்கே பராபரமே. (ரு)

உரையிறந்த வன்பருளத் தோங்கொளியா யோங்கிக்
கரையிறந்த வின்பக் கடலே பராபரமே. (சு)

எத்திக்குந் தானுகி யென்னிதயத் தேயூறித்
தித்திக்கு மானந்தத் தேனே பராபரமே. (எ)

திக்கொடுகீழ் மேலுந் திருவருளாம் பொற்பறிந்தோர்
கைக்குள்வளர் நெல்லிக் கனியே பராபரமே. (அ)

முத்தே பவளமே மொய்த்தபசும் பொற்சுடரே
சித்தேயென் னுள்ளத் தெளிவே பராபரமே. (கூ)

கண்ணே கருத்தேயென் கற்பகமே கண்ணிறைந்த
விண்ணேயா னந்த வியப்பே பராபரமே. (க0)

வாக்காய் மனதாய் மனவாக் கிறந்தவர்பாற்
ருக்காதே தாக்குந் தனியே பராபரமே. (கக)

பார்த்தவிட மெல்லாம் பரவெளியாய்த் தோன்றவொரு
வார்த்தைசொல்ல வந்த மனுவே பராபரமே. (க௨)

வானந்த மண்ணினந்தம் வைத்துவைத்துப் பார்க்கவெனக்
கானந்தந் தந்த வரசே பராபரமே. (கங)

அன்பைப் பெருக்கியென தாருயிரைக் காக்கவந்த
இன்பப் பெருக்கே யிறையே பராபரமே. (கச)

வானமெல்லாங் கொண்ட மவுனமணிப் பெட்டகத்துக்
கானபணி யான வணியே பராபரமே. (கரு)

ஆடு மிருதிதியு மொன்றாகக் கண்டவர்கள்
நாடும் பொருளான நட்பே பராபரமே. (கசு)

சித்த நினைவுஞ் செயுஞ்செயலு நீயெனவாழ்
உத்தமர்கட் கான வுறவே பராபரமே. (கஎ)

போதாந்தப் புண்ணியர்கள் போற்றிசய போற்றியெனும்
வேதாந்த வீட்டில் விளக்கே பராபரமே. (கஅ)

முத்தாந்த வீதி முளரிதொழு மன்பருக்கே
சித்தாந்த வீதிவருந் தேவே பராபரமே. (ககூ)

ஊனத் தருமுடலை யென்னதியா னென்பதற
ஞானந்தம் வேண்டி யலந்தேன் பராபரமே. (உ0)

என்புருகி நெஞ்ச மிளகிக் கரைந்துகரைந்
தன்புருவாய் நிற்க வலந்தேன் பராபரமே. (உக)

சுத்த வறிவாய்ச் சுகம்பொருந்தி னல்லாலென்
சித்தந் தெளியாதென் செய்வேன் பராபரமே. (உஉ)

பாரு வனுபூதி வாய்க்கினல்லா லென்மயக்கந்
தீருமோதென் செய்வேன் சிவமே பராபரமே. (உங)

ஆசுமறிந் தின்பநிட்டை தாராயே லாகெடுவேன்
தேகம் விழுந்திடினென் செய்வேன் பராபரமே. (உச)

அப்பாவென் னெப்பிழைப்பை யாற்றகிலேன் போற்றியென்று
செப்புவதல் லால்வேறென் செய்வேன் பராபரமே. (உரு)

உற்றறியு மென்னறிவு முட்கருவி போற்சவிமாண்
டற்றவின்பந் தந்திலையே யையா பராபரமே. (உசா)

சொல்லா லடங்காச் சுகக்கடலில் வாய்மடுக்கின்
அல்லாலென் றாக மறுமோ பராபரமே. (உஎ)

பாராயோ வென்னைமுகம் பார்த்தொருகா லென்கவலை
தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே. (உஅ)

ஓபாதோ வென்கவலை யுள்ளேயா னந்தவெள்ளம்
பாயாதோ வையா பகராய் பராபரமே. (உகூ)

ஓகோ வுனைப்பிரிந்தா ருள்ளங் கனலில்வைத்த
பாகோ மெழுகோ பகராய் பராபரமே. (௩௦)

கூர்த்தவறி வத்தனையுங் கொள்ளைகொடுத் துன்னருளைப்
பார்த்தவனு னென்னைமுகம் பாராய் பராபரமே. (௩௧)

கடலமுதே தேனேயென் கண்ணே கவலைப்
படமுடியா தென்னைமுகம் பார்நீ பராபரமே. (௩௨)

உள்ள மறிவா யுழப்பறிவாய் நானேழை
தள்ளிவிடின் மெத்தத் தவிப்பேன் பராபரமே. (௩௩)

கன்றினுக்குச் சேதா கனிந்திரங்கல் போலவெனக்
கென்றிரங்கு வாய்கருணை யெந்தாய் பராபரமே. (௩௪)

எண்ணாத வெண்ணமெலா மெண்ணியெண்ணி யேழைநெஞ்சம்
புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே. (௩௫)

ஆழித் துரும்பெனவே யங்குமிங்கு முன்னடிமை
பாழிற் றிரிவதென்ன பாவம் பராபரமே. (௩௬)

கற்றவறி வாலுனைநான் கண்டவன்போற் கூத்தாடிற்
குற்றமென்றென் னெஞ்சே கொதிக்கும் பராபரமே. (௩௭)

ஐயோ வுனைக்காண்பா னாசைகொண்ட தத்தனையும்
பொய்யோ வெளியாப் புகலாய் பராபரமே. (௩௮)

துன்பக்கண் ணீரிற் றுளைந்தேற்குன் னானந்த
இன்பக்கண் ணீர்வருவ தெந்நாள் பராபரமே. (௩௯)

வஞ்சனையும் பொய்யுமுள்ளே வைத்தழுக்கா றயுளறும்
நெஞ்சனுக்கு முண்டோ நெறிதான் பராபரமே. (௪௦)

பாசம்போய் நின்றவர்போற் பாராட்டி யானாலும்
மோசம்போ னேனான் முறையோ பராபரமே. (சக)

நன்றறியேன் தீதறியே னானென்று நின்றவனா
ரென்றறியே னேழை யென்னே பராபரமே. (சஉ)

இன்றுபுதி தன்றோ யெளியேன் படுந்துயரம்
நின்று மறியாயோ வுரையாய் பராபரமே. (சங)

எத்தனைதான் சன்மமெடுத் தெத்தனைநான் பட்டதுயர்
அத்தனையு நீயறிந்த தன்றோ பராபரமே. (சச)

இந்தநாட் சற்று மிரங்கிலையேற் காலன்வரும்
அந்தநாட் காக்கவல்லா ரார்காண் பராபரமே. (சரு)

உற்றுற்று நாடி யுளமருண்ட பாவியைநீ
சற்றிரங்கி யாளத் தகாதோ பராபரமே. (சசா)

எவ்வளவு நின்னைவிட வில்லா வெனைமயக்கிற்
றன்னாதலா லென்னபலன் சாற்றாய் பராபரமே. (சஎ)

பாடிப் படித்துலகிற் பாராட்டி நிற்பதற்கோ
தேடியெனை யடிமை சேர்த்தாய் பராபரமே. (சஅ)

சொன்னத்தைச் சொல்வதல்லாற் சொல்லறவென் சொல்லிறுதிக்
கென்னத்தைச் சொல்வே னெளியேன் பராபரமே. (சகூ)

சொல்லும் பொருளுமற்றுச் சும்மா விருப்பதற்கே
அல்லும் பகலுமெனக் காசை பராபரமே. (ரு0)

நேச நிருவிகற்ப நிட்டையல்லா லுன்னடிமைக்
காசையுண்டோ நீயறியா தன்றோ பராபரமே. (ருக)

துச்சனென வேண்டாமித் தொல்லுலகி லல்லல்கண்டால்
அச்ச மிகவுடையே னையா பராபரமே. (ருஉ)

கண்ணுவா ரேனுமுனைக் கைகுவியா ராயினந்த
மண்ணுவார் நட்பை மதியேன் பராபரமே. (௫௩)

கொல்லா விரதங் குவலயமெல் லாமோங்க
எல்லார்க்குஞ் சொல்லுவதென் னிச்சை பராபரமே. (௫௪)

எத்தாற் பிழைப்பேனோ வெந்தையே நின்னருட்கே
பித்தானே னெத்தவநான் பேதை பராபரமே. (௫௫)

வாயினாற் பேசா மவுனத்தை வைத்திருந்துந்
தாயிலார் போனான் றளர்ந்தேன் பராபரமே. (௫௬)

அன்னையிலாச் சேய்போ லலக்கணுற்றேன் கண்ணூர
என்னகத்திற் றூய்போ லிருக்கும் பராபரமே. (௫௭)

உற்றுனைக் கிற்றுயர முள்ளுள்ளே செந்தீயாய்ப்
பற்றநொந்தே னென்னைமுகம் பார்நீ பராபரமே. (௫௮)

பொய்யனிவ னென்றுமெள்ளப் போதிப்பார் சொற்கேட்டுக்
கைவிடவும் வேண்டாமென் கண்ணே பராபரமே. (௫௯)

எண்ண மறிந்தே யெனைப்பறிந்தே யேழையுய்யும்
வண்ணந் திருக்கருணை வையாய் பராபரமே. (௬௦)

நாட்டாதே யென்னையொன்றி னாட்டி யிதமகிதங்
காட்டாதே யெல்லாங் கண்டாய் பராபரமே. (௬௧)

உன்னைநினைந் துன்னிறைவி னுள்ளே யுலாவுமென்னை
அன்னைவயிற் றின்னமடைக் காதே பராபரமே. (௬௨)

பரமுனக்கென் றெண்ணும் பழக்கமே மாறு
வரமெனக்குத் தந்தருளென் வாழ்வே பராபரமே. (௬௩)

வந்தித்து நின்னை மறவாக் கடனாகச்
சிந்திக்க நின்னதருள் செய்யாய் பராபரமே. (௬௪)

எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணி யிரங்கவுநின்
தெய்வ வருட்கருணை செய்யாய் பராபரமே. (௬௫)

வெட்டவெளிப் பேதையன்யான் வேறுகப டொன்றறியேன்
கிட்டருடன் சேரனந்தந் தெண்டன் பராபரமே. (௬௬)

இரவுபக லற்றவிடத் தேகாந்த யோகம்
வரவுந் திருக்கருணை வையாய் பராபரமே. (௬௭)

பொய்க்காட்டிச் சிந்தை மயங்காம னின்றுசுகக்
கைக்காட்டி வாங்காதே கண்டாய் பராபரமே. (௬௮)

எப்பொருளு நீயெனவே யெண்ணிநான் றோன்றாத
வைப்பையழி யாநிலையா வையாய் பராபரமே. (௬௯)

சும்மா விருப்பதுவே சுட்டற்ற பூரணமென்
றெம்மா லறிதற் கெளிதோ பராபரமே. (௭௦)

நன்னெறியின் பக்க முடியடிகளப் பண்ணறநின்
றன்னெறிநா னிற்பதென்றோ சாற்றாய் பராபரமே. (௭௧)

எவ்வண்ணந் தீர்த்த மவுனிசொன்ன தெவ்வண்ணம்
அவ்வண்ண நிட்டை யருளாய் பராபரமே. (௭௨)

வித்தன்றி யாதும் விளைவதுண்டோ நின்னருளாஞ்
சித்தன்றி யாங்களுண்டோ செப்பாய் பராபரமே. (௭௩)

ஆகார மற்றுன் னறிவான வன்பருக்கே
தூங்காத தூக்கமது தூக்கும் பராபரமே. (௭௪)

சிந்தை யவிழ்ந்தவிழ்ந்து சின்மயமா நின்னடிக்கே
வந்தவர்க்கே யின்பநிலை வாய்க்கும் பராபரமே. (௭௫)

சொல்லாடா வூமரைப்போற் சொல்லிறந்து நீயாகின்
அல்லா லெனக்குமுத்தி யாமோ பராபரமே. (௭௬)

பேச்சாகா மோனம் பிறவா முளைத்ததென்றற்
காச்சாச்சு மேற்பயனுண் டாமோ பராபரமே. (௭௭)

கேட்டியென்றுன் னன்பர்மலங் கெட்டயர்ந்தோர் பூரணமாந்
தொட்டிலுக்குட் சேய்போற் றுயின்றார் பராபரமே. (௭௮)

காட்ட வருளிருக்கக் காணு திருண்மலத்து
நாட்ட மெனக்குவர னன்றோ பராபரமே. (௭௯)

எத்தன்மைக் குற்ற மியற்றிடினுந் தாய்பொறுக்கும்
அத்தன்மை நின்னருளு மன்றோ பராபரமே. (௮0)

எத்தனையோ தேர்ந்தாலு மென்னாலே யின்பமுண்டோ
சித்துருவே யின்பச் சிவமே பராபரமே. (௮௧)

மண்ணொடுவிண் காட்டி மறைந்துமறை யாவருளைக்
கண்ணொடுகண் ணுகவென்று காண்பேன் பராபரமே. (௮௨)

பஞ்சரித்து நின்னைப் பலகா லிரந்ததெல்லாம்
அஞ்ச லெனும்பொருட்டே யன்றோ பராபரமே. (௮௩)

எங்கெங்கே பார்த்தாலு மெவ்வுயிர்க்கு மவ்வுயிராய்
அங்கங் கிருப்பதுநீ யன்றோ பராபரமே. (௮௪)

அனைத்துமாய் நின்றாயே யான்வேறோ நின்னை
நினைக்குமா றெங்கே நிகழ்த்தாய் பராபரமே. (௮௫)

நின்போதத் தாலே நினைப்பு மறப்புமென்றால்
என்போத மெங்கே யியம்பாய் பராபரமே. (௮௬)

ஒன்றைநினைந் தொன்றைமறந் தோடுமன மெல்லாநீ
என்றறிந்தா லெங்கே யியங்கும் பராபரமே. (௮௭)

கோழுந்தில் வயிரமெனக் கோதறவுள் ளன்பில்
அழுந்துமவர்க் கேசுகமுண் டாகும் பராபரமே. (௮௮)

பற்றும் பயிர்க்குப் படர்கொழுந்து போற்பருவம்
பெற்றவர்க்கே நின்னருடான் பேரும் பராபரமே. (அகூ)

பேராயர்க்கே ஞான மொழுங்காம்பே ரன்பான
தாரவெறும் போகமுன்னே சார்ந்தோர் பராபரமே. (கூ0)

அல்லும் பகலு மறிவாகி நின்றவர்க்கே
சொல்லும் பொருளுஞ் சுமைகாண் பராபரமே. (கூக)

சொல்லென்ற பூவை யிகழ்ந்தோர்க் குனைப்போற்றப்
பல்லியுந் தள்ளப் படுமோ பராபரமே. (கூ௨)

அந்தக் கரண மடங்கத் துறப்பதுவே
எந்தத் துறவினுநன் றெந்தாய் பராபரமே. (கூங)

தன்னை யறிந்தாற் றலைவன்மேற் பற்றலது
பின்னையொரு பற்றுமுண்டோ பேசாய் பராபரமே. (கூச)

அன்பாற் கரைந்துகண்ணீ ராறுகண்ட புண்ணியருக்
குன்பால் வரவழிதா னுண்டோ பராபரமே. (கூரு)

தன்னை யறிந்தருளே தாரகமா நிற்பதுவே
உன்னை யறிதற் குபாயம் பராபரமே. (கூசு)

சுற்றவெல்லை யாலிலைதான் காணுமோ காண்பதெல்லாம்
அற்றவிடத் தேவெளியா மன்றோ பராபரமே. (கூஎ)

கண்மூடிக் கண்விழித்துக் காண்பதுண்டோ நின்னருளாம்
விண்மூடி னெல்லாம் வெளியாம் பராபரமே. (கூஅ)

தேடரிய நாதருளென் னெஞ்சைக் கவரினென்றும்
பாரேன் சுகமும் படைப்பேன் பராபரமே. (கூகூ)

வாரிக் கரண வேண்டின் மலையேற லொக்குமுன்னை
கார்க்கரணப் பாவனைசெய் நாட்டம் பராபரமே. (க00)

வாதனைவிட் டுன்னருளின் மன்னினல்லால் வேறுமொரு
சாதனைதா னுண்டோநீ சாற்றாய் பராபரமே. (க0ங)

பாரகமும் விண்ணகமும் பற்றாக நிற்பதருட்
டாரகத்தைப் பற்றியன்றோ சாற்றாய் பராபரமே. (க0உ)

விளக்குந் தகளியையும் வேறென்றார் நின்னைத்
துளக்கமறச் சீவனென்று சொல்வார் பராபரமே. (க0ங)

பாராதி நீயாப் பகர்ந்தா லுகலமெனவும்
ஆராயுஞ் சீவனுநீ யாங்காண் பராபரமே. (க0ச)

பொய்யைப்பொய் யென்றறியும் போதத்துக் காதரவுன்
மெய்யருளே யன்றோ விளம்பாய் பராபரமே. (க0ரு)

வருவான்வந் தேனெனல்போன் மன்னியழி யுஞ்சகத்தைத்
தெரிவாக வில்லையென்ற தீரம் பராபரமே. (க0சு)

மாயா சகமில்லையேன் மற்றெனக்கோர் பற்றுமில்லை
நீயேநா னென்றுவந்து நிற்பேன் பராபரமே. (க0எ)

வானாதி நீயெனவே வைத்தமன்ற யென்னையுநீ
தானாகச் சொல்லாதோ சாற்றாய் பராபரமே. (க0அ)

வெள்ளக் கருணைமத வேழமா நின்னருட்கென்
கள்ளக் கருத்தே கவளம் பராபரமே. (க0கூ)

வண்டாய்த் துவண்டு மவுன மலரணைமேற்
கொண்டார்க்கோ வின்பங் கொடுப்பாய் பராபரமே. (கக0)

மாயைமுத லாம்வினைநீ மன்னுயிர்நீ மன்னுயிர்தேர்ந்
தாயுமறி வானதுநீ யன்றோ பராபரமே. (ககக)

என்னறிவும் யானுமென தென்பதுவு மாமிவைகள்
நின்னவையே யன்றோ நிகழ்த்தாய் பராபரமே. (ககஉ)

பாரறியா தண்டப் பரப்பறியா துன்பெருமை
யாரறிவார் நானோ வறிவேன் பராபரமே. (ககங)

அண்ட மனைத்திலுமா யப்பாலுக் கப்பாலுங்
கொண்டநின்னை யாரறிந்து கொள்வார் பராபரமே. (ககச)

ஒப்புயர்வொன் றின்றி யொலிபுகா மோனவட்டக்
கப்பலுக்காம் வான்பொருணீ கண்டாய் பராபரமே. (ககரு)

உன்போ லெளியவரு மெங்கெங்கும் பார்த்தாலும்
உன்போல் வலியவரு முண்டோ பராபரமே. (ககசு)

பார்க்கினண்ட பிண்டப் பரப்பனைத்து நின்செயலே
யார்க்குஞ் செயலிலையே யையா பராபரமே. (ககஎ)

ஒன்றே பலவே யுருவே யருவேயோ
என்றே யழைப்பதுன்னை யென்றோ பராபரமே. (ககஅ)

செப்புவதெல் லாஞ்செபநான் சிந்திப்ப தெல்லாநின்
ஒப்பி றியானமென வோர்ந்தேன் பராபரமே. (கககூ)

ஆரிருந்தென் னார்போயென் னாருற்றா நின்னருளின்
சீரிருந்தா லுய்வேன் சிவமே பராபரமே. (கஉ0)

வஞ்சகமன் வாதனைக்கும் வன்பிறவி வேதனைக்கும்
அஞ்சி யுனையடைந்தே னையா பராபரமே. (கஉக)

எந்தப்படியுன் னிதய மிருந்ததெமக்
கந்தப் படிவருவ தன்றோ பராபரமே. (கஉஉ)

எந்தநா ளுமெனைப்பிரியா தென்னுயிராய்ச்
சிந்தைகுடி கொண்டவருட் டேவே பராபரமே. (கஉங)

அஞ்சலஞ்ச லென்றடிமைக் கப்போதைக் கப்போதே
நெஞ்சி லுணர்த்து நிறைவே பராபரமே. (கஉச)

என்னையுன்றன் கைக்களித்தார் யாவரென்னை யான்கொடுத்துப்
பின்னையுன்னாற் பெற்றநலம் பேசேன் பராபரமே. (கஉரு)

வாய்பேசா வூமையென வைக்கவென்றோ நீமவுனத்
தாயாக வந்தருளைத் தந்தாய் பராபரமே. (கஉசு)

தன்னைத்தந் தென்னைத் தடுத்தாண்ட நின்கருணைக்
கென்னைக்கொண் டென்னபல னெந்தாய் பராபரமே. (கஉஎ)

மார்க்கண்டர்க் காக மறலிபட்ட பாட்டையுள்ளிப்
பார்க்கினன்பர்க் கென்ன பயங்காண் பராபரமே. (கஉஅ)

சுட்டி யணராமற் றுரியநிலை யாய்வெளியில்
விட்டநின்னை யானோ வியப்பேன் பராபரமே. (கஉகூ)

ஏதொன்று மின்றியென்னைச் சும்மா விருக்கவைத்தாய்
ஈதொன்றும் போதாதோ வின்பம் பராபரமே. (கஙo)

வாயொன்றும் பேசா மவுனியாய் வந்தாண்ட
தேயொன்றும் போதாதோ வின்பம் பராபரமே. (கஙக)

என்று மிருந்தபடிக் கென்னை யெனக்களித்த
தொன்றும்போ தாதோ வுரையாய் பராபரமே. (கஙஉ)

எண்டிசைகீழ் மேலான வெல்லாம் பெருவெளியாக்
கண்டவிடத் தென்னையுநான் கண்டேன் பராபரமே. (கஙங)

பித்தனையே தும்மறியாப் பேதையனை யாண்டவுனக்
கெத்தனைதான் றெண்ட னிடுவேன் பராபரமே. (கஙச)

தாயர்கர்ப்பத் தூடனமுந் தண்ணீருந் தந்தருளும்
நேயவுனை யாரே நினையார் பராபரமே. (கஙரு)

விரிந்த மனமொடுங்கும் வேளையினா னாகப்
பரந்தவருள் வாழி பதியே பராபரமே. (கஙசு)

சிந்தனைபோய் நானெனல்போய்த் தேக்கவின்ப மாமழையை
வந்து பொழிந்தனை நீ வாழி பராபரமே. (கஙஎ)

தந்தேனே யோர்வசனந் தந்தபடிக் கின்பமுமாய்
வந்தேனே யென்றனை நீ வாழி பராபரமே. (கஙஅ)

மண்ணும்விண் ணும்வந்து வணங்காவோ நின்னருளைக்
கண்ணுறவுட் கண்டவரைக் கண்டாற் பராபரமே. (கஙகூ)

என்றுங் கருணைபெற்ற வின்பத் தபோதனர்சொற்
சென்றசென்ற திக்கனைத்துஞ் செல்லும் பராபரமே. (கசo)

ஆடுவதும் பாடுவது மானந்த மாகநின்னைத்
தேடுவது நின்னடியார் செய்கை பராபரமே. (கசக)

போக்கியநின் றண்ணருளைப் புட்கலமாய்ப் பெற்றவர்கட்
கெங்கெழுந்தென் ஞாயி றியம்பாய் பராபரமே. (கசஉ)

பாலரொடு பேயர்பித்தர் பான்மையென நிற்பதுவே
சீலமிகு ஞானியர்தஞ் செய்கை பராபரமே. (கசங)

உண்டுடுத்துப் பூண்டிங் குலகத்தார் போற்றிரியுந்
தொண்டர்வினை யாட்டே சுகங்காண் பராபரமே. (கசச)

கங்குல்பக லற்றதிருக் காட்சியர்கள் கண்டவழி
எங்கு மொருவழியே யெந்தாய் பராபரமே. (கசரு)

காயமிலை யல்லவென்று காண்பா ருறங்குவரோ
தூயவருட் பற்றுத் தொடர்வார் பராபரமே. (கசசா)

உப்புமுப்பும் போன்ற வயிக்கியபரா னந்தர்தமக்
கொப்புவமை சொல்லவும்வா யுண்டோ பராபரமே. (கசஎ)

சித்தந் தெளிந்து சிவமானோ ரெல்லோர்க்குங்
கொத்தடிமை யான குடிநான் பராபரமே. (கசஅ)

தம்முயிர்போ லெவ்வுயிருந் தானென்று தண்ணருள்கூர்
செம்மையருக் கேவலென்று செய்வேன் பராபரமே. (கசகூ)

விண்ணுக்கும் விண்ணுகி மேவுமுனக் கியான்பூசை
பண்ணிநிற்கு மாறு பகராய் பராபரமே. (கரு0)

நெஞ்சகமே கோயி னினைவே சுகந்தமன்பே
மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே. (கருக)

கேட்டவழி யாணவப்பேய் கீழாக மேலான
சிட்டருனைப் பூசை செய்வார் பராபரமே. (கருஉ)

கால்பிடித்து மூலக் கனலைமதி மண்டலத்தின்
மேலெழுப்பிற் றேகம் விழுமோ பராபரமே. (கருங)

பஞ்சசுத்தி செய்துநின்னைப் பாவித்துப் பூசைசெய்தால்
விஞ்சிய ஞானம் விளங்கும் பராபரமே. (கருச)

அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே. (கருரு)

மூர்த்திதலந் தீர்த்த முறையாற் றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே. (கருகூ)

விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே. (கருஎ)

தானந் தவந்தருமஞ் சந்தமுஞ் செய்வர்சிவ
ஞானந் தனையணைய நல்லோர் பராபரமே. (கருஅ)

சொன்னத்தைச் சொல்லித் துடிக்கின்ற வாணவப்பேய்க்
கின்னல் வருவதெந்நா ளெந்தாய் பராபரமே. (கருகூ)

இன்றோ விருவினைவந் தேறியது நானென்றோ
அன்றே விளைந்ததன்றோ வாற்றேன் பராபரமே. (கசூ0)

எண்ணுந்தா னின்னைவிட வில்லையென்றால் யான்முனமே
பண்ணவினை யேது பகராய் பராபரமே. (கஅக)

என்னையின்ன தென்றறியா வேழைக்கு மாகெடுவேன்
முன்னைவினை கூடன் முறையோ பராபரமே. (கஅஉ)

அறிவிலாநான் செய்வினையை யையாநீ கூட்டுங்
குறியே தெனக்குளவு கூறாய் பராபரமே. (கஅங)

என்னைக் கெடுக்க விசைந்த விருவினைநோய்
தன்னைக் கெடுக்கத் தகாதோ பராபரமே. (கஅச)

இல்லாமையே காட்டுகின்ற மாமாயை நானொருவன்
இல்லையெனி னெங்கே யிருக்கும் பராபரமே. (கஅரு)

முக்குணத்தா லெல்லா முளைக்கப் பிரகிருதிக்
கக்குணத்தை நல்கியதா ரெந்தாய் பராபரமே. (கஅசு)

ஆற்றப் படாதுதுன்ப மையவென்றா லென்மனது
தேற்றப் படாதினியென் செய்வேன் பராபரமே. (கஅஎ)

பூராய மாய்மனதைப் போக்கவறி யாமலையோ
யாரா யலைந்தே னரசே பராபரமே. (கஅஅ)

சினமிறக்கக் கற்றாலுஞ் சித்தியெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே. (கஅகூ)

வாதுக்கு வந்தெதிர்த்த மல்லரைப்போற் பாழ்த்தமனம்
ஏதுக்குக் கூத்தாடு தெந்தாய் பராபரமே. (கஎ0)

சூதாடு வார்போற் றுவண்டு துவண்டுமனம்
வாதாடி னென்னபலன் வாய்க்கும் பராபரமே. (கஎக)

கொள்ளித்தேள் கொட்டிக் குதிக்கின்ற பேய்க்குரங்காய்க்
கள்ளமனந் துள்ளுவதென் கண்டாய் பராபரமே. (கஎஉ)

வந்ததையும் போனதையும் வைத்துவைத்துப் பார்த்திருந்தாற்
சிந்தை யிதமகிதஞ் சேரும் பராபரமே. (கஎ௩)

ஏறுமயிர்ப் பாலமுணர் விந்தவிட யங்கணெருப்
பாறெனவு நன்று வறிந்திதேன் பராபரமே. (கஎ௪)

பொறிவழியே யேழை பொறியா யுழல்வதுநின்
அறிவின் விதித்தவிதி யாமோ பராபரமே. (கஎ௫)

பாசசா லங்களெல்லாம் பற்றுவிட ஞானவைவாள்
வீசுநா ளெந்நாள் விளம்பாய் பராபரமே. (கஎ௬)

எந்தவுட லேனு மெடுத்தவுட னல்லதென்று
சிந்தைசெய வந்ததிறஞ் செப்பாய் பராபரமே. (கஎஎ)

பொய்யெல்லா மொன்றுப் பொருத்திவைத்த பொய்யுடலை
மெய்யென்றுன் மெய்யாய் விடுமோ பராபரமே. (கஎஅ)

மின்னனைய பொய்யுடலை மெய்யென்று நம்பியையோ
நின்னை மறக்கை நெறியோ பராபரமே. (கஎகூ)

நித்தியமொன் றில்லாத நீர்க்குமிழி போன்றவுடற்
கித்தனைதான் றுன்பமுண்டோ வென்னே பராபரமே. (கஅ0)

தேகமிறு மென்றுசடர் தேம்புவதென் னித்திரையின்
ஊகமறிந் தாற்பயந்தா னுண்டோ பராபரமே. (கஅக)

ஏதைச் சுமையா வெடுப்பா ரெடுத்தவுடற்
சேதமுறின் யாதுபின்னே செல்லும் பராபரமே. (கஅ௨)

தோற்பாவை நாலாட் சுமையாகுஞ் சீவனென்றிங்
கார்ப்பா லெடுத்ததெவ ராலே பராபரமே. (கஅ௩)

ஞாலத்தை மெய்யெனவே நம்பிநம்பி நாளுமென்றன்
காலத்தைப் போக்கியென்ன கண்டேன் பராபரமே. (கஅ௪)

பொய்யுலக வாழ்க்கைப் புலைச்சேரி வாதனைநின்
மெய்யருளின் மூழ்கின் விடுங்காண் பராபரமே. (கஅரு)

நூலேணி விண்ணேற நூற்குப் பருத்திவைப்பார்
போலே கருவிநன்னூற் போதம் பராபரமே. (கஅசு)

சின்னஞ் சிறியார்கள் செய்தமணற் சோற்றையொக்கும்
மன்னுங் கலைஞான மார்க்கம் பராபரமே. (கஅஎ)

வாசகஞா னத்தால் வருமோ சுகம்பாழ்த்த
பூசலென்று போமோ புகலாய் பராபரமே. (கஅஅ)

கேட்டதையே சொல்லுங் கிளிபோல நின்னருளி
கூட்டமின்றி வாய்பேச னன்றோ பராபரமே. (கஅகூ)

வெளியா யருளில் விரவுமன்பர் தேகம்
ஒளியாய்ப் பிறங்கியது முண்டோ பராபரமே. (ககூ0)

காலமொரு மூன்றுங் கருத்திலுணர்ந் தாலுமதை
ஞாலத் தனக்குரையார் நல்லோர் பராபரமே. (ககூக)

கொல்லா விரதமொன்று கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதார் யாரோ வறியேன் பராபரமே. (ககூ௨)

இல்லாத காரியத்தை யிச்சித்துச் சிந்தைவழி
செல்லாமை நல்லோர் திறங்காண் பராபரமே. (ககூ௩)

ஏதுவந்து மேதொழிந்து மென்னதியா னென்னார்கள்
போதநிலை கண்ட புலத்தோர் பராபரமே. (ககூச)

ஆயிரஞ்சொன் னாலு மறியாத வஞ்சநெஞ்சப்
பேயரொடு கூடிற் பிழைகாண் பராபரமே. (ககூரு)

மாயமயக் கொழிந்தார் மற்றொன்றை நாடுவரோ
நேய வருணிலையி னிற்பார் பராபரமே. (ககூசு)

நித்திரையிற் செத்தபிண நேருமுடற் கிச்சைவையாச்
சுத்தர்களே நல்ல துறவோர் பராபரமே. (௧௯௭)

எந்நெஞ்ச மேனு மிரங்குமே யின்னருட்குக்
கன்னெஞ் சருமுளரோ காட்டாய் பராபரமே. (௧௯௮)

மெத்தவழி வாழியின்பம் வாயா திருந்தலைந்தாற்
சிந்தைமயங் காதோவென் செய்வேன் பராபரமே. (௧௯௯)

தேடவே னென்றிக்கனைத்துந் தெண்டனிட்டேன் சிந்தைதனைத்
வாடவே னென்மயக்க மாற்றாய் பராபரமே. (௨௦௦)

மடமைபெறு மொன்றை மறந்தன்றோ வென்னை
அடிமைகொளல் வேண்டு மரசே பராபரமே. (௨௦௧)

காலர்பயந் தீரவின்பக் கற்பகம தென்றெழுந்த
மாலை வளர்த்தனையே வாழி பராபரமே. (௨௦௨)

நீர்ப்புற் புதமாய் நினைவருட்கே நின்றழியப்
பார்ப்பதல்லால் வேறுமொன்றைப் பாரேன் பராபரமே. (௨௦௩)

நீர்க்குமிழி போலென் னினைவுவெளி யாய்க்கரையப்
பார்க்குமிட மெல்லாமென் பார்வை பராபரமே. (௨௦௪)

ஆடவோ பாடவோ வாசைபட னெஞ்சுருகித்
தேடவோ நின்றேனென் செய்வேன் பராபரமே. (௨௦௫)

யோகாந்தஞ் சித்தாந்தம் வேறென்றார் கண்களிக்கும்
நாதாந்த மோன நலமே பராபரமே. (௨௦௬)

ஆனந்த மானவின்னை யன்றியொன்றை யன்றாக
மோனந் தந்தேற்கு முத்தி பராபரமே. (௨௦௭)

எதற்கு முன்னைவிட வில்லையென்ற வென்கருத்தைச்
சோதிக்க வேண்டாநான் சொன்னேன் பராபரமே. (௨௦௮)

முத்தியிலுந் தேகமிசை மூவிதமாஞ் சித்திபெற்றோர்
எத்தனைபே ரென்றுரைப்ப தெந்தாய் பராபரமே. (௨0௯)

நீயன்றி நானன்றி நினைவாரென் னெஞ்சகமாம்
தாயனைநின் றாலுமுண்டோ சாற்றாய் பராபரமே. (௨௧0)

அங்கமே நின்வடிவ மானசுகர் கூப்பிடநீ
எங்குமே யேயென்ற தென்னே பராபரமே. (௨௧௧)

சொல்லொணவெள்ளத் தண்ணருண்மேற் கொண்டுசுழித் தார்த்திழு
என்னையனைக் கப்பலெங்கே காணும் பராபரமே. [த்தாற்

எக்கலையுங் கற்றுணர்ந்தோ மென்றவர்க்குஞ் சம்மதஞ்சொல்
வக்கணையா லின்பம் வருமோ பராபரமே. (௨௧௩)

கல்லெறியப் பாசி கலைந்துநன்னீர் காணுநல்லோர்
சொல்லுணரின் ஞானம்வந்து தோன்றும் பராபரமே. (௨௧௪)

நின்னையுணர்ந் தோர்கடமை நிந்தித்த பேயறிஞர்
என்ன கதிபெறுவா ரெந்தாய் பராபரமே. (௨௧௫)

என்னறியா னென்னைவிற்றோ ரெங்கிருந்து பார்க்கின்றான்
சன்னதியா நீபெரிய சாமி பராபரமே. (௨௧௬)

சோறடுத் துருத்திச் சுமைசுமப்பக் கண்பிதுங்கக்
காற்றைப் பிடித்தலைந்தேன் கண்டாய் பராபரமே. (௨௧௭)

உள்ளபடி யொன்றை யுரைக்கினவர்க் குள்ளுறவாய்க்
கள்ளமின்றி யன்பாய்க் களிப்பேன் பராபரமே. (௨௧௮)

அந்தத் தவியல்பா டொன்றை யான்பகர்வ தல்லாற்
றெரிந்ததொன்றை யான்வேண்டிச் சொல்லேன் பராபரமே. ()

உள்ளமறி யாதொருவ ரொன்றையுன்னிப் பேசிலையோ
துள்ளிவிளங் கன்றாய்த் துடிப்பேன் பராபரமே. (௨௨0)

எல்லாரு மின்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே. (உஉக)

முன்னாண்மெய்ஞ் ஞான முனிவர்தவ மீட்டுதல்போல்
இந்நாளிற் காணவெனக் கிச்சை பராபரமே. (உஉஉ)

கன்மமென்ப தெல்லாங் கரிசறவே மெய்ஞ்ஞான
தன்மநிலை சார்ந்ததன்பர் தன்மை பராபரமே. (உஉங)

கண்டுயிலா தென்னறிவின் கண்ணூடே காட்சிபெற
மண்டிய பேரொளிநீ வாழி பராபரமே. (உஉச)

நானான தன்மையென்று நாடாம னாடவின்ப
வானாகி நின்றனைநீ வாழி பராபரமே. (உஉரு)

அகத்தூ டணுவணுவா யண்டமெல்லாந் தானாய்
மகத்தாகி நின்றனைநீ வாழி பராபரமே. (உஉசு)

காரகமாங் கர்ப்பவறைக் கண்ணூடு மென்கண்ணே
வாரம்வைத்துக் காத்தனைநீ வாழி பராபரமே. (உஉஎ)

புரந்தோர்தந் தேசமென்பார் பூமியைப்போ ராடி
இறந்தோருந் தம்மதென்பா ரென்னே பராபரமே. (உஉஅ)

மூர்த்தியெல்லாம் வாழியெங்கண் மோனகுரு வாழியருள்
வார்த்தையென்றும் வாழியன்பர் வாழி பராபரமே. (உஉகூ)

சொல்லும் பொருளுந் தொடரா வருணிறைவிற்
செல்லும் படிக்கருணை செய்தாய் பராபரமே. (உஙய)

இற்றைவரைக் குள்ளாக வெண்ணரிய சித்திமுத்தி
பெற்றவர்க ளெத்தனைபேர் பேசாய் பராபரமே. (உஙக)

நாடுங்கரு நிசா னாட்டிய பாளயமும்
ஈடுசெயு மோமுடிவி லெந்தாய் பராபரமே. (உஙஉ)

தேடுந் திரவியமுஞ் சேர்ந்தமணிப் பெட்டகமுங்
கூட வருந்துணையோ கூறாய் பராபரமே. (உஙங)

தேடாதே தேடினரே செங்கைத் துலாக்கோல்போல்
வாடாச் சமநிலையில் வாழ்வார் பராபரமே. (உஙச)

நீராய்க் கசிந்துருகி நெட்டுயிர்த்து நின்றேனைப்
பாராத தென்னோ பகராய் பராபரமே. (உஙரு)

உள்ள பொருளாவி யுடன்மூன்று மன்றேதான்
கொள்ளைகொண்ட நீயென் குறைதீர் பராபரமே. (உஙசா)

ஆழ்த்தாயே யிவ்வுலகி லல்லலெல்லாந் தீர்ந்தருளால்
வாழ்த்தாயே யென்றனைநீ வாழி பராபரமே. (உஙஎ)

தாரா வருளையெல்லாந் தந்தெனையு நின்னருளில்
வாராயோ வென்றனைநீ வாழி பராபரமே. (உஙஅ)

ஆசையுன்மீ தல்லா லருளறிய வேறுமொன்றிற்
பாசம்வையே னின்கருணைப் பாங்காற் பராபரமே. (உஙகூ)

ஆதியந்த நீகுருவா யாண்டதல்லா னின்னையன்றிப்
போதனையு முண்டோ புகலாய் பராபரமே. (உச0)

நானாக வந்து தடுத்தாண் டெனையின்ப
வானாகச் செய்தவின்ப வானே பராபரமே. (உசக)

பற்றற் றிருக்குநெறி பற்றிற் கடன்மலையுஞ்
சுற்ற நினைக்குமனஞ் சொன்னேனன் பராபரமே. (உசஉ)

படிப்பற்றுக் கேள்வியற்றுப் பற்றற்றுச் சிந்தைத்
துடிப்பற்றார்க் கன்றோ சுகங்காண் பராபரமே. (உசங)

சீத்தாரை நின்றோர் சடங்க ளிலிங்கமென
வைத்தாரு முண்டோவென் வாழ்வே பராபரமே. (உசச)

சித்த நிருவிகற்பஞ் சேர்ந்தா ருடற்றீபம்
வைத்தகர்ப்பூ ரம்போல் வயங்கும் பராபரமே. (உசரு)

ஆதிகா லத்திலெனை யாண்டனையே யிப்பானீ
போதியெனி னெங்கேநான் போவேன் பராபரமே. (உசசு)

நாவழுத்துஞ் சொன்மலரோ நாளுநிக்கும் பொன்மலரோ
தேவையுனக் கின்னதென்று செப்பாய் பராபரமே. (உசஎ)

கன்னறரும் பாகாய்க் கருப்புவட்டாய்க் கற்கண்டாய்
இன்னமுதா யென்னு ளிருந்தாய் பராபரமே. (உசஅ)

சிற்பரமே தற்பரமே தெய்வச் சுருதிசொன்ன
அற்புதமே யன்பே யறிவே பராபரமே. (உசகூ)

அறிவிப்பா னீயென்ற லைம்புலன்க டந்தந்
நெறிநிற்பார் யாரே நிகழ்த்தாய் பராபரமே. (உருo)

அந்தக் கரணமெனு மாகாத பேய்களெனை
வந்து பிடித்தாட்ட வழக்கோ பராபரமே. (உருக)

ஐவரொடுங் கூடாம லந்தரங்க சேவைதந்த
தெய்வ வறிவே சிவமே பராபரமே. (உருஉ)

அருளாகி நின்றசுக மாகாம லையோ
இருளாகி நிற்க வியல்போ பராபரமே. (உருஙா)

அன்பரெல்லா மின்ப மருந்திடவும் யானொருவன்
துன்புறுத லன்றோநீ சொல்லாய் பராபரமே. (உருச)

சந்ததமு நின்கருணை சார்றுவதல் லால்வேறு
சிந்தையறி யேனுன் சித்தம் பராபரமே. (உருரு)

நானு னெனக்குளறு நாட்டத்தா லென்னைவிட்டுப்
போனாலு முன்னைவிட்டுப் போகேன் பராபரமே. (உருசு)

கூர்த்தவறி வாலறியக் கூடா தெனக்குரவன்
தேர்த்தபடி தானே திரிந்தேன் பராபரமே. (உசுகூ)

பத்த ரருந்தும் பரமசுகம் யானருந்த
எத்தனைநாள் செல்லு மியம்பாய் பராபரமே. (உஎO)

தீரத்தி னூற்றுறவு சேராம லிவ்வுலகிற்
பாரத் தனம்பேசல் பண்போ பராபரமே. (உஎக)

இந்த வெளியினையுண் டேப்பமிடப் பேரறிவாத்
தந்தவெளிக் கேவெளியாய்ச் சார்ந்தேன் பராபரமே. (உஎஉ)

உணர்த்து முனைநாடா துணர்ந்தவையே நாடி
இணக்குறுமென் னேழைமைதா னென்னே பராபரமே. (உஎஙு)

உண்டுபோ லின்று முலகைத் திரமெனவுட்
கொண்டுநான் பெற்றபலன் கூறாய் பராபரமே. (உஎச)

உள்ளபடி யாதுமென வுற்றுணர்ந்தே னக்கணமே
கள்ளமனம் போனவழி காணேன் பராபரமே. (உஎரு)

சித்த மவுனஞ் செயல்வாக்கெ ழாமவுனஞ்
சுத்த மவுனமென்பாற் றோன்றிற் பராபரமே. (உஎசு)

எண்ணில் பலகோடியுயி ரெத்தனையோ வத்தனைக்குங்
கண்ணிற் கலந்தவருட் கண்ணே பராபரமே. (உஎஎ)

எனக்கினியா ருன்போலு மில்லையென்றால் யானும்
உனக்கினியா னாகா வுளவேன் பராபரமே. (உஎஅ)

அண்டபிண்டங் காணே னகமும் புறமுமொன்றாக்
கண்டவென்னை நீகலந்த காலம் பராபரமே. (உஎகூ)

எத்தனையோ கோடி யெடுத்தெடுத்துச் சொன்னாலுஞ்
சித்தமிரங் கிலையென் செய்வேன் பராபரமே. (உஅO)

அன்றிருந்த நல்லவருக்கு மற்புதமா நீயுரைத்த
தொன்றிருந்த வார்த்தையெனக் குண்டோ பராபரமே. (உஅக)

அப்பனென்று மன்னையென்று மாரியனென் றும்முனையே
செப்புவது முன்னிலையின் சீர்காண் பராபரமே. (உஅஉ)

கட்டித் தனமுமந்தக் காலர்வரும் போதெதிர்ந்து
வெட்டித் தனமோ விளம்பாய் பராபரமே. (உஅங)

பேசாத மோனநிலை பெற்றன்றோ நின்னருளாம்
வாசா மகோசரந்தான் வாய்க்கும் பராபரமே. (உஅச)

கற்றதுங் கேட்டாலுங் காயமழி யாதசித்தி
பெற்றாலு மின்பமுண்டோ பேசாய் பராபரமே. (உஅரு)

கண்டபடி யெல்லாங் கரைக்கின்ற வஞ்சனம்போல்
அண்டமெல்லா நின்னருளே யன்றோ பராபரமே. (உஅசு)

தன்செயலா லொன்றுமிலை தானென்றே நான்பாவி
என்செயலாய் நில்லா நினைவேன் பராபரமே. (உஅஎ)

கொலைகளவு கட்காமங் கோபம்விட்டா லன்றோ
மலையிலக்கா நின்னருடான் வாய்க்கும் பராபரமே. (உஅஅ)

தன்னையறி யாதுசகந் தானாயிருந்து விட்டால்
உன்னை யறிவரு முண்டோ பராபரமே. (உஅகூ)

மூன்றிரண்டென் றொன்று வுணர்வுகொடுத் துள்ளபடி
என்றுமென்னை வையா யிறையே பராபரமே. (உகூ0)

ஒருதுமபடி யார்க்குநேராங் காணவெளி யாகும்
துரியநிறை வான சுகமே பராபரமே. (உகூக)

பொய்ப்புலவித்த நெஞ்சனருட் பொற்பறிந்து திக்கனைத்துங்
கைகுவித்து நிற்பதெந்தக் காலம் பராபரமே. (உகூஉ)

அத்துவித மான வயிக்கிய வனுபவமே
சுத்தநிலை யந்நிலையார் சொல்வார் பராபரமே. (உகூகூ)

வைத்த சுவரலம்பின் மண்போமோ மாயையினோர்க்
கெத்தனைபோ தித்துமென்னு மெந்தாய் பராபரமே. (உகூச)

பூட்டற்றுத் தேகமற்றுப் போகுமுன்னே நின்னருளைக்
காட்டத் தகாதோவென் கண்ணே பராபரமே. (உகூரு)

சொல்விற் பதர்களைந்து சொன்முடிவு காணுந்தார்
நெல்விற் பதர்போல நிற்பார் பராபரமே. (உகூகூ)

அழுக்காற்று னெஞ்ச மழுங்கியபுன் மாக்கள்
இழுக்காற்று லின்பநல மெய்தார் பராபரமே. (உகூஎ)

தேகாதி பொய்யெனவே தேர்ந்தவுப சாந்தருக்கு
மோகாதி யுண்டோ மொழியாய் பராபரமே. (உகூஅ)

சாதனையெல் லாமவிழத் தற்போதங் காட்டாதோர்
போதனைநீ நல்குவதெப் போதோ பராபரமே. (உகூகூ)

ஒன்றுமறி யாவிருளா முள்ளம் படைத்தவெனக்
கென்று கதிவருவ தெந்தாய் பராபரமே. (௩00)

சிந்திக்குந் தோறுமென்னுட் சிற்சுகமா யூற்றூறிப்
புந்திக்கு ணின்றவருட் பொற்பே பராபரமே. (௩0க)

என்று மடைந்தோர்கட் கிரங்கார் குறிப்பினைத்துங்
கன்றை யுதைகாலி க்தைகாண் பராபரமே. (௩0உ)

குற்றங் குறையக் குணமே விடவருளை
உற்றவரே யாவிக் குறவாம் பராபரமே. (௩0௩)

ஒருரையால் வாய்க்குமுண்மைக் கோரனந்த நூல்கோடிப்
பேருரையாற் பேசிலென்ன பேறும் பராபரமே. (௩0ச)

சொல்லுஞ்சமயநெறிச் சுற்றுக்கு ளேசுழலும்
அல்லலொழிவதென்றைக் கையா பராபரமே. (௩௦௫)

பிடித்ததையே தாபிக்கும் பேரா ணவத்தை
அடித்துத் துரத்தவல்லா ரார்காண் பராபரமே. (௩௦௬)

நேசத்தா லின்னை நினைக்கு நினைவுடையார்
ஆசைக் கடலி லழுந்தார் பராபரமே. (௩௦௭)

கல்லாது கட்டுரையுங் காரியமோ நானொருசொற்
சொல்லாத தோஷமன்றோ கூறாய் பராபரமே. (௩௦௮)

தென்றலிடை யெல்லாந் திருவருளே தாரகமா
நின்றவர்க்கே யானந்த நிட்டை பராபரமே. (௩௦௯)

நீட்சி குறுகலில்லா நித்யசுகா ரம்பசுக
மாட்சியா முன்னைவந்து சார்ந்தேன் பராப்ரமே. (௩௧௦)

ஆறாறு தத்துவமாய் மன்னிநின்ற காரணநீ
ஆறாறி னிற்பதெந்த நாளோ பராபரமே. (௩௧௧)

நாட்டத்தி லன்றி நடையவந்தா லென்னவுன்னும்
நாட்டத்தி னூடுவந்த நட்பே பராபரமே. (௩௧௨)

நித்திரையாய்த் தானே நினைவயர்ந்தா னித்தநித்தஞ்
செத்தபிழைப் பானதெங்கள் செய்கை பராபரமே. (௩௧௩)

இன்பநிட்டை யெய்தாமல் யாதெனினுஞ் சென்றுமனந்
துன்புறுதல் வன்பிறவித் துக்கம் பராபரமே. (௩௧௪)

பொய்ப்பகல மெய்யான போதநிலை கண்டோர்க்கோர்
ஐயமிலை யையமிலை யையா பராபரமே. (௩௧௫)

பத்திரத்தை யுன்னி மயங்கா தெனக்கினியோர்
சத்திரத்தை வைக்கத் தகாதோ பராபரமே. (௩௧௬)

விண்கருணை பூத்ததென்ன மேவி யுயிர்க்குயிராய்த்
தண்கருணை தோன்றவரு டாய்நீ பராபரமே. (௩கஎ)

தன்மயமாய் நின்றநிலை தானேதா னாகிநின்றுன்
நின்மயமா யெல்லா நிகழும் பராபரமே. (௩கஅ)

ஏங்கி யிடையுநெஞ்ச வேழையைநீ வாவென்றே
பாங்குபெறச் செய்வதுன்மேற் பாரம் பராபரமே. (௩கசு)

ஆண்டநின்னை நீங்கா வடிமைகள்யா மாணவத்தைப்
பூண்டதென்ன கன்மம் புகலாய் பராபரமே. (௩உ0)

எங்கணுநீ யென்று லிருந்தபடி யெய்தாமல்
அங்குமிங்கு மென்றலைய லாமோ பராபரமே. (௩உக)

கற்குமது வுண்டு களித்ததல்லா னின்னருளில்
நிற்குமது தந்ததுண்டோ நீதான் பராபரமே. (௩உஉ)

அண்டபகி ரண்ட மறியாத நின்வடிவைக்
கண்டவரைக் கண்டாற் கதியாம் பராபரமே. (௩உ௩)

கலக்கமுற்ற நெஞ்சைக் கலக்கித் திரும்பத்
துலக்குபவ னீயலையோ சொல்லாய் பராபரமே. (௩உச)

சிந்தையுமென் போலச் செயலற் றடங்கிவிட்டால்
வந்ததெலா நின்செயலா வாழ்வேன் பராபரமே. (௩உரு)

பந்தமெலாந் தீரப் பரஞ்சோதி நீகுருவாய்
வந்த வடிவை மறவேன் பராபரமே. (௩உசு)

தானந்த மான சகச நிருவிகற்ப
ஆனந்த நிட்டையரு ளையா பராபரமே. (௩உஎ)

அல்லலெல்லாந் தீரவெனக் கானந்த மாகவொரு
சொல்லையென்பால் வைத்ததையென் சொல்வேன் பராபரமே. ()

சிந்தை மயக்கமறச் சின்மயமாய் நின்றவுன்னைத்
தந்தவுனக் கென்னையுநான் றந்தேன் பராபரமே. (௩௨௯)

மைகாட்டு மாயை மயக்கமற நீகுருவாய்க்
கைகாட்ட வுங்கனவு கண்டேன் பராபரமே. (௩௩௦)

மால்வைத்த சிந்தை மயக்கறவென் சென்னிமிசைக்
கால்வைக்க வுங்கனவு கண்டேன் பராபரமே. (௩௩௧)

மண்ணாள மாயையெல்லா மாண்டுவெளி யாகவிரு
கண்ணார வுங்கனவு கண்டேன் பராபரமே. (௩௩௨)

மண்ணீர்மை யாலே மயங்காதுன் கையாலென்
கண்ணீர் துடைக்கவுநான் கண்டேன் பராபரமே. (௩௩௩)

உன்னா துணரா வுணர்விலிமா பாவியென்றே
வென்னமென்னாங் கைநெகிழ விட்டாய் பராபரமே. (௩௩௪)

எல்லா நினதுசெய லென்றெண்ணு மெண்ணமுநீ
அல்லா லெனக்குளதோ வையா பராபரமே. (௩௩௫)

பந்த மயக்கிருக்கப் பற்றொழிந்தே னென்றுளறும்
இந்த மயக்க மெனக்கேன் பராபரமே. (௩௩௬)

காட்சியெல்லாங் கண்ணைவிடக் கண்டதுண்டோ யாதினுக்கும்
ஆட்சி யுனதருளே யன்றோ பராபரமே. (௩௩௭)

எட்டிக் திசையுமொன்றா யின்பமாய் நின்றவுன்னை
விட்டுப் பிரியவிடம் வேறோ பராபரமே. (௩௩௮)

பிரியா துயிர்க்குயிராய்ப் பின்னமற வோங்குஞ்
செறிவே யறிவே சிவமே பராபரமே. (௩௩௯)

ஏதேது சொன்னாலு மெள்ளளவு நீயிரங்காச்
சூதே தெனக்குளவு சொல்லாய் பராபரமே. (௩௪௦)

கற்பனையாய் பாடுகின்றேன் கண்ணீருங் கம்பலையுஞ்
சொற்பனத்துங் காணேனென் சொல்வேன் பராபரமே. (௩சக)

வன்பொன்று நீங்கா மனதிறப்ப மாறுப்பேர்
அன்பொன்றும் போதுமெனக் கையா பராபரமே. (௩சஉ)

ஏதுந் தெரியா வெளியேனை வாவெனநின்
போதநிலை காட்டிற் பொருதோ பராபரமே. (௩சங)

ஓராம லெல்லா மொழிந்தேற்குன் றெய்வவருள்
தாரா திருக்கத் தகுமோ பராபரமே. (௩சச)

யோனந் தருஞான மூட்டி யெனக்குவட்டா
ஆனந்த வாழ்க்கை யருளாய் பராபரமே. (௩சரு)

வாடுமுகங் கண்டென்னை வாடாமலேகாத்த
நீடுங் கருணை நிறைவே பராபரமே. (௩சசு)

புந்தியிலு னின்னடியைப் போற்றுகின்ற மெய்யடியார்
சிந்தையிறப் போநின் றியானம் பராபரமே. (௩சஎ)

உனக்குவமை யாக்கருணை யுள்வரும் வன்மைக்
கெனக்குவமை யானவரு மில்லை பராபரமே. (உசஅ)

தாயிருந்தும் பிள்ளை தளர்ந்தாற்போ லெவ்விடத்தும்
நீயிருந்து நான்றளர்ந்து நின்றேன் பராபரமே. (௩சகூ)

வாயாற் கிணறுகெட்ட வாறேபோல் வாய்பேசிப்
பேயானார்க் கின்பமுண்டோ பேசாய் பராபரமே. (௩ரு0)

பாவமென்று லேதும் பயமின்றிச் செய்யவிந்தச்
சீவனுக்கார் போதந் தெரித்தார் பராபரமே. (௩ருக)

இன்ப நிருவிகற்ப மின்றேதா வன்றெனிலோ
துன்பம் பொறுப்பரிது சொன்னேன் பராபரமே. (௩ருஉ)

கற்றுவிலை கற்றாற் கருவியவி ழாதருளாய்
நிற்றுவிலை கற்பதுவே நீதம் பராபரமே. (௩௫௩)

காய்ச்சச் சுடர்விடும்பொற் கட்டிபோ னின்மலமாய்ப்
பேச்சற் றவரே பிறவார் பராபரமே. (௩௫௪)

பற்றெற் றிருந்து சிந்தைப் பதைப்பொழிந்து தானேதான்
அற்றிருப்ப தென்றைக் கமைப்பாய் பராபரமே. (௩௫௫)

உருவெளிதான் வந்தனு ருத்தமர்க்கல் லாவினைமுங்
குருவழிநின் றார்க்குமுண்டோ கூறாய் பராபரமே. (௩௫௬)

தேசுபெறா தேனுமொரு சித்திபெறச் சீவன்முத்தி
ஆகுநெறி நல்லநெறி யையா பராபரமே. (௩௫௭)

உலகநெறி போற்சடல மோயவுயிர் முத்தி
இலகுமெனல் பந்த வியல்போ பராபரமே. (௩௫௮)

பரமாப் பரவெளியாப் பார்ப்பதல்லான் மற்றெவர்க்குந்
திரமேது மில்லையென்றுத் தேர்ந்தேன் பராபரமே. (௩௫௯)

தேடியே யென்னருளைத் தேடுமுன்னே யெய்தினடம்
ஆடியே ஞானந்த மாவேன் பராபரமே. (௩௬0)

உள்ளங் குழைய வுடல்குழைய வுள்ளிருந்த
கள்ளங் குழையவென்று காண்பேன் பராபரமே. (௩௬௧)

பட்டப் பகல்போலப் பாழ்த்தசிந்தை மாளினெல்லாம்
வெட்டவெளி யாக விளங்கும் பராபரமே. (௩௬௨)

பார்த்தேனைப் போற்கிடந்த பாழுஞ்சிந்தை மாளினென்னை
பார்க்குச் சரியிடலா மையா பராபரமே. (௩௬௩)

பாட்டிக்கோ வன்பினுக்கோ பத்திக்கோ வன்பர்தங்கள்
நீட்டிக்கெல் லாங்குறுகி நின்றாய் பராபரமே. (௩௬௪)

முத்தாந்த வித்தே முளைக்குமில மாயெழுந்த
சித்தாந்த மார்க்கச் சிறப்பே பராபரமே. (௩௬௫)

ஊன்ற வெளியா யுறங்காத பேருணர்வாய்
என்னுவிக் குள்ளே யிருந்தாய் பராபரமே. (௩௬௬)

தத்துவமெல் லாமகன்ற தன்மையர்க்குச் சின்மயமாம்
நித்தமுத்த சுத்த நிறைவே பராபரமே. (௩௬௭)

உள்ளக் கொதிப்பகல வுள்ளுள்ளே யானந்த
வெள்ள மலர்கருணை வேண்டும் பராபரமே. (௩௬௮)

என்னைப் புரப்பதரு ளின்கடனு மென்கடனும்
நின்னிற் பணியறவே நிற்கை பராபரமே. (௩௬௯)

தானேயா நன்னிலையைத் தந்தவரு ளானந்த
வானே மனாதீத வாழ்வே பராபரமே. (௩௭௦)

மண்ணாதி பூதமெல்லாம் வைத்திருந்த நின்னிறைவைக்
கண்ணாரக் கண்டு களித்தேன் பராபரமே. (௩௭௧)

அறியாமை யீதென் றறிவித்த வன்றேதான்
பிறியா வருணிலையும் பெற்றேன் பராபரமே. (௩௭௨)

தீதெனவு நன்றெனவுந் தேர்ந்துநான் றேர்ந்தபடி
ஏது நடக்கவொட்டா தென்னே பராபரமே. (௩௭௩)

கண்ட வறிவகண்டா காரமென மெய்யறிவிற்
கொண்டவர்க்கே முத்தி கொடுப்பாய் பராபரமே. (௩௭௪)

ஈறாக வல்வினைநா னென்னுமை யின்பசுகம்
பேறாம் படிக்கடிமை பெற்றேன் பராபரமே. (௩௭௫)

பெற்றா ரனுபூதி பேசாத மோனநிலை
கற்றா ருனைப்பிரியார் கண்டாய் பராபரமே. (௩௭௬)

நீயேநா னென்று நினைப்பு மறப்புமறத்
தாயே யனையவரு டந்தாய் பராபரமே. (௩௭௭)

சஞ்சலமற் றெல்லாநீ தானென் றுணர்ந்தேனென்
அஞ்சலியுங் கொள்ளா யரசே பராபரமே. (௩௭௮)

பூதமுந்த நாதவரை பொய்யென்ற மெய்யரெல்லாங்
காதலித்த வின்பக் கடலே பராபரமே. (௩௭௯)

வாக்குமன மொன்றுபட்ட வார்த்தையல்லால் வெவ்வேறாய்ப்
போக்குடைய வார்த்தை பொருந்தேன் பராபரமே. (௩௮௦)

வன்மையின்றி யெல்லா மதித்துணர்வாய்க் காகெடுவேன்
தன்மையொன் றுந்தோயத் தடையோ பராபரமே. (௩௮௧)

பத்தர்சித்தர் வாழியரி பக்குவர்கள் வாழிசெங்கோல்
வைத்தவர்கள் வாழிகுரு வாழி பராபரமே. (௩௮௨)

கல்லாதே நன்னூலுங் கற்றுணர்ந்த மெய்யடியார்
சொல்லாலே நின்னைத் தொடர்ந்தேன் பராபரமே. (௩௮௩)

சொல்லிறப்பச் சற்குருவாய்த் தோன்றிச் சுகங்கொடுத்த
நல்லுரைக்கே கொத்தடிமை நான்காண் பராபரமே. (௩௮௪)

முத்திக்கு வித்தான மோனக் கரும்புவழி
தித்தித் திடவிளைந்த தேனே பராபரமே. (௩௮௫)

நித்திரையும் பாழ்த்த நினைவுமற்று நிற்பதுவோ
சுத்த வருணிலைநீ சொல்லாய் பராபரமே. (௩௮௬)

மண்ணூறு மறிகடலு மற்றுளவு மெல்லாமுன்
கண்ணி லிருக்கவுநான் கண்டேன் பராபரமே. (௩௮௭)

பூட்டிவைத்து வஞ்சப் பொறிவழியே யென்றனைநீ
ஆட்டுகின்ற தேதோ வறியேன் பராபரமே. (௩௮௮)

பொய்யுணர்வா யிந்தப் புழுக்கூட்டைக் காத்திருந்தேன்
உய்யும் வகையு முளதோ பராபரமே. (௩௮௯)

திருச்சிற்றம்பலம்.

---

# பைங்கிளிக்கண்ணி.

அந்தமுட னாதி யளவாம லென்னறிவிற்
சுந்தரவான் சோதி துலங்குமோ பைங்கிளியே. (௧)

அகமேவு மண்ண லுக்கென் னல்லலெல்லாஞ் சொல்லிச்
சுகமான நீபோய்ச் சுகங்கொடுவா பைங்கிளியே. (௨)

ஆவிக்கு ளாவியெனு மற்புதனார் சிற்சுகந்தான்
பாவிக்குங் கிட்டுமோ சொல்லாய்நீ பைங்கிளியே. (௩)

ஆருமறி யாமலெனை யந்தரங்க மாகவந்து
சேரும் படியிறைக்குச் செப்பிவா பைங்கிளியே. (௪)

ஆறான கண்ணீர்க்கென் னங்கபங்க மானதையுங்
கூறாத தென்னோ குதலைமொழிப் பைங்கிளியே. (௫)

இன்பருள வாடையழுக் கேறுமெமக் கண்ணல்சுத்த
அம்பரமா மாடை யளிப்பானோ பைங்கிளியே. (௬)

உண்மை யொன்றிரண்டென் றோராமல் வீட்டுநெறி
சொன்னான் வரவும்வகை சொல்லாய்நீ பைங்கிளியே. (௭)

ஊருமிலார் பேருமிலா ருற்றுர்பெற் றாருடனே
யாருமிலா ரென்னை யறிவாரோ பைங்கிளியே. (௮)

ஐவரைப்பா ராமலெனக் குள்ளசுத்து நாயனாகர்
சீரைப்பார்த் தாற்கருணை செய்வாரோ பைங்கிளியே. (௯)

என்று விடியு மிறைவாவோ வென்றென்று
நின்றநிலை யெல்லா நிகழ்த்தாய்நீ பைங்கிளியே. (௧௦)

எந்தமட னூடு மெழுதா விறைவடிவைச்
சிந்தைபட லாவெழுதிச் சேர்ப்பேனோ பைங்கிளியே. (௧௧)

கண்ணுண் மணிபோலின்பங் காட்டியெனைப்பிரிந்த
தண்ணளியரு மின்னம்வந்து சேர்வாரோ பைங்கிளியே. (௧௨)

ஏடார் மலர்சூடே னெம்பெருமான் பொன்னடியாம்
வாடா மலர்முடிக்கு வாய்க்குமோ பைங்கிளியே. (௧௩)

கல்லேன் மலரேன் கனிந்தவன்பே பூசையென்ற
நல்லோர்பொல் லாவெனையு நாடுவரோ பைங்கிளியே. (௧௪)

கண்டதனைக் கண்டு கலக்கந் தவிரெனவே
விண்டபெரு மானையுநான் மேவுவனோ பைங்கிளியே. (௧௫)

காணாத காட்சி கருத்துவந்து காணாமல்
வீணாள் கழித்து மெலிவேனோ பைங்கிளியே. (௧௬)

காந்த மிரும்பைக் கவர்ந்திழுத்தா லென்னவருள்
வேந்த னெனையிழுத்து மேவுவனோ பைங்கிளியே. (௧௭)

காதலால் வாடினதுங் கண்டனையே யெம்மிறைவர்
போதரவா யின்பம் புசிப்பேனோ பைங்கிளியே. (௧௮)

கிட்டிக்கொண் டன்பருண்மை கேளாப் பலவடிகொள்
பட்டிக்கு மின்பமுண்டோ சொல்லாய்நீ பைங்கிளியே. (௧௯)

கேட்டோய் நெஞ்சிற் கிளர்வார் தழுவவென்றால்
செட்டோ ராவரவர் நேசமென்னோ பைங்கிளியே. (௨௦)

கூறுங் குணமுமில்லாக் கொள்கையினு ரென்கவலை
ஆறும் படிக்கு மணைவாரோ பைங்கிளியே. (உ௪)

சின்னஞ் சிறியேன்றன் சிந்தைகவர்ந் தாரிறைவர்
தன்னந் தனியே தவிர்ப்பேனோ பைங்கிளியே. (உஉ)

சிந்தை மருளைத் தெளிவித் தெனையாள
வந்தகுரு நாதனருள் வாய்க்குமோ பைங்கிளியே. (உ௩)

சொல்லிறந்து நின்ற சுகரூபப் பெம்மானை
அல்லும் பகலு மணைவேனோ பைங்கிளியே. (உ௪)

நற்போதத் தாலே தலைகிழ தாகவையன்
நற்போத வின்புவர நாட்செலுமோ பைங்கிளியே. (உ௫)

தன்னை யறியுந் தருணந் தனிற்றலைவர்
என்னையணை யாதவண்ண மெங்கொளித்தார் பைங்கிளியே. ()

தூங்கரிய மையலெல்லாந் தந்தெனைவிட் டின்னருளாம்
பாங்கியைச்சேர்ந் தாரிறைக்குப் பண்போசொல் பைங்கிளியே. ()

தாவியதோர் மர்க்கடமாந் தன்மைவிட்டே யண்ணலிடத்
தோவியம்போ னிற்கினெனை யுள்குவரோ பைங்கிளியே. (உ௮)

தீராக் கருவழக்கைத் தீர்வையிட்டங் கென்னையினிப்
பாரேறு தாண்டானைப் பற்றுவனோ பைங்கிளியே. (உ௯)

தூங்கிவிழித் தென்னபலன் றூங்காமற் றூங்கிநிற்கும்
பாங்குகண்டா லன்றே பலன்காண்பேன் பைங்கிளியே. (௩0)

தொல்லைக் கவலை தொலைத்துத் தொலையாத
எல்லையிலா வின்பமய மெய்துவனோ பைங்கிளியே. (௩௧)

நன்னெஞ்சத் தன்பரெல்லா நாதரைச்சேர்ந் தின்பணைந்தார்
வன்னெஞ்சத் தாலேநான் வாழ்விழந்தேன் பைங்கிளியே. (௩உ)

நானே சருதின்வர நாடார்கும் பாவிருந்தாற்
றானே யணைவரவர் தன்மையென்றோ பைங்கிளியே. (௩௩)

நீர்க்குமிழி போன்றவுட னிற்கையிலே சாசுவதஞ்
சேர்க்குநெறி யாமற் றிகைப்பேனோ பைங்கிளியே. (௩௪)

நெஞ்சகத்தில் வாழ்வார் நினைக்கின்வே றென்றணையார்
வஞ்சகத்தா ரல்லரவர் யார்க்கமென்றோ பைங்கிளியே. (௩௫)

பன்முத் திரைச்சமயம் பாழ்படக்கல் லாலடிவாழ்
தென்முத் திரையரசைச் சேர்வேனோ பைங்கிளியே. (௩௬)

பச்சைகண்ட நாட்டிற் பறக்குமுளைப் போற்பறந்தேன்
இச்சையெல்லா மன்னற் கியம்பிவா பைங்கிளியே. (௩௭)

பாசபந்தஞ் செய்ததுன்பம் பாராம லெம்மிறைவர்
ஆசைதந்த துன்பமதற் காற்றேனென் பைங்கிளியே. (௩௮)

பாராசை யற்றிறையைப் பற்றறநான் பற்றிநின்ற
பூராய மெல்லாம் புகன்றுவா பைங்கிளியே. (௩௯)

பேதைப் பருவத்தே பின்றொடர்ந்தென் பக்குவமுஞ்
சோதித்த வண்ணல்வந்து தோய்வாரோ பைங்கிளியே. (௪௦)

பைம்பயிரை நாடுமுன்போற் பார்பூத்த பைங்கொடிசேர்
செம்பயிரை நாடித் திகைத்தேனென் பைங்கிளியே. (௪௧)

பொய்க்கூடு கொண்டு புலம்புவனோ வெம்மிறைவர்
மெய்க்கூடு சென்று விளம்பிவா பைங்கிளியே. (௪௨)

பொய்ப்பணி வேண்டேனைப் பொருட்படுத்தி யண்ணலென்பால்
மெய்ப்பணியுந் தந்தொருகான் மேவுவனோ பைங்கிளியே. (௪௩)

மண்ணுறங்கும் விண்ணுறங்கு மற்றுளவெ லாமுறங்குங்
கண்ணுறங்கே னெம்மிறைவர் காதலாற் பைங்கிளியே. (௪௪)

மட்டுப் படாத மயக்கமெல்லாந் தீரவென்னை
வெட்டவெளி வீட்டிலண்ணல் மேவுவனோ பைங்கிளியே. (௪௫)

மாலைவளர்த் தென்னை வளர்த்திறைவர் பன்னெறியாம்
பாலை வனத்தில்விட்ட பாவமென்னோ பைங்கிளியே. (௪௬)

மெய்யினோய் மாற்றவுழ்த மெத்தவுண்டெம் மண்ணறந்த
மையனோய் தீர்க்க மருந்துமுண்டோ பைங்கிளியே. (௪௭)

மேவுபஞ்ச வண்ணமுற்றாய் வீண்சிறையா லல்லலுற்றாய்
பாவிபஞ்ச வண்ணம் பகர்ந்துவா பைங்கிளியே. (௪௮)

வாய்திறவா வண்ணமென்னை வைத்தாண்டார்க் கென்றுயரை
நீதிறவாச் சொல்லி நிசமாங்காண் பைங்கிளியே. (௪௯)

வாட்டப் படாத மவுனவின்பங் கையாலே
காட்டிக் கொடுத்தானைக் காண்பேனோ பைங்கிளியே. (௫0)

வாரா வரவாக வந்தருளு மோனருக்கென்
பேராசை யெல்லாம் போய்ப்பேசிவா பைங்கிளியே. (௫௧)

விண்ணவர்தம் பாலமுதம் வேப்பங்கா யாகவென்பாற்
பண்ணியதெம் மண்ணன்மயல் பார்த்தாயோ பைங்கிளியே. ()

விண்ணுள் வளியடங்கி வேறற்ற தென்னவருட்
கண்ணு ளடங்கிடவுங் காண்பேனோ பைங்கிளியே. (௫௩)

விண்ணூர் நிலவுதவழ் மேடையிலெல் லாருமுற
மண்ணுண வீட்டிலென்னை வைத்ததென்னோ பைங்கிளியே. (௫௪)

உள்ளத்தி னுள்ளே யொளித்திருந்தென் கள்ளமெல்லாம்
வள்ளலறிந் தாலெனக்கு வாயுமுண்டோ பைங்கிளியே. (௫௫)

ஆகத்தை நீக்குமுன்னே யாவித் துணைவரைநான்
தாகத்தின் வண்ணந் தழுவுவனோ பைங்கிளியே. (௫௬)

தாரணை சுபாவந் தலைப்படநின் றுன்ஞான
வாறு னவரும் வருவாரோ பைங்கிளியே. (௫எ)

கள்ளத் தலைவரவர் கைகாட்டிப் பேசாமல்
உள்ளத்தில் வந்த வுபாயமென்னே பைங்கிளியே. (௫அ)

திருச்சிற்றம்பலம்.

---

# எந்நாட் கண்ணி.

## தெய்வவணக்கம்.

நீர்பூத்த வேணி நிலவெறிப்ப மன்றாடுங்
கார்பூத்த கண்டனையான் காணுநா ளெந்நாளோ. (க)

பொன்னொரு மன்றுண் மணிப் பூவைவிழி வண்டுசுற்றும்
என்னா ரமுதினல மிச்சிப்ப தெந்நாளோ. (உ)

நீத்துமலக் கட்டறுத்து நேரே வெளியிலெம்மைத்
தூக்கிவைக்குந் தாளைத் தொழுதிடுநா ளெந்நாளே. (௩)

கருமுகங்காட் டாமலென்றுங் கர்ப்பூரம் வீசுந்
திருமுகமே நோக்கித் திருக்கறுப்ப தெந்நாளோ. (௪)

வெஞ்சே லெனும்விழியார் வேட்கைநஞ்சுக் கஞ்சினரை
அஞ்சே லெனுங்கைக் கபயமென்ப தெந்நாளோ. (௫)

ஆறு சமயத்து மதுவதுவாய் நின்றிலங்கும்
வீறு பரைதிருத்தாள் மேவுநா ளெந்நாளோ. (௬)

பச்சைநிற மாய்ச்சிவந்த பாகங் கலந்துலகை
இச்சையுட னீன்றாளை யாங்காண்ப தெந்நாளோ. (எ)

ஆதியந்தங் காட்டா தகண்டிதமாய் நின்றுணர்த்தும்
போதவடி வாமடியைப் போற்றுநா ளெந்நாளோ. (அ)

கங்கை நிலவுசடைக் காட்டானைத் தந்தையெனும்
புங்கவெண்கோட் டானைபதம் புந்திவைப்ப தெந்நாளோ. (கூ)

அஞ்சுமுகங் காட்டாம லாறுமுகங் காட்டவந்த
செஞ்சரணச் சேவடியைச் சிந்தைவைப்ப தெந்நாளோ. (க0)

தந்தையிரு தாடுணித்துத் தம்பிரான் றருள்சேர்ந்த
எந்தையிரு தாளிணைக்கே யின்புறுவ தெந்நாளோ. (கக)

## குருமரபின்வணக்கம்.

துய்யகரமலராற் சொல்லாமற் சொன்னவுண்மை
ஐயனைக்கல் லாலரசை யாமணுவ தெந்நாளோ. (க)

சிந்தையினுக் கெட்டாத சிற்சுகத்தைக் காட்டவல்ல
நந்தியடிக் கீழ்க்குடியாய் நாமணுவ தெந்நாளோ. (உ)

எந்தை சனற்குமர னாதியெமை யாட்கொள்வான்
வந்த தவத்தினரை வாழ்த்துநா ளெந்நாளோ. (ங)

பொய்கண்டார் காணப் புனிதமெனு மத்துவித
மெய்கண்ட நாதனருண் மேவுநா ளெந்நாளோ. (ச)

பாதிவிருத் தத்தாலிப் பார்விருத்த மாகவுண்மை
சாதித்தார் பொன்னடியைத் தான்பணிவ தெந்நாளோ. (ரு)

சிற்றம் பலமன்னுஞ் சின்மயராந் தில்லைநகர்க்
கொற்றங் குடிமுதலைக் கூறுநா ளெந்நாளோ. (சு)

துறைவிலருண் ஞானமுதல் கொற்றங் குடியடிகள்
நறைமலர்த்தாட் கன்புபெற்று நாமிருப்ப தெந்நாளோ. (எ)

நாலவங்கள் போகாம னன்னெறியைக் காட்டியெமை
ஆளவந்த கோலங்கட் கன்புவைப்ப தெந்நாளோ. (௮)

சொன்னநிலை யுள்ளடக்கி யென்போல் வருமவுனி
தன்னறிவுக் குள்ளேநான் சாருநா ளெந்நாளோ. (௯)

ஆறுமொன்றை நாடினதற் காறுமுண்டா மென்றெமக்குக்
கூறு மவுனியருள் கூடுநா ளெந்நாளோ. (௧௦)

[illegible]லமா மின்றருளை நேரேபா ரென்றவொரு
சொல்லான் மவுனியரு டோற்றுநா ளெந்நாளோ. (௧௧)

வைதிகமாஞ் சைவ மவுனிமவு னத்தளித்த
மெய்திகழ்ந்தென் னல்லல் விடியுநா ளெந்நாளோ. (௧௨)

வாக்குமன மற்ற மவுனிமவு னத்தருளே
தாக்கவுமென் னல்லலெல்லாந் தட்டழிவ தெந்நாளோ. (௧௩)

## அடியார்வணக்கம்.

வெம்பந்தந் தீர்த்துலகாள் வேந்தன் றிருஞான
சம்பந் தனையருளாற் சாருநா ளெந்நாளோ. (௧)

பாரின் சிவபோக மிங்கிவற்கே யென்னவுழ
வாரங்கொள் செங்கையர்தாள் வாரம்வைப்ப தெந்நாளோ. (௨)

சித்தரிறை யென்றறிந்து பேதைபாற் றூதனுப்பு
வித்தத் தமிழ்ச்சமர்த்தர் மெய்புகழ்வ தெந்நாளோ. (௩)

போதவூர் நாடறியப் புத்தர்தமை வாதில்வென்ற
வாதவூ ரையனன்பை வாஞ்சிப்ப தெந்நாளோ. (௪)

ஓட்டுடன்பற் றின்றி யுலகைத் துறந்த செல்வப்
பட்டினத்தார் பத்ரகிரி பண்புணர்வ தெந்நாளோ. (௫)

கண்டதுபொய் யென்றகண்டா காரசிவ மெய்யெனவே
விண்டசிவ வாக்கியர்தாண் மேவுநா ளெந்நாளோ. (கூ)

சக்கர வர்த்தி தவராச யோகியெனு
மிக்கதிரு மூலனருண் மேவுநா ளெந்நாளோ. (எ)

கந்தரனு பூதிபெற்றுக் கந்தரனு பூதிசொன்ன
எந்தையரு ணடி யிருக்குநா ளெந்நாளோ. (அ)

எண்ணரிய சித்த ரிமையோர் முதலான
பண்ணவர்கள் பத்தரருள் பாலிப்ப தெந்நாளோ. (கூ)

## யாக்கையைப்பழித்தல்.

சுக்கிலமு நீருஞ் சொரிமலமு நாறுமுடற்
புக்குழலும் வாஞ்சையினிப் போதுமென்ப தெந்நாளோ. (க)

நீர்க்குமிழி பூணமைத்து நின்றாலு நில்லாமெய்
பார்க்குமிடத் திதன்மேற் பற்றறுவ தெந்நாளோ. (உ)

காக்கைநரி செந்நாய் கழுகொருங்கட் கூடியுண்டு
தேக்குவிருந் தாமுடலைச் சீயென்ப தெந்நாளோ. (கூ)

செங்கிருமி யாதி செனித்தசென்ம பூமியினை
இங்கெனுட லென்னு மிழுக்கொழிவ தெந்நாளோ. (ச)

கூத்துவர்தொண் ணூற்றறுவர் தாமாய்வா ழிந்நாட்டைப்
பித்தனு னென்னும் பிதற்றொழிவ தெந்நாளோ. (ரு)

ஊனென்றி நாத னுணர்த்துமதை விட்டறிவேன்
நானென்ற பாவிதலை நாணுநா ளெந்நாளோ. (கூ)

வேலையிலா வேதன் விதித்தவிந்த்ர சாலவுடன்
மாலைவியா பார மயக்கொழிவ தெந்நாளோ. (எ)

ஆழ்ந்து நினைக்கி னரோசிகமா மிவ்வுடலில்
வாழ்ந்துபெறும் பேற்றை மதிக்குநா ளெந்நாளோ. (௮)

மும்மலச்சே றனை முழுக்கும்பி பாகமெனும்
இம்மலகா யத்து ளிகழ்ச்சிவைப்ப தெந்நாளோ. (௯)

நாற்றமிகக் காட்டு நவவாயில் பெற்றபசுஞ்
சோற்றுத் துருத்தி சுமையென்ப தெந்நாளோ. (௧௦)

உருவிருப்ப வுள்ளேதா னூறுமலக் கேணி
ஒருவருப்பு வாழ்க்கையைக்கண் டஞ்சுநா ளெந்நாளோ. (௧௧)

## மாதரைப்பழித்தல்.

மெய்வீசு நாற்றமெலா மிக்கமஞ்ச ளான்மறைத்துப்
பொய்வீசும் வாயார் புலையொழிவ தெந்நாளோ. (௧)

மின்னனியசெஞ் சப்பறவை சிக்கக் குழற்காட்டிற்
கன்னிவைப்போர் மாயங் கடக்குநா ளெந்நாளோ. (௨)

கன்றுமொழி பேசிமனங் கண்டுகொண்டு கைவிலையாக்
கொன்றுவிடு மானார்பொய்க் கூத்தொழிவ தெந்நாளோ. (௩)

காமனேவா வென்றிருண்ட கண்வலையை வீசுமின்னார்
நாமமறந் தருளை நண்ணுநா ளெந்நாளோ. (௪)

கண்களில்வெண் பூளை கரப்பக் கருமையிட்ட
பெண்கண்மய றப்பிப் பிழைக்குநா ளெந்நாளோ. (௫)

வீங்கித் தளர்ந்து விழுமுலையார் மேல்வீழ்ந்து
ஏங்குமதன் சோம்பைத் துடைக்குநா ளெந்நாளோ. (௬)

கச்சிருக்குங் கொங்கை கரும்பிருக்கு மின்மாற்றம்
வைச்சிருக்கு மாதர் மயக்கொழிவ தெந்நாளோ. (௭)

உச்சென்ற கொங்கைப் பசப்பியர்பா ழானமயல்
நச்சென் றறிந்தருளை நண்ணுநா ளெந்நாளோ. (௮)

உந்திச் சுழியா லுளத்தைச் சுழித்தகன
தந்தித் தனத்தார் தமைமறப்ப தெந்நாளோ. (௯)

நட்டுவைத்த சேலைப்பூங் கொய்சகத்திற் சிந்தையெல்லாங்
கட்டிவைக்கு மாயமின்னார் கட்டழிவ தெந்நாளோ. (௧0)

ஆழாழி யென்ன வளவுபடா வஞ்சநெஞ்சப்
பாழான மாதர்மயற் பற்றொழிவ தெந்நாளோ. (௧௧)

தூயபனித் திங்கள் சுடுவதெனப் பித்தேற்று
மாய மடவார் மயக்கொழிவ தெந்நாளோ. (௧௨)

ஏழைக் குறும்புசெயு மேந்திழையார் மோகமெனும்
பாழைக் கடந்து பயிராவ தெந்நாளோ. (௧௩)

விண்டு மொழிகுளறி வேட்கைமது மொண்டுதருந்
தொண்டியர்கள் கட்கடையிற் சுற்றொழிவ தெந்நாளோ. (௧௪)

மெய்யிற் சிவம்பிறக்க மேவுமின்பம் போன்மாதர்
பொய்யிலின்பின் றென்று பொருந்தாநா ளெந்நாளோ. (௧௫)

## தத்துவமுறைமை.

ஐம்பூதத் தாலே யலக்கழிந்த தோடமற
எம்பூத நாதனரு ளெய்துநா ளெந்நாளோ. (௧)

சத்தமுத லாம்புலனிற் சஞ்சரித்த கள்வரெனும்
பித்தர்பயந் தீர்ந்து பிழைக்குநா ளெந்நாளோ. (௨)

நாளும் பொறிவழியை நாடாத வண்ணமெமை
ஆளும் பொறியா லருள்வருவ தெந்நாளோ. (௩)

வாக்காதி யானகன்ம மாயைதம்பால் வீண்காலம்
போக்காம லுண்மை பொருந்துநா ளெந்நாளோ. (௪)

மனமான வானரக்கைம் மாலையா காமல்
ஏனையா ளடிகளடி யெய்துநா ளெந்நாளோ. (௫)

வேட்டைப் புலப்புலையர் மேவாத வண்ணமனக்
காட்டைத் திருத்திக் கரைகாண்ப தெந்நாளோ. (௬)

உந்து பிறப்பிறப்பை யுற்றுவிடா தெந்தையருள்
வந்து பிறக்க மனமிறப்ப தெந்நாளோ. (௭)

புத்தியெனுந் தத்திப் பொறியரவின் வாய்த்தேரை
ஒத்துவிடா தெந்தையரு ளோங்குநா ளெந்நாளோ. (௮)

ஆங்கார மென்னுமத யானைவா யிற்கரும்பாய்
ஏங்காம லெந்தையரு ளெய்துநா ளெந்நாளோ. (௯)

சித்தமெனும் பௌவத் திரைக்கடலில் வாழ்துரும்பாய்
நித்தமலை யாதருணி னிற்குநா ளெந்நாளோ. (௧௦)

சத்தியா தத்துவங்க ளேழும் வெருண்டோடச்
சுத்தபர போகத்தைத் துய்க்குநா ளெந்நாளோ. (௧௧)

சுத்தவித்தை யேமுதலாத் தோன்றுமோ ரைந்துவகைத்
தத்துவத்தை நீங்கியருள் சாருநா ளெந்நாளோ. (௧௨)

பொல்லாத காயப் புலைத்தொழிலி னென்னறிவு
செல்லாம னன்னெறியிற் சேருநா ளெந்நாளோ. (௧௩)

அடிகளடிக் கீழ்க்குடியா யாம்வாழா வண்ணங்
குடிகெடுக்கும் பாழ்மடிமைக் கூறொழிவ தெந்நாளோ. (௧௪)

ஞான புறக்கருவி யாறுபத்து மற்றுளவும்
போனவழி யுங்கூடப் புன்முளைப்ப தெந்நாளோ. (௧௫)

அந்தகனைக் கெங்குமிரு ளானவா றுவறிவில்
வந்தவிருள் வேலை வடியுநா ளெந்நாளோ. (௧௬)

புன்மலத்தைச் சேர்ந்துமல போதம் பொருந்துதல்போய்
நின்மலத்தைச் சேர்ந்துமல நீங்குநா ளெந்நாளோ. (௧௭)

கண்டுகண்டுந் தேறாக் கலக்கமெல்லாந் தீர்வண்ணம்
பண்டைவினை வேரைப் பறிக்குநா ளெந்நாளோ. (கஅ)

பைங்கூழ் வினைதான் படுசாவி யாகவெமக்
கெங்கோன் கிரணவெயி லெய்துநா ளெந்நாளோ. (கக)

நுரித்தவித மாதியாற் கூடும்வினை யெல்லாம்
வறுத்தவித்தாம் வண்ணமருள் வந்திடுநா ளெந்நாளோ. (உ0)

சஞ்சிதமே யாதி சரக்கான முச்சேரும்
வெந்தபொரி யாகவருண் மேவுநா ளெந்நாளோ. (உக)

தேகமுத லன்காத் திரண்டொன் றாய் நின்றிலகு
மோகமிகு மாயை முடியுநா ளெந்நாளோ. (உஉ)

சத்த முதலாத் தழைத்திங் கெமையணைத்துஞ்
சுத்தமா மாயை தொடக்கறுவ தெந்நாளோ. (உ௩)

எம்மை வினையை யிறையையெம்பாற் காட்டாத
அம்மை திரோதை யகலுநா ளெந்நாளோ. (உ௪)

நித்திரையாய் வந்து நினைவழிக்குங் கேவலமாஞ்
சத்துருவை வெல்லுஞ் சமர்த்தறிவ தெந்நாளோ. (உ௫)

சன்னபின்ன லான சகலமெனுங் குப்பையிடை
முன்னவன்ஞா னக்கனலை மூட்டுநா ளெந்நாளோ. (உ௬)

மாயா விகார மலமொழிசுத் தாவத்தை
தோயா வருளைத் தொடருநா ளெந்நாளோ. (உ௭)

## தன் னுண்மை.

உடம்பறியு மென்னுமந்த வூழலெல்லாந் தீரத்
திடம்பெறவே யெம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ. (க)

செம்மையறி வாலறிந்து தேகாதிக் குள்ளிசைந்த
எம்மைப் புலப்படவே யாமறிவ தெந்நாளோ. (உ)

சூரியர்கள் சந்திரர்க டோன்றுச் சுயஞ்சோதி
பூரணதே யத்திற் பொருந்துநா ளெந்நாளோ. (எ)

தூன்றுமன வெப்பக் கலகமெலாந் தீரவருட்
டென்றல்வந்து வீசுவெளி சேருநா ளெந்நாளோ. (அ)

கட்டுநமன் செங்கோல் கடாவடிக்குங் கோலாக
வெட்ட வெளிப்பொருளை மேவுநா ளெந்நாளோ (கூ)

சாலக் கபாடத் தடைதீர வெம்பெருமான்
ஓலக்க மண்டபத்து ளோடுநா ளெந்நாளோ. (கo)

விண்ணவன்று ளென்னும் விரிநிலா மண்டபத்திற்
றண்ணீ ரருந்தித் தளர்வொழிவ தெந்நாளோ. (கக)

வெய்யபுலி பார்த்து விழித்திருந்த வல்லலறத்
துய்ய வருளிற் றுயிலுநா ளெந்நாளோ. (கஉ)

வெய்ய பிறவிவெயில் வெப்பமெலாம் விட்டகல
ஐயனடி நீழ லணையுநா ளெந்நாளோ. (கங)

வாதைப் பிறவி வளைகடலை நீந்தவையன்
பாதப் புணையிணையைப் பற்றுநா ளெந்நாளோ. (கச)

ஈனமில்லா மெய்ப்பொருளை யிம்மையிலே காணவெளி
ஞானமெனு மஞ்சனத்தை நான்பெறுவ தெந்நாளோ. (கரு)

எல்லா மிறந்தவிடத் தெந்தைநிறை வாம்வடிவைப்
புல்லாமற் புல்லிப் புணருநா ளெந்நாளோ. (கசு)

சடத்துளுயிர் போலெமக்குத் தாயுமிராய் ஞான
நடத்துமுறை கண்டுபணி நாம்விடுவ தெந்நாளோ. (கஎ)

எக்குணுமாந் துன்ப விருட்கடலை விட்டருளாம்
மிக்ககரை யேறி வெளிப்படுவ தெந்நாளோ. (கஅ)

## பொருளியல்பு.

கைவிளக்கின் பின்னேபோய்க் காண்பார்போன் மெய்ஞ்ஞான
மெய்விளக்கின் பின்னேபோய் மெய்காண்ப தெந்நாளோ. (க)

கேடில்பசு பாசமெல்லாங் கிழ்ப்படவுந் தானேமே
லாகிநின்ற சுகப்பொருளைக் கண்புறுவ தெந்நாளோ. (உ)

ஆணவத்தை நீக்கி யறிவூடே யைவகையாக்
காணலைத்தைக் கப்பாலைக் காணுநா ளெந்நாளோ. (ங)

நீக்கப் பிரியா நினைக்கமறக் கக்கூடாப்
போகமுவா வற்ற பொருளணைவ தெந்நாளோ. (ச)

ஆண்டருக்கு மெய்ப்பில்லைப்பா மாரமுதை யென்னகத்திற்
கண்டுகொண்டு நின்று களிக்குநா ளெந்நாளோ. (ரு)

காட்டின் திருவருளே கண்ணாகக் கண்டுபர
வீட்டின்ப மெய்ப்பொருளை மேவுநா ளெந்நாளோ. (சு)

நானென தன்மை நழுவியே யெவ்வுயிர்க்குந்
தானென வுண்மைதனைச் சாருநா ளெந்நாளோ. (எ)

சிந்தை மறந்து திருவருளாய் நிற்பவர்பால்
வந்தபொரு ளெம்மையுந்தான் வாழ்விப்ப தெந்நாளோ. (அ)

என்னுடைக்கு ளெண்ணெய்போ லெங்கும் வியாபகமாய்
உள்ளவொன்றை யுள்ளபடி யோருநா ளெந்நாளோ. (கூ)

அருவுருவ மெல்லா மகன்றதுவா யான
பொருளெமக்கு வந்து புலப்படுவ தெந்நாளோ. (க0)

ஆரணமுங் காணு வகண்டிதா காரபரி
பூரணம்வந் தெம்மைப் பொருந்துநா ளெந்நாளோ. (கக)

சுத்தோடுசித் தாகித் தயங்கியவா னந்தபரி
சுத்த வகண்டசிவந் தோன்றுநா ளெந்நாளோ. (கஉ)

எங்கெங்கும் பார்த்தாலு மின்புருவாய் நீக்கமின்றித்
தங்குந் தனிப்பொருளைச் சாருநா ளெந்நாளோ. (௧௩)

அடிமுடிகாட் டாதசுத்த வம்பரமாஞ் சோதிக்
கடுவெளிவந் தென்னைக் கலக்குநா ளெந்நாளோ. (௧௪)

ஒன்றனையுங் காட்டா வுளத்திருளைச் சூறையிட்டு
நின்றபரஞ் சோதியுட னிற்குநா ளெந்நாளோ. (௧௫)

எந்தச் சமய மிசைந்துமறி வூடறிவாய்
வந்தபொரு ளேபொருளா வாஞ்சிப்ப தெந்நாளோ. (௧௬)

எவ்வாறிங் குற்றுணர்ந்தா ரியாவ ரவர்தமக்கே
அவ்வாறாய் நின்றபொருட் கன்புவைப்ப தெந்நாளோ. (௧௭)

பெண்ணா ணலியெனவும் பேசாம லென்னறிவின்
கண்ணூடே நின்றவொன்றைக் காணுநா ளெந்நாளோ. (௧௮)

நினைப்பு மறப்புமற நின்றபரஞ் சோதி
தனைப்புலமா வென்னறிவிற் சந்திப்ப தெந்நாளோ. (௧௯)

## ஆனந்தவியல்பு.

பேச்சுமூச் சில்லாத பேரின்ப வெள்ளமுற்று
நீச்சுநிலை காணு மிற்குநா ளெந்நாளோ. (௧)

சித்தந் தெளிந்தோர் தெளிவிற் றெளிவான
சுத்த சுகக்கடலுட் டோயுநா ளெந்நாளோ. (௨)

சிற்றின்ப முண்டூழ் சிதையவனந் தங்கடல்போல்
முற்றின்ப வெள்ளமெனை மூடுநா ளெந்நாளோ. (௩)

எல்லையில்பே ரின்பமய மெப்படியென் றோர்தமக்குச்
சொல்லறியா வூமர்கள்போற் சொல்லுநா ளெந்நாளோ. (௪)

அண்டரண்ட கோடி யனைத்து முகாந்தவெள்ளங்
கொண்டதெனப் பேரின்பங் கூடுநா ளெந்நாளோ. (௫)

ஆதியந்த மில்லாத வாதி பராதிபெறுஞ்
சோதியின்பத் தூடே துலையுநா ளெந்நாளோ. (சு)

சாலோக மாதிசவுக்கியமும் விட்டநம்பால்
மேலான ஞானவின்ப மேவுநா ளெந்நாளோ. (எ)

தற்பரத்தி னுள்ளேயுஞ் சாலோக மாதிபினும்
பொற்பதித்தா னந்தம் பொருந்துநா ளெந்நாளோ. (அ)

உள்ளத்தி னுள்ளேதா னூறுஞ் சிவானந்த
வெள்ளந் துலைந்து விடாய்தீர்வ தெந்நாளோ. (கூ)

தெள்ளமுடன் முக்கனியுங் கற்கண்டுஞ் சீனியுமாய்
பன்னுமின்ப வாரமுதை வாய்மடுப்ப தெந்நாளோ. (க0)

மண்ணூ டெழுன்ற மயக்கமெல்லாந் தீர்ந்திடவும்
விண்ணூ டெழுந்தசுக மேவுநா ளெந்நாளோ. (கக)

கானற் சலம்போன்ற கட்டுழலைப் பொய்தீர
வானமுத வாவி மருவுநா ளெந்நாளோ. (கஉ)

தீங்கரும்பென் றுலினியா தின்றுலினிப்பனபோற்
பாங்குறும்பே ரின்பம் படைக்குநா ளெந்நாளோ. (கங)

புண்ணியபா வங்கள் பொருந்தாமெய் யன்பரெல்லாம்
நண்ணியபே ரின்பசுக நாமணைவ தெந்நாளோ. (கச)

## அன்புநிலைமை.

தினகரவி கண்ட சரோருகம்போ லென்னிதய
பக்கமலமுன் கண்டு விகசிப்ப தெந்நாளோ. (க)

கானமுகில் கண்ட மயூரபக்ஷி போலவையன்
ஞானநடங் கண்டு நடிக்குநா ளெந்நாளோ. (உ)

சந்திரனை நாடின் சகோரபக்ஷி போலறிவில்
வந்தபரஞ் சோதியையாம் வாஞ்சிப்ப தெந்நாளோ. (ங)

சூத்திரமெய்ப் புற்றகத்துக் குண்டலிப்பாம் பொன்றாட்டுஞ்
சித்தனையென் கண்ணுற் றெரிசிப்ப தெந்நாளோ. (ச)

சித்தரத்தே நின்றாடு மானந்தக் கூத்தனுக்கென்
சிந்தை திறைகொடுத்துச் சேவிப்ப தெந்நாளோ. (ரு)

கள்ளனிவ னென்றுமெள்ளக் கைவிடுதல் காரியமோ
வள்ளலே யென்று வருந்துநா ளெந்நாளோ. (சா)

விண்ணுடர் காணு விமலா பரஞ்சோதி
அண்ணுவா வாவென் றரற்றுநா ளெந்நாளோ. (எ)

ஏதேது செய்தாலு மென்பணிபோய் நின்பணியாம்
மூதேவா வென்று வருந்துநா ளெந்நாளோ. (அ)

பண்டுங்கா ணேனுன் பழம்பொருளே யின்றுமுனைக்
கண்டுங்கா ணேனெனவுங் கைகுவிப்ப தெந்நாளோ. (கூ)

போங்கேத மான புழுக்கமெல்லாந் தீரவின்பம்
எங்கேயெங் கேயென் றிரங்குநா ளெந்நாளோ. (க )

கடலின் மடை கண்டதுபோற் கண்ணீரா றாக
உடல்வெதும்பி மூர்ச்சித் துருகுநா ளெந்நாளோ. (கக)

புலர்ந்தேன் முகஞ்சருகாய்ப் போனே னிற்காண
அலந்தேனென் றேங்கியழுங்குநா ளெந்நாளோ. (கஉ)

புண்ணீர்மை யாளர் புலம்புமா போற்புலம்பிக்
கண்ணீருங் கம்பலையுங் காட்டுநா ளெந்நாளோ. (கங)

போற்றேனென் றாலுமென்னைப் புந்திசெய்யும் வேதனைக்கிங்
காற்றேனுற் றேனென் றரற்றுநா ளெந்நாளோ. (கச)

பொய்ம்முடங்கும் பூமிசில போட்டலறப் பூங்கமலன்
கைம்முடங்க நான்சனனக் கட்டறுவ தெந்நாளோ. (கரு)

நற்றுணைத்தைப் போன்றவஞ்சக் காரர்களைக் கோவாமல்
நற்றுணைத்தார் கைகோத்து நான்றிரிவ தெந்நாளோ. (கசு)

துட்டனேமா மாயச் சுழனீக்கி யந்தரமே
கிட்டினோமோ வென்று வியக்குநா ளெந்நாளோ. (கஎ)

## அன்பர்நெறி.

அத்துவா வெல்லா மடங்கச்சோ தித்தபடிச்
சித்துருவாய் நின்றோர் தெளிவறிவ தெந்நாளோ. (க)

மூச்சற்றுச் சிந்தை முயற்சியற்று மூதறிவாய்ப்
பேச்சற்றோர் பெற்றவொன்றைப் பெற்றிடுநா ளெந்நாளோ. (உ)

கோட்டாலை யான குணமிறந்த நிர்க்குணத்தோர்
தேட்டாலே தேடுபொருள் சேருநா ளெந்நாளோ. (ங)

கேடுற்றே பசுத்துவத்தைக் கேடிலா வானந்தம்
அடுத்தோ ரடுத்தபொருட் கார்வம்வைப்ப தெந்நாளோ. (ச)

சோற்கண்டா லோடுகின்ற காக்கைபோற் பொய்ம்மாயச்
சொறுகண்டா லோடுமன்பர் தோய்வறிவ தெந்நாளோ. (ரு)

மெய்த்தகுலங் கல்விபுனை வேடமெல்லா மோடவிட்ட
சித்தரொன்றுஞ் சேராச் செயலறிவ தெந்நாளோ. (சு)

சுற்றச் சமயக் குறும்படர்ந்து தற்போதம்
அற்றவர்கட் கற்றபொருட் கன்புவைப்ப தெந்நாளோ. (எ)

தர்க்கமிட்டுப் பாழாஞ் சமயக் குதர்க்கம்விட்டு
நிற்குமவர் கண்டவழி நேர்பெறுவ தெந்நாளோ. (அ)

சீரியவே தாந்தமுதன் மிக்க கலாந்தவரை
ஆறுமுணர்ந் தோருணர்வுக் கன்புவைப்ப தெந்நாளோ. (கூ)

கண்டவிட மெல்லாங் கடவுண்மய மென்றறிந்து
கொண்டநெஞ்சர் நேயநெஞ்சிற் கொண்டிருப்ப தெந்நாளோ. ( )

பாக்கியங்க ளெல்லாம் பழுத்து மனம்பழுத்தோர்
நோக்குந் திருக்கூத்தை நோக்குநா ளெந்நாளோ. (கசு)

செவ்வுயிருந் தன்னுயிர்போ லெண்ணுந் தபோதனர்கள்
செவ்வறிவை நாடிச் சிந்தைவைப்ப தெந்நாளோ. (க௨)

அறிஞருரை.

இருநிலனுய்த் தீயாகி யென்றதிருப் பாட்டின்
பெருநிலையைக் கண்டணைந்து பேச்சறுவ தெந்நாளோ. (க)

அற்றவர்கட் கற்றசிவ னுமென்ற வத்துவித
முற்றுமொழி கண்டருளின் மூழ்குநா ளெந்நாளோ. (௨)

தானென்னை முன்படைத்தா னென்ற தகவுரையை
நானென்று வுண்மைபெற்று நாமுணர்வ தெந்நாளோ. (௩)

என்னுடைய தோழனுமா யென்றதிருப் பாட்டின்
நன்னெறியைக் கண்டிரிமை நாஞ்செய்வ தெந்நாளோ. (௪)

ஆருடனே சேரு மறிவென்ற வவ்வுரையைத்
தேரும் படிக்கருடான் சேருநா ளெந்நாளோ. (௫)

உன்னிலுன்னு மென்ற வுறுமொழியா லென்னிதயந்
தன்னிலுன்னி நன்னெறியைச் சாருநா ளெந்நாளோ. (௬)

நினைப்பறவே தானினைந்தே னென்றநிலை நாடி
அனைத்துமா மப்பொருளி லாழுநா ளெந்நாளோ. (௭)

சென்றுசென் றேபனுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாகி
நின்றுவிடு மென்றநெறி நிற்குநா ளெந்நாளோ. (௮)

ஆதியந்த மில்லா வரியபரஞ் சோதியென்ற
நீதிமொழி கண்டதுவாய் நிற்குநா ளெந்நாளோ. (௯)

பிறிதொன்றி லாசையின்றிப் பெற்றிருந்தே னென்ற
நெறியுடையான் சொல்லினிலை நிற்குநா ளெந்நாளோ. (க0)

நிரையற்ற நீர்போற் றெளியவெனத் தேர்ந்த
உரையற்றி யுற்றங் கொடுங்குநா ளெந்நாளோ. (கக)

அறியா வறிவி லவிழ்ந்தேற வென்ற
நெறியா முறையுணர்ந்து நிற்குநா ளெந்நாளோ. (கஉ)

எனக்குனீ யென்று மியற்கையாப் பின்னும்
உனக்குநா னென்ற வுறுதிகொள்வ தெந்நாளோ. (கங)

அறிவை யறிவதுவே யாகும் பொருளென்
றறுதிசொன்ன வுண்மையினை யோருநா ளெந்நாளோ. (கச)

## நிற்குநிலை.

பண்ணினிசை போலப் பரமன்பா னின்றதிறன்
எண்ணி யருளாகி யிருக்குநா ளெந்நாளோ. (க)

அறிவோ டறியாமை யற்றறிவி னூடே
குறியி லறிவுவந்து கூடுநா ளெந்நாளோ. (உ)

சொல்லான் மனத்தாற் றொடராச்சம் பூரணத்தில்
நில்லா நிலையாய் நிலைநிற்ப தெந்நாளோ. (ங)

செங்கதிரின் முன்மதியந் தேசடங்கி நின்றிடல்போல்
அங்கணனார் தாளி லடங்குநா ளெந்நாளோ. (ச)

வாறா டடங்கும் வளிபோல வின்புருவாஞ்
சேறா டடங்குங் குறிப்பறிவ தெந்நாளோ. (ரு)

செப்பரிய தண்கருணைச் சிற்சுகனார் பூரணத்தில்
அப்பினிடை யுப்பா யணையுநா ளெந்நாளோ. (சு)

தூயவறி வான சுகரூப சோதிதன்பாற்
றீயிரும் பென்னத் திகழுநா ளெந்நாளோ. (எ)

தீதணையாக் கர்ப்பூர தீபமென நானகண்ட
சோதியுட னொன்றித் துரிசறுவ தெந்நாளோ. (அ)

ஆராருங் காணாத வற்புதனார் பொற்படிக்கீழ்
நீரார் நிழல்போ னிலாவுநா ளெந்நாளோ. (கூ)

எட்டத் தொலையாத வெந்தைபிரான் சன்னிதியிற்
பட்டப் பகல்விளக்காய்ப் பண்புறுவ தெந்நாளோ. (௧0)

கருப்புவட்டை வாய்மடுத்துக் கண்டார்நாப் போல
விருப்புவட்டா வின்புருவை மேவுநா ளெந்நாளோ. (௧௧)

துச்சப் புலனாற் சுழலாமற் றண்ணருளால்
உச்சிக் கதிர்ப்படிக மொவ்வுநா ளெந்நாளோ. (௧௨)

இம்மா நிலத்தி லிருந்தபடி யேயிருந்து
சும்மா வருளைத் தொடருநா ளெந்நாளோ. (௧௩)

தானவனாந் தன்மையெய்தித் தண்டமென வண்டமெல்லாம்
ஞானமத யானை நடத்துநா ளெந்நாளோ. (௧௪)

ஒன்றிரண்டு மில்லதுவா யொன்றிரண்டு முள்ளதுவாய்
நின்ற சமத்துநிலை நேர்பெறுவ தெந்நாளோ. (௧௫)

பாசமக லாமற் பதியிற் கலவாமல்
மாசில் சமத்துமுத்தி வாய்க்குநா ளெந்நாளோ. (௧௬)

சிற்றறிவு மெள்ளச் சிதைந்தெம்மான் பேரறிவை
உற்றறியா வண்ணமறிந் தோங்குநா ளெந்நாளோ. (௧௭)

தந்திரத்தை மந்திரத்தைச் சாரினவை யாமறிவென்
றெந்தையுணர் வேவடிவா யெய்துநா ளெந்நாளோ. (௧௮)

போக்குவர வற்றவெளி போனிறைந்த போதநிலை
நீக்கமறக் கூடி நினைப்பறுவ தெந்நாளோ. (௧௯)

காண்பானுங் காட்டுவதுங் காட்சியுமாய் நின்றவந்த
வீண்பாவம் போயதுவாய் மேவுநா ளெந்நாளோ. (௨0)

வாராதே வருவாய் மாயாதே யெங்கோவை
நாடாதே நாடி நலம்பெறுவ தெந்நாளோ. (உக)

ஆடலையே காட்டியெம தாடலொழித் தாண்டான்பொற்
றாடலைமேற் சூடித் தழைக்குநா ளெந்நாளோ. (உஉ)

மேலொளியிற் றில்லாத வித்தகனார் தம்முடனே
பாலொடுநீர் போற்கலந்து பண்புறுவ தெந்நாளோ. (உரு)

அரிய தறிந்தெமையா ளண்ணலைநா மாகக்
குறியாத வண்ணங் குறிக்குநா ளெந்நாளோ. (உச)

ஓதயல் மந்திரமு முன்றும னம்பரனைப்
பாதயற் பார்த்துப் பழகுநா ளெந்நாளோ. (உரு)

என்பற்று மென்றே றிறவுபற்றும் பூரணன்பால்
தன்பற்றுங் கண்டோன் மருவுநா ளெந்நாளோ. (உசா)

ஆண்டான் மவுனி யளித்தவறி வாலறிவைத்
தாண்டாமற் றாண்டித் துலங்குநா ளெந்நாளோ. (உஎ)

அனைத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தனதுவிதே டத்துவிதஞ் சாருநா ளெந்நாளோ. (உஅ)

## நிலைபிரிந்தோர்கூடுதற்குபாயம்.

கன்மநெறி தப்பிற் கடுநரகென் றெந்நாளும்
நன்மைதரு ஞானநெறி நாமணைவ தெந்நாளோ. (க)

ஞானநெறி தானே நழுவிடினு முப்பதத்துள்
ஆனமுத்தி நல்குமென வன்புறுவ தெந்நாளோ. (உ)

சன்மார்க்க மான பலவடிபட் டேனுமொரு
சன்மார்க்கங் கண்டு துலங்குநா ளெந்நாளோ. (ரு)

அத்துவித மென்ற வசனச்சொற் கண்டுணர்ந்து
சுத்த சிவத்தைத் தொடருநா ளெந்நாளோ. (ச)

கேட்டன்முத ஞன்காலே கேடிலா நாற்பதமும்
வாட்ட மறவெமக்கு வாய்க்குநா ளெந்நாளோ. (ரு)

என்னதியா னென்பதற வெவ்விடமு மென்ஞசான்
சன்னிதியாக் கண்டுநிட்டை சாதிப்ப தெந்நாளோ. (சு)

நாம்பிரம மென்ருன்டுவேயொன் றுண்டாமாற்
றேம்பியெல்லா மொன்ருய்த் திகழுநா ளெந்நாளோ. (எ)

மூச்சகமே யாதி முழுதுமகண் டாகார
சச்சிதா னந்தசிவந் தானென்ப தெந்நாளோ! (அ)

எவ்வடிவும் பூரணமா மெந்தையுரு வென்றிசைந்த
அவ்வடிவுக் குள்ளே யடங்குநா ளெந்நாளோ. (கூ)

சிந்தித்த தெல்லாஞ் சிவபூ ரணமாக
வந்தித்து வாழ்த்தி வணங்குநா ளெந்நாளோ. (க0)

தூங்கியபார் விண்ணுதி தானேஞா ஞக்கினியாய்
ஓங்கு மியோகவுணர் வுற்றிடுநா ளெந்நாளோ. (கக)

ஆசனமூர்த் தங்க ளறவகண்டா காரசிவ
பூசைசெய வாசை பொருந்துநா ளெந்நாளோ. (கஉ)

அஞ்செழுத்தி னுண்மை யதுவான வப்பொருளே
நெஞ்சழுத்தி யொன்ருகி நிற்குநா ளெந்நாளோ. (கங)

அவ்வுயிர்போ லெவ்வுயிரு மானபிரான் றன்னடிமை
எவ்வுயிரு மென்றுபணி யாஞ்செய்வ தெந்நாளோ. (கச)

தேசிகர்கோ ஞன திறன்மவுனி நந்தமக்கு
வாசி கொடுக்க மகிழுநா ளெந்நாளோ. (கரு)

திருலிங்க சங்கமமாக் கொண்ட திரு மேனி
அருண்மயமென் றன்புற் றருள்பெறுவ தெந்நாளோ. (கசு)

---

# காண்பேனோவென்கண்ணி.

சிந்திக்குந் தோறுந் தெவிட்டா வமுதேயென்
புந்திக்கு ணீதான் பொருந்திடவுங் காண்பேனோ. (க)

கேவலத்தி னுன்கிடந்து கீழ்ப்படா தின்பவருட்
காவலன்பா லொன்றிக் கலந்திடவுங் காண்பேனோ. (உ)

சூரியங் கடந்தவொன்றே தூவெளியாய் நின்ற
பெரியநிறை வேயுனைநான் பெற்றிடவுங் காண்பேனோ. (ங)

பாசற்ற வன்பர்நெஞ்சே மாருத பெட்டகமாத்
தேசுற்ற மாமணிநின் றேசினையுங் காண்பேனோ. (ச)

மாயா விகார மலமகல வெந்தைபிரான்
நேயானு பூதி நிலைபெறவுங் காண்பேனோ. (ரு)

பொய்யுலகம் பொய்யுறவும் பொய்யுடலும் பொய்யெனவே
மெய்யறிவே மெய்யெனவே மெய்யுடனே காண்பேனோ. (சு)

மாலற்ற பட்டமென மாயா மனப்படலங்
காலற்று வீழவுமுக் கண்ணுடையாய் காண்பேனோ. (எ)

உள்ளும் புறம்பு மொருபடித்தாய் நின்றுசுகங்
கொள்ளும் படிக்கிறைநீ கூட்டிடவுங் காண்பேனோ. (அ)

காட்டுகின்ற முக்கட் கரும்பே கனியேயென்
ஆட்டமெல்லாந் தீரவுன தாடலையுங் காண்பேனோ. (கூ)

தூங்காமற் றூங்கிச் சுகப்பெருமா னின்னிறைவில்
நீங்காம னிற்கு நிலைபெறவுங் காண்பேனோ. (க0)

வாதனூ ராளிதனை வான்கருணை யால்விழுங்கும்
போதனூ ரேறேநின் பொன்னடியுங் காண்பேனோ. (கக)

சாட்டையிலாப் பம்பரம்போ லாடுஞ் சடசால
நாட்டமற வெந்தைசுத்த ஞானவெளி காண்பேனோ. (கஉ)

மன்றாடும் வாழ்வே மரகதஞ்சேர் மாணிக்கக்
குன்றேநின் றாட்கீழ்க் குடிபெறவுங் காண்பேனோ. (கங)

பொய்யென் றறிந்துமெமைப் போகவொட்டா தையவிந்த
வையங் கனமயக்க மாற்றிடவுங் காண்பேனோ. (கச)

தாயினும் நல்ல தயாளுவே நின்னையுன்னித்
தீயின்மெழு கொத்துருகுஞ் சிந்தைவரக் காண்பேனோ. (கரு)

என்செயினு மென்பெறினு மென்னிறைவா பேழையன்யான்
நின்செயலென் றுன்னு நினைவுவரக் காண்பேனோ. (கசு)

எள்ளத் தனையு மிரக்கமிலா வன்பாவி
உள்ளத்து மெந்தை யுலாவிடவுங் காண்பேனோ. (கஎ)

வஞ்சகத்துக் காலயமாம் வல்வினையே னாகெடுவேன்
நெஞ்சகத்தி லையாநீ நேர்பெறவுங் காண்பேனோ. (கஅ)

தொல்லைப் பிறவித் துயர்கெடவு மெந்தைபிரான்
மல்லற் கருணை வழங்கிடவுங் காண்பேனோ. (க௯)

வாளாருங் கண்ணார் மயற்கடலில் வாழ்ந்தேன்சற்
றாளாக வெந்தை யருள்செயவுங் காண்பேனோ. (உ௦)

பஞ்சாய்ப் பறக்குநெஞ்சப் பாவியைநீ கூவியையா
அஞ்சாதே யென்றின் னருள்செயவுங் காண்பேனோ. (உக)

ஆடுகறங் காகி யலைமந் துழன்றுமனம்
வாடுமெனை யையாநீ வாவெனவுங் காண்பேனோ. (உஉ)

சிட்டர்க் கெளிய சிவனேயோ தீவினையேன்
மட்டற்ற வாசை மயக்கறவுங் காண்பேனோ. (உங)

உண்ணின் றுணர்த்து முலப்பிலா வொன்றேநின்
தண்ணென்ற சாந்தவருள் சார்ந்திடவுங் காண்பேனோ. (உச)

ஓடுங் கருத்தொடுங்க வுள்ளுணர்வு தோன்றநினைக்
கூடும் படிக்கிறைநீ கூட்டிடவுங் காண்பேனோ. (உரு)

வாக்கான் மனத்தான் மதிப்பரியாய் நின்னருளை
நோக்காம னோக்கிநிற்கு நுண்ணறிவு காண்பேனோ. (உசு)

இவ்வுடம்பு நீங்குமுனே யெந்தாய்கே ளின்னருளாம்
அவ்வுடம்புக் குள்ளே யவதரிக்கக் காண்பேனோ. (உஎ)

நித்தமா யொன்றாய் நிரஞ்சனமாய் நிர்க்குணமாஞ்
சுத்தவெளி நீவெளியாய்த் தோன்றிடவுங் காண்பேனோ. (உஅ)

கண்ணிறைந்த மோனக் கருத்தேயென் கண்ணேயென்
உண்ணிறைந்த மாயை யொழிந்திடவுங் காண்பேனோ. (உகூ)

அத்தா விமலா வருளாளா வானந்த
சித்தா வெனக்குனருள் செய்திடவுங் காண்பேனோ. (௩௦)

வீணே பிறந்திறந்து வேசற்றே னாசையறக்
காணே னிறைநின் கருணைபெறக் காண்பேனோ. (௩க)

சட்டையொத்த விவ்வுடலைத் தள்ளுமுன்னே நான்சகச
நிட்டையைப்பெற் றையா நிருவிகற்பங் காண்பேனோ. (௩உ)

எல்லாந் தெரியு மிறைவாவென் னல்லலெல்லாஞ்
சொல்லாமு னீதான் றெருகுத்திரங்கக் காண்பேனோ. (௩௩)

அண்டபகி ரண்ட மனைத்து மொருபடித்தாக்
கண்டவர்கள் கண்டதிருக் காட்சியையுங் காண்பேனோ. (௩ச)

ஊனிருந்த காய முடனிருப்ப வெந்தைநின்பால்
வானிருந்த தென்னவுநான் வந்திருக்கக் காண்பேனோ. (௩ரு)

நினையத் தனையுந் தெளிவறியாப் பாவியேன்
நினைவிற் பரம்பொருணீ நேர்பெறவுங் காண்பேனோ. (௩சு)

துன்பமெனுந் திட்டனைத் தாஞ் சூறையிட வையாவே
இன்பவெள்ளம் வந்திங் கெதிர்ப்படவுங் காண்பேனோ. (௩௭)

திருச்சிற்றம்பலம்.

---

# ஆகாதோவென் கண்ணி.

கல்லாத நெஞ்சங் கரைந்துருக வெத்தொழிற்கும்
வல்லாய்நின் னின்பம் வழங்கினு லாகாதோ. (௧)

என்னை யறிய வெனக்கறிவாய் நின்றருணின்
றன்னையறிந் தின்பநலஞ் சாரவைத்தா லாகாதோ. (௨)

பொய்ம்மயமே யான புரைதீர வெந்தையின்ப
மெய்ம்மயம்வந் தென்னை விழுங்கவைத்தா லாகாதோ. (௩)

மட்டிலாச் சிற்சுகமாம் வாழ்வேநின் னின்பமயஞ்
சிட்டர்போல் யானருந்தித் தேக்கவைத்தா லாகாதோ. (௪)

அத்தாநின் பொற்று ளடிக்கே யநுதினமும்
பித்தாக்கி யின்பம் பெருகவைத்தா லாகாதோ. (௫)

மெல்லியலார் மோக விழற்கிறைப்பே னையாநின்
எல்லையிலா னந்தநல மிச்சித்தா லாகாதோ. (௬)

சுட்டழகா யெண்ணுமனஞ் சூறையிட்டா னந்தமயக்
கட்டழகா நின்னைக் கலக்கவைத்தா லாகாதோ. (௭)

சோதியே நந்தாச் சுகவடிவே தூவெளியே
ஆதியே நின்னை யறியவைத்தா லாகாதோ. (௮)

நேசஞ் சிறிதுமிலே னின்மலனே நின்னடிக்கே
வாசஞ் செயவிரங்கி வாவென்று லாகாதோ. (௯)

என்னறிவுக் குள்ளே யிருந்ததுபோ லையாவே
இன்னறிவு னின்னுடன்யா னிற்கவைத்தா லாகாதோ. (க0)

ஆதிப் பிரானேயென் னல்ல விருளகலச்
சோதிப்ர காசமயந் தோன்றுவித்தா லாகாதோ. (கக)

ஆசைச் சுழற்கடலி லாழாம லையாநின்
நேசப் புணைத்தா னிறுத்தினா லாகாதோ. (கஉ)

பாசத்த ளைகளெல்லாம் பஞ்சாகச் செஞ்செவே
ஈசவெனை வாவென் றிரங்கினா லாகாதோ. (கங)

தாயாவுள் ளன்பா யுருகிவாய் விட்டரற்றிச்
சேயாகி யெந்தைநின்னைச் சேரவைத்தா லாகாதோ. (கச)

ஆதியாம் வாழ்வா யகண்டிதமாய் நின்றபரஞ்
சோதிநீ யென்னைத் தொழும்பனென்றா லாகாதோ. (கரு)

விண்ணாக் கண்ட விழிபோற் பரஞ்சோதி
கண்ணா நின்னிறைவைக் காணவைத்தா லாகாதோ. (கசா)

சோராமற் சேர்ந்துநின்று சின்மயனே நின்மயத்தைப்
பாராமற் பாரெனநீ பக்ஷம்வைத்தா லாகாதோ. (கஎ)

கண்ணாடி போலவெல்லாங் காட்டுநின் திருவருளை
உண்ணாடி யையயா வுருகவைத்தா லாகாதோ. (கஅ)

புல்லிருள் கால்வாங்க மூதறிவு தோன்றவருட்
கோலம்வெளி யாகவெந்தை கூடுவித்தா லாகாதோ. (ககூ)

சாற்றரிய வின்பவெள்ளந் தாக்குமதி னீமுனைக்கில்
ஊற்றமுறு மென்னவதி லுண்மைசொன்னா லாகாதோ. (உ0)

கையுங் குவித்திரண்டு கண்ணருவி பெய்யவருள்
ஐயநின்றாட் கீழே யடிமைநின்றா லாகாதோ. (உக)

---

# இல்லையோவென்கண்ணி.

ஏதுந் தெரியா தெனைமறைத்த வல்லிருளை
நாதநீ நீக்கவொரு ஞானவிளக் கில்லையோ. (க)

பணியற்று நின்று பதைப்பறவென் கண்ணுண்
மணியொத்த சோதியின்ப வாரியெனக் கில்லையோ. (உ)

எம்மா லறிவதற வெம்பெருமான் யாதுமின்றிச்
சும்மா விருக்கவொரு சூத்திரந்தா னில்லையோ. (ங)

நாய்க்குங் கடையானே னுந்தாநின் னின்பமயம்
வாய்க்கும் படியினியோர் மந்திரந்தா னில்லையோ. (ச)

ஊனாக நிற்கு முணர்வைமறந் தையாநீ
தானாக நிற்கவொரு தந்திரந்தா னில்லையோ. (ரு)

அல்லும் பகலு மகண்டவடி வேயுனைநான்
புல்லும் படியெனக்கோர் போதனைதா னில்லையோ. (சா)

# வேண்டாவோவென்கண்ணி.

கண்டவடி வெல்லாநின் காட்சியென்றே பாவித்துப்
பண்டுமின்று நின்றவென்னைப் பார்த்திரங்க வேண்டாவோ. (க)

வாதனையோ டாடு மலைப்பாம்பு மாயவொரு
போதனைதந் தையா புலப்படுத்த வேண்டாவோ. (உ)

தன்னை யறியத் தனியறிவாய் நின்றவுனை
நின்னையறிந் தென்னறிவை நீங்கிநிற்க வேண்டாவோ. (ங)

அள்ளக் குறையா வகண்டிதா னந்தமெனும்
வெள்ளமெனக் கையா வெளிப்படுத்த வேண்டாவோ. (ச)

அண்டனே யண்ட ரமுதேயென் ஞருயிரே
தொண்டனேற் கின்பந் தொகுத்திரங்க வேண்டாவோ. (௫)

பாராதே நின்று பதையாதே சும்மாதான்
வாரா யெனவும் வழிகாட்ட வேண்டாவோ. (௬)

திருச்சிற்றம்பலம்.

---

# நல்லறிவேயென்கண்ணி.

எண்ணிறைந்த மேன்மைபடைத் தெவ்வுயிர்க்கு மவ்வுயிராய்க்
கண்ணிறைந்த சோதியைநாங் காணவா நல்லறிவே. (௧)

சித்தான நாமென் சடத்தைநா மென்னவென்றுஞ்
சுத்தான வுண்மைதனைச் சாரவா நல்லறிவே. (௨)

அங்குமிங்கு மெங்குநிறை யற்புதனார் பொற்பறிந்து
பங்கயத்துள் வண்டாய்ப் பயன்பெறவா நல்லறிவே. (௩)

கொன்றசோ றென்னவிந்தக் குவிளிவாழ் வத்தனையுந்
தோன்ற வருள்வெளியிற் றோன்றவா நல்லறிவே. (௪)

திருச்சிற்றம்பலம்.

---

# பலவகைக்கண்ணி.

என்னரசே கேட்டிலையோ வென்செயலோ வேதுமிலை
தன்னரசு நாடாகித் தத்துவங்கூத் தாடியதே. (௧)

பண்டொருகா னின்பாற் பழக்கமுண்டோ வெந்தைநினைக்
கண்டொருகாற் போற்றக் கருத்துங் கருதியதே. (௨)

கண்டனவே காணாமன்றிங் காணாவோ காணாவென்
கொண்டறிவே னெந்தைநினைக் கூடுங் குறிப்பினையே. (௩)

கல்லா லடியில்வளர் கற்பகமே யென்னளவோ
பொல்லா வினைக்குப் பொருத்தந்தான் சொல்லாயே. (௪)

தப்பிதமொன் றின்றியது தானாக நிற்கவுண்மை
செப்பியது மல்லாலென் சென்னியது தொட்டனையே. (௫)

மாசான நெஞ்சினவன் வஞ்சனென்றோ வாய்திறந்து
பேசா மவுனம் பெருமான் படைத்ததுவே. (௬)

கற்பதெல்லாங் கற்றேமுக் கண்ணுடையாய் நின்பணியாய்
நிற்பதுகற் றன்றோ நிருவிகற்ப மாவதுவே. (௭)

முன்னளவில் கன்ம முபன்றா னிவனென்றோ
என்னளவி லெந்தா யிரங்கா திருந்ததுவே. (௮)

நெஞ்சகம்வே றாகி நினைக்கூட வெண்ணுகின்ற
வஞ்சகனுக் கின்பமெந்தாய் வாய்க்குமா றெவ்வாறே. (௯)

பள்ளங்க டோறும் பரந்தபுனல் போலுலகில்
உள்ளம் பரந்தா லுடையாயென் செய்வேனே. (௧0)

முன்னினைக்கப் பின்மறைக்கு மூடவிரு ளாகெடுவேன்
என்னினைக்க வென்மறக்க வெந்தை பெருமானே. (௧௧)

வல்லாளா மோனாநின் வான்கருணை யென்னிடத்தே
இல்லாதே போனா னெவ்வண்ண முய்வேனே. (௧௨)

வாக்கு மனமு மவுனமுற வெந்தைநின்னை
நோக்கு மவுனமிந்த நூலறிவி லுண்டாமோ. (௧௩)

ஒன்றாய்ப் பலவா யுலகமெங்குந் தானேயாய்
நின்றாயை யாவெனீ நீங்கற் கெளிதாமோ. (௧௪)

ஆவித் துணையே யருமருந்தே யென்றனை நீ
கூவியழைத் தின்பங் கொடுத்தாற் குறைவாமோ. (௧௫)

எத்தனையோ நின்விளையாட் டெந்தாய்கே ளிவ்வளவென்
றத்தனையு மென்று லறியுந் தரமாமோ. (௧௬)

தேடுவார் தேடுஞ் சிவனேயோ நின்றிருத்தாள்
கூடுவான் பட்டதுயர் கூறற் கெளிதாமோ. (௧௭)

பற்றினைப் பற்றுமெந்தாய் பற்றுவிட்டாற் கேவலத்தில்
உற்றுவிடு நெஞ்சமுனை யொன்றிநிற்ப தெப்படியோ. (௧௮)

ஒப்பிலா வொன்றேநின் னுண்மையொன்றுங் காட்டாமற்
பொய்ப்புவியை மெய்போற் புதுக்கிவைத்த தென்னேயோ. ()

காலால் வழிநடவுங் காலத்தே கண்முளைத்தாற்
போலே யெனதறிவிற் போந்தறிவாய் நில்லாயோ. (௨0)

தன்னரசு நாடாஞ் சடசால பூமிமிசை
என்னரசே யென்னை யிறையாக நாட்டினையோ. (௨௧)

திங்களமு தாநின் றிருவாக்கை விட்டரசே
பொங்கு விடமனைய பொய்ந்நூல் புலம்புவனே. (௨௨)

உன்னவுன்ன வென்னையெடுத் துள்விழுங்கு நின்னிறைவை
இன்னமின்னங் காணமலெந்தாய் சுழல்வேனே. (௨௩)

ஆரா வமுதனைய வானந்த வாரியென்பாற்
றூரமெனயாநீ தள்ளிவிட வந்ததென்னே. (௨௪)

திருச்சிற்றம்பலம்.

---

# நின்ற நிலை.

நின்றநிலை யேநிலையா வைத்தானந்த
நிலைதானே நிருவிகற்ப நிலையுமாகி
என்றுமழி யாதவின்ப வெள்ளந்தேக்கி
யிருக்கவெனைத் தொடர்ந்துதொடர்ந் திழுக்குமன்றோ. (க)

இருக்காதி மறைமுடிவுஞ் சிவாகமாதி
யிதயமுங்கை காட்டெனவே யிதயத்துள்ளே
ஒருக்காலே யுணர்ந்தவர்கட் கெக்காலுந்தா
னொழியாத வின்பவெள்ள முலவாநிற்கும். (உ)

கற்றதுங்கேட் டதுந்தானே யேதுக்காகக்
கடபடமென் றுருட்டுதற்கோ கல்லாலெம்மான்
குற்றமறக் கைகாட்டுங் கருத்தைக்கண்டு
குணங்குறியற் றின்பநிட்டை கூடவன்றோ. (௩)

# பாடுகின்றபனுவல்.

பாடுகின்ற பனுவலோர்கள், தேடுகின்ற செல்வமே
நாடுகின்ற ஞானமன்றில், ஆடுகின்ற வழகனே. (க)

அத்தனென்ற நின்னையே, பத்திசெய்து பனுவலாற்
பித்தனின்று பேசவே, வைத்ததென்ன வாரமே. (உ)

சிந்தையன்பு சேரவே, நைந்துநின்னை நாடினேன்
வந்துவந்து வின்பமே, தந்திரங்கு தாணுவே. (௩)

அண்டரண்டம் யாவுநீ, கொண்டுநின்ற கோலமே
தொண்டர்கண்டு சொரிகணீர், கண்டநெஞ்சு கரையுமே. (ச)

அன்னைபோல வருண்மிகுத்து, மன்னுஞான வரதனே
என்னையே யெனக்களித்த, நின்னையானு நினைவனே. (௫)

# ஆனந்தக் களிப்பு.

சங்கர சங்கர சம்பு - சிவ - சங்கர சங்கர சங்கர சம்பு.

ஆதி பராபர மாகி - யெனக் - கானந்த மாயறி வாய்நின் றருளுஞ், சோதி மவுனியாய்த் தோன்றி ; அவன் - சொல்லாத வார்த்தையைச் சொன்னாண்டி தோழி. சங்கர (௧)

சொன்னசொல் லேதென்று சொல்வேன் - என்னைச் - சூதாய்த் தனிக்கவே சும்மா விருத்தி, முன்னிலை யேதுமில் லாதே - சுக - முற்றச்செய் தேயென்னைப் பற்றிக்கொண் டாண்டி. சங்கர()

பற்றிய பற்றற வுள்ளே - தன்னைப் - பற்றச்சொன் னான்பற்றிப் பார்த்த விடத்தே, பெற்றதை யேதென்று சொல்வேன் - சற்றும் பேசாத காரியம் பேசினான் றோழி சங்கர (௩)

பேசா விடும்பைகள் பேசிச் - சுற்றப் - பேயங்க ளாகிப் பிதற்றித் திரிந்தேன், ஆசா பிசாசைத் துரத்தி - ஐயன் - அடியினைக் கீழே யடக்கிக்கொண் டாண்டி. சங்கர (௪)

அடக்கிப் புலனைப் பிரித்தே - அவ - னாகிய மேனியி னன்னை வளர்த்தேன், மடக்கிக்கொண் டானென்னைத் தன்னுட்-சற்றும்-வாய்பேசா வண்ண மரபுஞ்செய் தாண்டி. சங்கர()

பாரைக் கெடுத்தனன் கெட்டேன் - இத்தை - வாய்விட்டுச் சொல்லிடின் வாழ்வெனக் கில்லை, காவு புருஷனு மல்லன் - என்னைக் - காக்குந் தலைமைக் கடவுள்காண் மின்னே. சங்கர (௬)

உடலின் மடைவிண்ட தென்ன - இரு - கண்களு மானந்தக் கண்ணீர் சொரிய, உடலும் புளகித மாக - என - துள்ள முருக வுபாயஞ்செய் தாண்டி. சங்கர (௭)

உள்ளது மில்லது மாய்முன் - உற்ற - உணர்வது வாய்நின் ஞானங்கண்ட தெல்லாந், தள்ளெனச் சொல்லியென் னையன் - என்னைத்-தானாக்கிக் கொண்ட சமர்த்தைப்பார் தோழி. சங்கர()

பாராதி பூதநீ யல்லே - உன்னிப் - பாரிந் திரியங் கரணநீ யல்லே, ஆரா வுணர்வுநீ யென்றான் - ஐயன் - அன்பா யுரைத்த சொல் லானந்தந் தோழி. சங்கர (௯)

அன்பருக் கன்பான மெய்யன் - ஐயன் - ஆனந்தமோன னருட்குருநாதன், தன்பாதஞ் சென்னியில் வைத்தான் - என்னைத் - தானறிந் தேன்மனந் தானிறந் தேனே. சங்கர (௧0)

இறப்பும் பிறப்பும் பொருந்த - எனக் - கெவ்வண்ணம் வந்த தென் றெண்ணியான் பார்க்கின், மறப்பு நினைப்புமாய் நின்ற - வஞ்ச - மாயா மனத்தால் வளர்ந்தது தோழி. சங்கர (௧௧)

மனதேகல் லாலெனக் கன்றே - தெய்வ - மௌன குருவாகி வந்துகை காட்டி, எனதாம் பணியற மாற்றி - அவன் - இன்னருள் வெள்ளத் திருத்திவைத் தாண்டி. சங்கர (௧௨)

அருளா லெவையும்பா ரென்றான் - அத்தை - அறியாதே சுட்டியென் னறிவாலே பார்த்தேன், இருளான பொருள்கண்ட தல்லாற் - கண்ட என்னையுங் கண்டில னென்னேடி தோழி. சங்கர (௧௩)

என்னையுந் தன்னையும் வேறா - உள்ளத் - தெண்ணாத வண்ணமிரண்டற நிற்கச், சொன்னது மோவொரு சொல்லே - அந்தச் - சொல்லால் விளைந்த சுகத்தையென் சொல்வேன். சங்கர (௧௪)

விளையுஞ் சிவானந்த பூமி - அந்த - வெட்ட வெளிநண்ணித் துட்ட விருளாங், களையைக் களைந்துபின் பார்த்தேன் - ஐயன் - களையன்றி வேறொன்றுங் கண்டிலேன் றோழி. சங்கர (௧௫)

கண்டார் நகைப்புயிர் வாழ்க்கை - இரு - கண்காண நீங்கவுங் கண்டோந் துயிறான், கொண்டார்போற் போனாலும் போகும் - இதிற் - குணமேது நலமேது கூறாய்நீ தோழி. சங்கர ()

நானேது மறியாத வென்னைச் - சுத்த - நாதாந்த மோனமா
நாட்டந்தந் தேசஞ், சலமேது மில்லாம லெல்லாம் - வல்லான் -
றானாயென் றலைமீது தாக்கினான்றோழி. சங்கர (கஎ)

தாக்குநல் லானந்த சோதி - அணு - தன்னிற் சிறிய வெனை
த்தன் னருளாற், போக்கு வரவற் றிருக்குஞ் - சுத்த - பூரண
மாக்கினான் புதுமைகாண் மின்னே. சங்கர (கஅ)

ஆக்கி யளித்துத் துடைக்குந் - தொழில் - அத்தனை வைத்
துமெள் ளத்தனை யேனுந், தாக்கற் நிற்குஞ் சமர்த்தன் - உள்ள-
சாந்தியைச் சிந்திக்கத் தக்கது தோழி. சங்கர (கக)

சிந்தை பிறந்தது மாங்கே - அந்தச் - சிந்தை யிறந்து தெளி
ந்தது மாங்கே, எந்த நிலைகளு மாங்கே - கண்ட - யான்றா னிர
ண்டற் றிருந்தது மாங்கே. சங்கர (உ0)

ஆங்கென்று மீங்கென்று முண்டோ - சச்சி - தானந்தசோதி
யகண்ட வடிவாய், ஓங்கி நிறைந்தது கண்டாற் - பின்னர் -
ஒன்றென் றிரண்டென் றுரைத்திட லாமோ. சங்கர (உக)

என்று மழியுமிக் காயம் - இத்தை - ஏதுக்கு மெய்யென் றிரு
ந்தீருலகீர், ஒன்று மறியாத நீரோ - யமன் - ஓலைவந் தாற்சொ
ல்ல வுத்தர முண்டோ. சங்கர (உஉ)

உண்டோ நமைப்போல வஞ்சர் - மலம் - ஊறித் ததும்பு
முடலைமெய் யென்று, கொண்டோ பிழைப்பதிங் கையோ -
அருட் - கோலத்தை மெய்யென்று கொள்ளவேண் டாவோ.
சங்கர (உங)

வேண்டா விருப்பும் வெறுப்பும் - அந்த - வில்லங்கத் தாலே
வினையுஞ் சனனம், ஆண்டா னுரைத்த படியே-சற்றும்-அலைசயா
திருந்துகொள் ளறிவாகி நெஞ்சே. சங்கர (உச)

அறிவாரு மில்லையோ வையோ - என்னை - யாரென் றறி யாத வங்கதே சத்தில், வறிதே காமத்தீவிற் சிக்கி - உள்ள - வான்பொரு ளோற்கவோ வந்தேனுன் றோழி. சங்கர (உரு)

வந்த வரவை மறந்து - மிக்க - மாதர்பொன் பூமி மயக்கத்தி லாழும், இந்த மயக்கினை யறுக்க - எனக் - கெந்தை மெய்ஞ் ஞான வெழில்வாள் கொடுத்தான். சங்கர (உசு)

வாளாருங் கண்ணியர் மோகம் - யம - வாதைக் கனலை வளர்க்குமெய் யென்றே, வேளா னவனுமெய் விட்டான் - என்னின் - மிக்கோர் துறக்கை விதியன்றோ தோழி. சங்கர (உஎ)

விதிக்கும் பிரபஞ்ச மெல்லாஞ் - சுத்த - வெயின்மஞ்ச ளென்னவே வேதாகமங்கள், மதிக்கு மதனைமதியார் - அவர் - மார்க்கந்துன் மார்க்கஞ்சன் மார்க்கமோ மானே. சங்கர (உஅ)

துன்மார்க்க மாதர் மயக்கம் - மனத் - தூயர்க்குப் பற்றறு சொன்னேன் சனகன், தன்மார்க்க நீதிதிட் டாந்தம் - அவன் - றானந்த மான சதானந்த னன்றோ. சங்கர (உகூ)

அன்றென்று மாமென்று முன்னோ - உனக் கானந்தம் வேண்டி னறிவாகிச் சற்றே, நின்றுற் றெரியு மெனவே - மறை - நீதியெம் மாதி நிகழ்த்தினன் றோழி. சங்கர (௩௦)

சங்கர சங்கர சம்பு - சிவ - சங்கர சங்கர சங்கர சம்பு.

திருச்சிற்றம்பலம்.

---

# அ க வ ல்.

திருவருண் ஞானஞ் சிறந்தருள் கொழிக்குங்
குருவடி வான குறைவிலா நிறைவே

நின்ற வொன்றே நின்மல வடிவே
குன்றாப் பொருளே குணப்பெருங் கடலே
ஆதியு மந்தமு மானந்த மயமாஞ்
சோதியே சத்தே தொலைவிலா முதலே
சீர்மலி தெய்வத் திருவரு ளதனாற்.
பார்முத லண்டப் பரப்பெலா நிறுவி
அண்டச முதலா மெண்டரு நால்வகை
ஏழு பிறவியிற் றுழா தோங்கும்
அனந்த யோனியி னினம்பெற் றல்க
அணுமுத லசல மான வாக்கையுங்
கணமுத லளவிற் கற்ப காலமுங்
கன்மப் பகுதித் தொன்மைக் கீடா
இமைப்பொழு தேனுந் தமக்கென வறிவிலா
ஏழை யுயிர்த்திரள் வாழ வமைத்தனை
எவ்வுட லெடுத்தா ரவ்வுடல் வாழ்க்கை
இன்ப மெனவே துன்ப மிலையெனப்
பிரியா வண்ண முரிமையின் வளர்க்க
ஆதர வாகக் காதலு மமைத்திட்
டேக மின்றியே தேகநா னென
அறிவு போலறி யாமை யியக்கிக்
காலமுங் கன்மமுங் கட்டுங் காட்டியே
மேலு நரகமு மேதகு சுவர்க்கமும்
மாலற வகுத்தனை யேலும் வண்ணம்
அமையாக் காதலிற் சமய கோடி
அறம்பொரு ளாதி திறம்படு நிலையிற்
குருவா யுணர்த்தி யொருவர்போ லனைவருந்
தத்த நிலையே முத்தி முடிவென
வாத தர்க்கமும் போத நூல்களும்
நிறைவிற் காட்டியே குறைவின்றி வயங்க
அங்கங்கு நின்றனை யெங்கு மாகிச்

சமயா தீதத் தன்மை யாகி
இமையோர் முதலிய யாவரு முனிவருந்
தம்மைக் கொடுத்திட் டெம்மை யாளென
ஏசற் றிருக்க மாசற்ற ஞான
நலமுங் காட்டினை ஞான மிலேற்கு
நிலையுங் காட்டுத னின்னருட் கடனே.

திருச்சிற்றம்பலம்.

---

# வ ண் ண ம்.

அருவென் பனவுமன்றி யுருவென் பனவுமன்றி
யகமும் புறமுமன்றி முறைபிறழாது
குறியுங் குணமுமன்றி நிறைவுங் குறைவுமன்றி
மறையொன் றெனவிளம்ப விமலமதாகி

அசலம் பெறவுயர்ந்து விபுலம் பெறவளர்ந்து
சபலஞ் சபலமென்று ளறிவினர்காண
ஞானவெளியிடை மேவுமுயிராய்— (ஹ)

அனலொன் றிடவெரிந்து புகைமண் டிடுவதன்று
புனலொன் றிடவமிழ்ந்து மடிவிலதூதை
சருவும் பொழுதுயர்ந்து சலனம் படுவதன்று
சமர்கொண் டழிவதன்றெ ரியல்பினதாகும்

அவனென் பதுவுமன்றி யவளென் பதுவுமன்றி
யதுவென் பதுவுமன்றி யெழில்கொடுலாவு
மாறுநிலையறி யாதபடியே— (வ)

இருளென் பதுவுமன்றி யொளியென் பதுவுமன்றி
யெவையுந் தனுளடங்க வொருமுதலாகு
முளதென் பதுவுமன்றி யிலதென் பதுவுமன்றி
யுலகந் தொழவிருந்த வயன்முதலோர்கள்

அவருங் கலைகொண்டு சமயங்களில் விழுந்து
சுழலும் பொழுதிரங்கி யருள்செயுமாறு
கூறரியசக மாயையறவே— (வஹ)

உளதென் பதையிகழ்ந்த வறிவின் றிரளினின்று
மறிவொன் றெனவிளங்கு முபயமதாக
வறியுந் தரமுமன்று பிறியுந் தரமுமன்று
வசரஞ் சரமிரண்டி னொருபடியாகி

எதுசத் ததுநிறைந்த தெதுசிந் தனையிறந்த
தெதுமங் கலசுபங்கொள் சுகவடிவாகும்
யாதுபரமதை நாடியறிநீ— (உ)

பருவங் குலவுகின்ற மடமங் கையர்தொடங்கு
கபடந் தனில்விழுந்து கெடுநினைவாகி
வலையின் புடைமறிந்த மறியென் றவசமுண்டு
வசனந் திரமுமின்றி யவரிதழூறல்

பருகுந் தொழிலிணங்கி யிரவும் பகலுமின்சொல்
பகரும் படிதுணிந்து குழலழகாக
மாலைவகைபல சூடியுடனே— (உஹ)

பதுமந் தனையிசைந்த முலையென் றதையுகந்து
வரிவண் டெனவுழன்று கலிலெனவாடுஞ்
சிறுகிண் கிணிசிலம்பு புனைதண் டைகண்முழங்கு
மொலிநன் றெனமகிழ்ந்து செவிகொள நாசி

பசமஞ் சளின்வியந்த மணமுந் திடமுகந்து
பவமிஞ் சிடவிறைஞ்சி வரிசையினூடு
காலின்மிசைமுடி சூடிமயலாய்— (ஆ)

மருளுந் தெருளும்வந்து கதியென் பதைமறந்து
மதனன் சலதிபொங்க விரணமதான
வளிபுண் டனைவளைந்து விரல்கொண் டுறவளைந்து
சுரதஞ் சுகமிதென்று பரவசமாகி

மருவுந் தொழின்மிகுந்து தினமுந் தினமும்விஞ்சி
வளரும் பிறைகுறைந்த படிமதிசோர
வானரமதென மேனிதிரையாய்— (ஆஅ)

வயதும் படவெழுந்து பிணியுந் திமிதிமென்று
வரவுஞ் செயலழிந்து ளிருமலுமாகி
யனமுஞ் செலுதலின்றி விழியுஞ் சுடர்களின்று
முகமுங் களைகளின்று சரியென நாடி

மனையின் புறவிருந்த வினமுங் குலைகுலைந்து
கலகஞ் செயவிருண்ட யமன்வரும்வேளை
யேதுதுணைபழி காரமனமே. (க)

ஆ பாடல் - க,சருஉ.

## தாயுமானசுவாமிகள்பாடல்.

முற்றுப்பெற்றது.



தாயுமானசுவாமிகளுடைய மாணாக்கராகிய

அருளையரென்பவர்

அந்தச்சுவாமிகளைத் துதிசெய்த

# அருள்வாக்கியவ்வகவல்.

திருவளர் கருணைச் சிவானந்த பூரணம்
ஒருவரு மறியா வொருதனிச் சித்து
நவந்தரு பேதமாய் நாடக நடித்துற்
பவந்தனை நீக்கிப் பரிந்தருள் பராபரங்
கண்ணுங் கருத்துங் கதிரொளி போல
நண்ணிட வெனக்கு நல்கிய நன்மை
ஒன்றாய்ப் பலவா யொப்பிலா மோனக்
குன்றாய் நிறைந்த குணப்பெருங் குன்றம்
மண்ணையும் புனலையும் வளியையுங் கனலையும்
விண்ணையும் படைத்த வித்திலா வித்துப்
பந்த மனைத்தையும் பாழ்பட நூறியென்
சிந்தையுட் புகுந்த செழுஞ்சுடர்ச் சோதி
வின்னொளி ஞானம் விளங்கிய மேலோர்
தொன்னெறி கொண் டுண்ணக் குறைவிலா நிறைவுந்
தாட்டா மரைமலர்த் தாணினைப் பவர்க்குக்
காட்டா வின்பங் காட்டிய கதிநிலை
வாக்கான் மனத்தான் மதித்திட வரிதென
நோக்கா திருக்க நோக்கிய நோக்கம்
ஆதியா யறிவா யகண்டமா யகண்ட
சோதியாய் விரிந்து துலங்கிய தோற்றம்
பரவெளி தன்னிற் பதிந்தவென் னுளத்தின்
விரவி விரவி மேற்கொளும் வெள்ளந்

சுட்டுக் கடங்காச் சோதி யடியார்
மட்டுக் கடங்கும் வான்பெருங் கருணை
எல்லைக் கடங்கா வேகப் பெருவெளி
தில்லைப் பொதுவிற் றிருநடத் தெய்வம்
வாதவூ ரெந்தையை வரிசையாய் விழுங்கும்
போதவூர் மேவுகர்ப் பூர விளக்கு
சுகரை யகண்டத் தூவெளி யெல்லாந்
திகழவே காட்டுஞ் சின்மய சாக்ஷி
செழுந்தமி ழப்பரைச் சிவலிங்க மாகி
விழுங்கிய ஞான வித்தக வேழம்
எழிறரு பட்டினத் திறைவரை யென்றும்
அழிவிலா விலிங்க மாக்கிய வநாதி
சாந்த பூமி தண்ணருள் வெள்ளம்
ஆர்ந்த நீழ லசையாக் ககனம்
பரவுவார் நெஞ்சிற் பரவிய மாட்சி
இரவுபக லற்ற வேகாந்தக் காட்சி
ஆட்சிபோ லிருக்கு மகிலந் தனக்குச்
சாக்ஷியா யிருக்குந் தாரகத் தனிமுதல்
ஆணும் பெண்ணு மலியுமல்லா தோர்
தாணுவாய் நின்ற சத்தாந் தனிச்சுடர்
எள்ளு மெண்ணெயு மெப்படி யப்படி
உள்ளும் புறம்பு முலாவிய வொருபொருள்
அளவிலா மதந்தொறு மவரவர் பொருளென
உளநிறைந் திருக்கு மொருபொற் பணதி
துள்ளு மனப்பேய் துடிக்கத் தறிக்கக்
கொள்ளு மோனவாள் கொடுத்திடு மரசு
பெரிய பேறு பேசாப் பெருமை
அரிய வுரிமை யளவிலா வளவு
துரிய நிறைவு தோன்று வதீதம்

விரியுநல் லன்பு விளைத்திடும் விளைவு
தீராப் பிணியாஞ் செனன மறுக்க
வாரா வரவாய் வந்தசஞ் சீவி
ஆலைக் கரும்புபா லமுதக் கட்டிநீள்
சோலைக் கனிபலாச் சுளைகத லிக்கனி
பாங்குறு மாங்கனி பாறேன் சருக்கரை
ஓங்குகற் கண்டுசேர்த் தொன்றுக் கூட்டி
அருந்திய ரசமென வறிஞர் சமாதியிற்
பொருந்திய வின்பம் பொழிசிற் சுகோதயம்
எங்கணு நிறைந்த வியல்பினை யெனக்குச்
செங்கையால் விளங்கத் தெரித்தமெய்த் தேசிகன்
தன்னையறி வித்துத் தற்பர மாகி
என்னுளத் திருந்தரு ளேக நாயகன்
அடிமுடி யில்லா வரும்பொரு டனக்கு
முடியடி யிதுவென மொழிந்திடு முதல்வன்
மெய்யலான் மற்றவை மெய்யல வெல்லாம்
பொய்யென வறியெனப் புன்னகை புரிந்தோன்
அருளும் பொருளு மபேதமா யிருந்தும்
இருகிற னென்னு மியலுமுண் டென்றோன்
அருளெனக் குண்டே லருளும் வெளிப்படும்
பொருண்மயந் தானே பொருந்துமென் றுரைத்தோன்
சத்தசத் திரண்டு தன்மையுந் தானே
ஒத்தலாற் சதசத் துனக்கென வுரைத்தோன்
ஆணவ மருவிடி னருளுறு தென்னக்
காணரு நேர்மையாற் காணவே யுரைத்தோன்
சென்மமுள் ளளவுந் தீரா திழுக்குங்
கன்மம் விடாதெனக் காட்டிய வள்ளல்
உளதில தெனவு முறுதலான் மாயை
வளமில தெனவும் வகுத்தினி துரைத்தோன்

இல்லறத் திருந்து மிதய மடக்கிய
வல்லவன் ருனே மகாயோகி யென்றேன்
துறவறத் திருந்துஞ் சூழ்மனக் குரங்கொன்
றறவகை யறியா னஞ்ஞானி யென்றேன்
இறவா மனந்தா னிறக்க வுணர்த்திப்
பிறவா வரந்தரும் பேரறி வாளன்
அத்தன தருளா லனைத்தையு மியக்குஞ்
சுத்தமா மாயையின் றேற்றமென் றுரைத்தோன்
இருண்மல மகல விசைந்தது நிலழுத்தும்
பொருளருட் டிரோதைப் பொற்பெனப் புகன்றேன்
வீறு சிவமுதல் விளம்பிய படியே
ஆறு மநாதியென் றறிஞருக் குரைப்போன்
கொல்லா விரதங் குவலயத் தோர்கள்
எல்லாம் பெறுமினென் றியம்பிய தயாநிதி
தருமமுந் தானமுந் தவமும் புரிபவர்க்
குரிமையா யவரோ டுறவு கலப்பவன்
தன்னுயிர் போலத் தரணியின் மருவிய
மன்னுயி ரனைத்தையும் வளர்த்திடும் வேந்தன்
களவுவஞ் சனைகள்செய் கரும்ிக டமக்குந்
தெளிவுவந் துறவருள் செய்திடுந் திறத்தோன்
தான்பெறும் பேறு சகமெலாம் பெறவே
வான்பெருங் கருணை வழங்கிய மாரி
தஞ்சமென் றடைந்த தாபதர் தம்மை
அஞ்சலென் ருளு மறிஞர் சிகாமணி
சீவகோ டிகளுஞ் சித்தகோ டிகளும்
யாவரும் புகழ யாவையு முணர்ந்தோன்
யானென தென்று விறைவனெம் பெருமான்
தானவ னாகிய தலைவனெங் கோமான்
அருண கிரியார்க் காறு முகன்சொலும்

பொருணல மல்லது பொருளென மதியான்
பூத முதலாப் பொலிந்திடு நாத
பேதமுங் கடந்த பெருந்தகை மூர்த்தி
மூலா தார முதலா யுள்ள
மேலா தாரமும் வெறுவெளி கண்டவன்
மண்டல மூன்றிலு மன்னிய வுருவிலுங்
கண்டவை யத்திலுங் கடவுளாய் நின்றோன்
பகர்சம யந்தொறும் பரமே யிருந்து
சுகமும் புரியுந் தொழிலெனச் சொன்னோன்
பேத வபேத பேதா பேத
போத மிதுவெனப் புகன்றிடும் புண்ணியன்
அதுநா னெனவே யாற்றிடு மனுபவஞ்
சதுர்வே தாந்தத் தன்மையென் றுரைத்தோன்
அல்லும் பகலு மறிவா ரோர்க்குச்
சொல்லும் பொருளுஞ் சுமையெனச் சொன்னோன்
சுதனே குருவாஞ் சுவாமிநா யகற்கெனின்
அதிகமெய்ஞ் ஞான மல்லவோ வென்றோன்
நேசயோ கத்துறு நிருபரெல் லாந்தொழும்
இராச யோகத்திறை யிராச யோகத்தான்
பொறுமை தெளிவு புனித வாசாரம்
மறுவிலா வண்மை வார மியற்கை
தண்ணமர் சாந்தந் தயங்கிய கீர்த்தி
எண்ணெண் கலைபயி லிணையிலாக் கல்வி
நல்ல விரக்க நடுநிலை சத்தியம்
இல்லை யென்னுமவ் லெவர்க்குந் தருங்கொடை
நற்குண மெல்லா நண்ணிய பெருந்தகை
சிற்குண வாரி திருவருட் செல்வன்
கரமே லெடுத்துக் கருத்துற வணங்கிப்
பரமே யுனக்குப் பரமெனப் பகர்ந்தோன்

ஆலடி மேவு மரசினை யடுத்தே
சீலமெய்ஞ் ஞானந் தெளிந்தன னெனவுஞ்
சித்த மௌனி திடசித்த மாக
வைத்த நிலையின் வளர்ந்தன னெனவும்
மூலன் மரபின் முளைத்த மவுனிதன்
பாலன்யா னெனவும் பரிவொடும் பகர்ந்தோன்
வடமொழி யியற்கையின் மகிமையை யுணர்ந்து
திடமுற முப்பொருட் டிறத்தையுந் தெளிந்து
கண்டமு தென்னக் கனிரச மென்னத்
தண்டமிழ் மாரி தன்னைப் பொழிந்து
சித்தியு முத்தியுஞ் சிறந்தருள் கொழிக்கும்
நித்திய நிரஞ்சன நிராலம்ப நிறைவைப்
பாடியு நாடியும் பணிந்தெழுந் தன்பால்
ஆடியு மரற்றியு மகங்குழை வெய்தியும்
உடலங் குழைய வுரோமஞ் சிலிர்ப்பப்
படபடென் றுள்ளம் பதைத்துப் பதைத்துப்
பாங்குறு நெட்டுயிர்ப் பாகிப் பரதவித்
தேங்கி யேங்கி யிரங்கி யிரங்கி
ஓய்ந்தயம் பரம்போ லொடுங்கியே சிறிதும்
ஏய்ந்த விழிக ளிமைப்பது மின்றிச்
சோர்ந்து சோர்ந்து துவண்டு துவண்டுமெய்
ஆர்ந்த வன்போ டவசமுற் றடிக்கடி
உண்ணடுக் குறவே யுருகியே சற்றுத்
தண்ணமர் மொழியுந் தழுதழுத் திடவே
உள்ளும் புறம்பு மொருமித் துருகி
வெள்ள நீர்போல் விழிநீர் பெருக்கிக்
கன்று பசுவைக் கருதிக் கதறிச்
சென்றுசென் றோடித் திகைப்பதுபோல
என்புநெக் குடைய விருகரங் குவித்துப்

புன் புலால் யாக்கை பொருந்தா தினியென
உணர்ந் துணர்ந் தன்பா யுவகைமேற் கொண்டினிக்
கணம்பிரி யேனெனக் கருதியே குறித்துத்
திருவுரு வெல்லாந் திருநீ றிலங்க
இருகர நளின மியன்முடி குவித்துப்
பூரண சந்திரன் போலொளி காட்டுங்
காரண வதனங் கவின்குறு வெய்ர்வுற
இலங்கிலா வெனவே யிலங்கிய சிறுநகை
தலைதலை யென்னத் தயங்கி யெழில்பெற
இத்தன்மை யெல்லா மிசைந்து மிவனருட்
சித்தெனச் சிவகதி தேர்ந்தவ ருரைப்பப்
பாத்திர மாடப் பரிவுட னுடிச்
சாத்திரங் காட்டித் தயவுசெய் தருளும்
வல்லவ னெனவே மன்னுயிர்க் காக
எல்லையி லன்ப னிவனென விளங்கி
ஈன வுலகத் தியற்கைபொய் யென்றே
ஞான நூன் மெய்யென நவின்றினி திரங்கிக்
கேவல சகலங் கீழ்ப்பட மேலாய்
மேவருஞ் சுத்த மெய்யினை நல்க
அருளே யுருவுகொண் டவனியில் வந்த
பொருளே யிவனெனப் பொலிந்திடும் புனிதன்
சைவஞ் சிவனுடன் சம்பந்த மென்பது
மெய்வளர் ஞானம் விளக்குமென் றிசைத்தோன்
கதிர்விழி யொளியுறக் கலத்தல் சித்தாந்த
விதிமுறை யாமென விளம்பிய மேலோன்
முடிவினி லாகம முறைமையி னுண்மையை
அடியரைக் குறித்துரைத் தருளிய வண்ணல்

சிதம்பர நேர்மை திறமா வுரைத்திறை
பதம்பர வெனப்பகர் பரமமெய்ஞ் ஞானி
முத்திபஞ் சாக்கர முறைமையி லயிக்கியஞ்
சத்திய மிதுவெனச் சார்ந்தவர்க் குரைத்தோன்
அஞ்செழுத் துள்ளே யனைத்தையுங் காட்டியென்
னெஞ்சமுத் தியகுரு நீதி மாதவன்
எல்லா நிறைந்த விறைவன் செயலெனக்
கல்லா வெனக்குங் கருணைசெய் கடவுள்
குருவரு ளாலே கூடுவ தல்லாற்
றிருவரு ளுறுமெனத் தெரிந்திட வுரைத்தோன்
குருவுரு வருளெனக் கொண்டபின் குறையாப்
பொருண்மய மாமெனப் புகன்றிடு போதன்
எந்த மூர்த்திகளையு மெழிற்குரு வடிவெனச்
சிந்தையிற் றியக்கறத் தேர்ந்தவர்க் குரைத்தோன்
சதாசிவ மென்றபேர் தான்படைத் ததுதான்
எதாவதே பொருளென் றெடுத்தெடுத் துரைத்தோன்
கல்லானை கன்னல் கவர்ந்திடச் செய்தவன்
எல்லாம் வல்லசித் தெம்மிறை யென்றோன்
எவ்வுயிர் தோறு மிறைமே வியதிறஞ்
செவ்விய பிரம்படி செப்பிடு மென்றோன்
எவ்வண மெவரெவ ரிசைத்தன ரவரவர்க்
கவ்வண மாவனெம் மானென வறைந்தோன்
ஒருபா ணனுக்கே யொருசிவ னாட்படின்
வருமடி யார்திறம் வழுத்தொணா தென்றோன்
சிவ னடியாரைச் சிவனெனக் காண்பவன்
எவனவன் சிவனே யென்றெடுத் துரைத்தோன்
விருப்பு வெறுப்பினை வேரறப் பறித்துக்

கருப்புகா தென்னைக் காத்தருள் செய்தோன்
இருசொல் லுரையா தியானின்ப மெய்த
ஒருசொல் லுரைத்த வுயர்குண பூதரன்
அத்துவா மார்க்க மாறையு மகற்றித்
தத்துவா தீதத் தன்மையைத் தந்தோன்
திருமகன் மருவிய திகழ்வள மறைசையில்
வருமுணர் வாளன் மருளிலா மனத்தான்
எண்ணிய வெண்ணமெல் லாந்தெரிந் தெனக்குத்
தண்ணருள் செய்தவன் குருவு மானவன்
ஒருமொழி பகர்ந்த வுதவியா லவன்றன்
இருபது முப்போ திறைஞ்சிவாழ்த் துவனே.

அருள்வாக்கியவகவல் முற்றுப்பெற்றது.

## தாயுமானசுவாமிகள்

# பாடலகராதி.

